# உடலுறவு

## இஸ்லாமியக் கையேடு

**முஹம்மது இப்னு ஆதம் அல்-கவ்ஸரி**

தமிழாக்கம்

**புன்யாமீன்**



மாற்றுப் பிரதிகள்

முதல் பதிப்பு 2009



வெளியீடு: மாற்றுப் பிரதிகள்

விற்பனை உரிமை: த பாபிரஸ், 1204 கருப்பூர் சாலை, புத்தாநத்தம் 621310, திருச்சி மாவட்டம், இந்தியா. தொலைபேசி: 04332 273444.

நூல் வடிவம்: த பாபிரஸ், அச்சாக்கம்: அடையாளம் பிரஸ், இந்தியா.

ISBN 978 81 908551 8 1

விலை: ₹ 120

இலங்கையில் விநியோகர்: தார் அல்-இஹ்ஸான் வெளியீடு, காத்தான்குடி, இலங்கை
மின்னஞ்சல்: daralihsandotcom@gmail.com

*udaluravu: islaamiyak kaiyedu* is the Tamil translation of *Islamic Guide to Sexual Relations* in English by Muhammad Ibn Adam Al-Kawthari, First edition: 2009, Published by Maatrup Pirathikal. email: maatruppirathikal@gmail.com

## நூலாசிரியர் பற்றி

**முஃப்தி முஹம்மத் இப்னு ஆதம் அல்-கவ்ஸரி**, மரபுரீதியாகப் பயிற்றுவிக்கப்பட்ட இஸ்லாமிய அறிஞர். உலகின் பல்வேறு இடங்களில் கல்வி பெற்றவர். இங்கிலாந்திலுள்ள லெய்ஸ்டரில் பிறந்து, தம்முடைய முன்மாதிரித் தந்தை ஷெய்கு மௌலானா ஆதமின் வழிகாட்டுதலில் வளர்ந்தவர். அவர் மிக இளம் வயதிலேயே இஸ்லாம்குறித்து கற்கத் தொடங்கி, ஒன்பது வயதில் குர்ஆனை மனனம் செய்தார். முதலில், இங்கிலாந்தில் பெரியிலுள்ள தாருல் உலூமில் அரபு மொழியும் பல்வேறு மரபுரீதியான இஸ்லாமிய அறிவியல்களையும் படித்தார். அவருடைய ஆசிரியர்கள் பலருள் முக்கியமாகக் குறிப்பிடப்படுபவர், ஷெய்கு முஹம்மது யூசுஃப் முதாலா. மேலும், கவ்ஸரி முதன்மையான ஆறு நபிமொழித் தொகுப்புகள் உட்பட பல்வேறு நூல்களில் பாட அதிகாரத்துவம் *(இஜாஸா)* பெற்றார்.

தாருல் உலூமில் பட்டம் பெற்றபின், அவர் பாகிஸ்தானில் உள்ள கராச்சிக்குப் பயணமானார். அங்கே, சமகாலத்தில் வசித்துக்கொண்டிருக்கும் மாபெரும் அறிஞர்களுள் ஒருவரான நீதிபதி (ஓய்வு) முஃப்தி முஹம்மது தகீ உஸ்மானியிடமும் வேறு சிலரிடமும் பயின்றார். பின்னர், அவர் சிரியாவில் உள்ள டெமஸ்கஸ் நகருக்குச் சென்று, அங்கே உள்ள மாபெரும் ஆலிம்களிடம் கற்று தம் பட்டறிவையும் படிப்பறிவையும் விரிவுபடுத்திக்கொண்டார். அங்கே ஷெய்கு அப்துர் ரஸ்ஸாக் அல்-ஹலபி, ஷெய்கு டாக்டர் அப்துல் லதீஃப் ஃபர்ஃபூர் அல்-ஹஸனி மற்றும் பிறரிடமிருந்து *இஜாஸா* பெற்றுக்கொண்டார்.

ஆசிரியருடைய பிற படைப்புகள்: *வணிகப் பங்குகள், எளிதாக்கப்பட்ட ஸகாத் விதிகள், இஸ்லாத்தில் குடும்பக் கட்டுப்பாடும் கருக்கலைப்பும்.* மேலும் அவர், ஷெய்கு முஹம்மது ஸகரிய்யா காந்தலவியின் *உஜூப் இஃபா அல்-லிஹ்யாவையும்* (தாடி வளர்ப்பதன் அவசியம்) ஷெய்கு கலீல் அஹ்மது சஹாரன்பூரியின் *மபாஹிஸ் ஃபீ அகாயித் அஹ்ல் அல்-சுன்னாவையும் (அஹ்லுஸ் ஸுன்னாவின் நம்பிக்கைக் கொள்கைகள் குறித்து கலந்துரையாடல்)* அரபியில் விமர்சன ஆய்வுடனும் அடிக்குறிப்புகளுடனும் வெளியிட்டுள்ளார். மேலும், தாருல் இஃப்தா (www.daruliftaa.com) சன்னீபாத் (www.sunnipath.com) ஆகிய இணைய தளங்களில் விரிவான, நன்கு ஆராயப்பட்ட *ஃபிக்ஹு* தொடர்பான

அவருடைய கட்டுரைகள் புகழ்பெற்றவை. கவ்ஸரி தற்பொழுது லெய்ஸ்டரில் வசித்துவருகிறார். அங்கே, ஜாமியா உலூமுல் குர்ஆனில் பல்வேறு மரபுரீதியான இஸ்லாமிய அறிவியல்களைப் பயிற்றுவிக்கும் ஆசிரியராகப் பணிபுரிகிறார். இஸ்லாமியச் சட்டவியல் பயிலகத்தில் (தாருல் இஃப்தா) மக்களுடைய கேள்விகளுக்கும் பிரச்சினைகளுக்கும் பதிலளித்து சேவையாற்றி வருகிறார்.

# பொருளடக்கம்

# நன்றி

இந்நூல் தமிழில் வெளிவர முகமறியா நட்புடன் பெரிதும்
முயற்சி செய்தவர் முஹம்மது இஹ்சானுல்லாஹ்,
பிரதிபலன் பார்க்காது அனுமதியளித்தவர் நூலாசிரியர்
முஹம்மது இப்னு ஆதம் அல்-கவ்ஸரி,
மொழியாக்கப் பணியில் தன்னைக் கரைத்து வாழ்பவர்
பொறியாளர் புன்யாமீன்,
இந்நூலைச் செப்பனிட உதவியவர் ஈரமனசுக்காரரும்
சமரசம் இதழின் பொறுப்பாசிரியருமான சிராஜுல்ஹஸன்,
அனைவருக்கும் நன்றி.

# முன்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன். அனைத்துப் புகழும் அகிலங்களின் அதிபதியான அல்லாஹ்வுக்கே. மேலும், அகிலத்தாருக்கு அருட்கொடையான இறைத்தூதர் முஹம்மது அவர்கள்மீதும் அவரின் குடும்பத்தார் அனைவரின் மீதும் அவரின் தோழர்கள்மீதும் இறுதித் தீர்ப்பு நாள்வரை அவரின் அடிச்சுவட்டைப் பின்பற்றும் நல்லடியார்கள் மீதும் சாந்தியும் அருளும் உண்டாகட்டும்.

ஏறக்குறைய ஐந்தாண்டுகளுக்கு மேலாக பொதுமக்களின் கேள்விகளுக்கு நான் பதிலளிக்கையில், கணவன்-மனைவி நெருக்கம், உடலுறவு (பாலுறவு)* ஆகியவை குறித்த இஸ்லாமியச் சட்டதீர்ப்பை அறிந்து கொள்ள பலரும் விரும்புவதை அறிய நேரிட்டது. மின்னஞ்சலில் – அது ஒரு கருத்துப் பரிமாற்ற ஊடகம் எனும் வகையில் – ஒப்பீட்டளவில் தங்களை அடையாளப்படுத்திக்கொள்ளாமல் தைரியமாக மனம் திறந்து வினாக்கள் எழுப்பத் தொடங்கினர். கூச்சமும் பிறரின் பழிப்புக்கு ஆளாகும் அச்சமும் இன்றி வினாக்கள் வந்தன.

அதே கேள்விகள் மீண்டும், மீண்டும் கேட்கப்பட்டன. ஆனால், பல்வேறு விதங்களில் கேட்கப்பட்டன. இதனால் நான் அவற்றைப் பதிவு செய்து வைக்க நேரிட்டது. அதிலிருந்து, முஸ்லிம்களில் பலர் பாலுறவு (உடலுறவு) தொடர்பான இஸ்லாமியச் சட்டங்களையும் ஒழுங்குகளையும் அறியாதிருக்கின்றனர் என்பது விளங்குகிறது. பலர் தங்கள் மணவாழ்வை இஸ்லாமிய போதனைகளுக்கு இணங்க அமைத்துக் கொள்ள விரும்புகின்றனர்; அவற்றைக் குறித்து அறிந்துகொள்ளும் ஆர்வம் பெற்றுள்ளனர். எனினும், ஓர் அறிஞரிடம் நேரடியாகக் கேட்பதிலுள்ள கூச்சம் அவர்களைத் தடுத்துவிடுகிறது. ஆகவே, முஸ்லிம்கள் குர்ஆன், 'சுன்னாவின் போதனைகளைப் பின்பற்றி வாழ

* உடலுறவு/பாலுறவு: ஆண்-பெண் இருபாலினரும் பரவசநிலைக்கான ஆசையுடன் அணுகும் எல்லாச் செயல்பாடுகளையும் பொதுவாக இச்சொற்கள் குறிக்கின்றன. இதில் முன்விளையாட்டு (foreplay), புணர்ச்சி (actual play), புணர்ச்சிக்குப்பின் (after play) போன்ற அனைத்து நிலைகளும் அடங்கும். இதை ஆங்கிலத்தில் sexual relations என்பர். *(ப-ர்)*

வேண்டுமெனில், இந்தத் தலைப்பில் ஒரு முழுமையான நூல் நிச்சய மாகத் தேவை என்பதை உணர்ந்தேன். இத்தேவையின் மிகுதியினாலும் தம்பதிகளுக்கு இவ்விஷயம் குறித்த முக்கியத்துவத்தினாலும் நான் ஒரு விரிவான, முழுமையான நூலைத் தொகுக்கத் தொடங்கினேன். அந்த முயற்சியில், என்னிடம் கேட்கப்பட்ட கேள்விகள் தொடர்பான குறிப்புகளை ஆய்வு செய்தேன். இதன் பலனாக, இதோ உங்கள் கைகளில் தவழும் நூல் உருவானது. எல்லாப் புகழும் இறைவனுக்கே.

இந்நூல், பாலுறவு குறித்த விஷயங்களை நேரடியாக அணுகி, தம்பதியருக்கு அல்லாஹ்வின், அவனுடைய அன்புத் தூதரின் போதனைகள் குறித்து விளக்க முற்படுகிறது. இதன் மூலம், அவர்கள் இணைந்து மகிழும் அதேவேளை, அதற்காக இறைவனின் நற்கூலியை யும் பெற உதவுகிறது. பாலுறவுக்குப் பின்னணியில் இருக்கவேண்டிய சரியான எண்ணங்கள் யாவை? தம்பதியர் எந்தெந்த விஷயங்களைச் செய்ய அனுமதிக்கப்பட்டுள்ளனர்? எந்தெந்த விஷயங்களைத் தவிர்த்தல் வேண்டும்? உடலுறவுக்குத் தயாராவது எப்படி? முன்விளையாட்டு (பாலுணர்வூட்டல்), புணர்ச்சி மற்றும் புணர்ச்சிக்குப் பிந்தைய கணங் களுக்கான விதிகளும் ஒழுங்குகளும் யாவை? திருமண முதல் இரவை மகிழ்ச்சியாகக் கழிப்பதற்குக் கச்சிதமான வழி என்ன? என்பன உட்பட பல கேள்விகளுக்கு இப்புத்தகத்தில் பதிலளிக்கப்படுகின்றன. மேலும், நவீனகால விஷயங்களான கட்டிப்போடுதல், ஆண்-பெண் மாற்று உடையணிதல், பாலுறவு சாதனங்களைப் பயன்படுத்துதல், ஆபாசப் படங்களைப் பார்த்தல், வாய்வழி உறவு, தொலைப்பேசி வழியாக பாலுறவு போன்ற பலவற்றைக் குறித்து விரிவாக அலசப்படுகின்றன. இவை யாவும் குர்ஆன், சுன்னாவுடைய போதனைகளின் அடிப்படை யிலும்; இஸ்லாமியச் சட்டத்தின் நான்கு சிந்தனாவழிகளின் குறிப்பு நூல்கள், மரபுகால மற்றும் சமகால அறிஞர்களின் பிற நூல்கள் ஆகியவற்றின் அடிப்படையிலும் அமைந்திருக்கின்றன.

இந்த நூல், நாம் எடுத்துள்ள பாடத்தலைப்பின் முக்கியத்துவத்தை யும் அதன்பால் என் அணுகுமுறையையும் விளக்கும் முன்னுரையுடன் தொடங்குகிறது. அதைத் தொடர்ந்து ஒன்றன்பின் ஒன்றாக வரும் இயல்கள், உடலுறவுகுறித்து ஒவ்வொரு கூறாக எடுத்துக்கொண்டு அவற்றைச் சற்று ஆழமாக அலசுகின்றன. நூலின் பலனை மேம்படுத்தும் வகையில் எல்லா மேற்கோள்களுக்கும் குறிப்புகள் வழங்கப்பட்டுள்ளன. அதில் தொகுதி எண், பக்க எண், ஹதீஸ் (நபிமொழி)[2] எண் ஆகிய

[1, 2] *ஹதீஸ்:* முஹம்மது நபியின் சொல், செயல், சமிக்ஞையாகும். *சுன்னா:* முஹம்மது நபியின் வாழ்க்கை முறை. இச்சொற்கள் முறையே நபிமொழி, நபிவழி என மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. (ப-ர்)

யாவும் உள்ளன. அதேபோல், தேவையுள்ள இடங்களிலெல்லாம் மூலச் சொற்களையும் கருத்தாக்கங்களையும் விளக்கும் குறிப்புகள் சேர்க்கப்பட்டுள்ளன. புத்தகத்தின் இறுதியில், ஒரு முடிவுரையும் ஒரு விவரமான துணை நூல்கள் பட்டியலும் இடம்பெற்றுள்ளன. மேலும், பயன்படுத்தப்பட்ட கலைச்சொற்களும், மேற்கோள்காட்டப்பட்ட அறிஞர்களின் பெயர்களும் அடங்கிய சுட்டியும் தரப்பட்டுள்ளன.

இந்த நூலை எழுத வலிமையும் திறனும் தந்தருளிய அல்லாஹ் வுக்கே நன்றியுரைக்கிறேன். மேலும், என் பெற்றோர்களுக்கும் ஆசிரியர் களுக்கும் குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் நன்றிக்கடன்பட்டிருக் கிறேன். இவர்களில் எவரும் இப்புத்தகத்தை உருவாக்கும் கட்டங் களில் நேரடியாகப் பங்குபெற்றிருக்கவில்லை என்றாலும், இவர்களின் அன்பும் ஆதரவும் பிரார்த்தனையும் இன்றி இதுபோன்ற நூல் ஒன்றை என்னால் தொகுக்க இயன்றிருக்குமா என்பது ஐயமே. அல்லாஹ் அவர்களுக்கு உரிய நற்கூலியைக் கொடுப்பானாக, ஆமீன்!

தென் ஆப்பிரிக்காவில் உள்ள டர்பனைச் சேர்ந்த ஷெய்கு முஃப்தி சுபைர் பயாத் (அல்லாஹ் அவரைப் பாதுகாக்கட்டும்) அவர்களுக்கு நன்றி உரித்தாக்குகிறேன். அவர் தம்முடைய இடைவிடாத அலுவல் களுக்கு மத்தியிலும் இந்த நூலின் கையெழுத்துப் பிரதி முழுவதை யும் சீர்தூக்கிப் பார்க்க நேரம் ஒதுக்கி, முக்கிய திருத்தங்களையும் ஆலோசனைகளையும் அளித்தார். அல்லாஹ் அவருக்கு நற்கூலி வழங்கி, அவருடைய வாழும் காலத்தில் வளம் அளித்து, அவர்மீது இம்மையிலும் மறுமையிலும் அருள்புரிய வேண்டுகிறேன். அடுத்து, துராஸ் வெளியீட்டகத்தின் சகோதரர் யஹ்யாவிற்கும் நன்றிக்கடன் பட்டுள்ளேன். அவர் தொடர்ந்து தந்த ஊக்கத்தாலும் தீர்க்கமான உறுதி யினாலும் நான் சதா விழிப்புடன் இருந்தேன். உயர்தர இஸ்லாமிய நூல்களை உருவாக்கும் அவரின் ஆசையையும் அதற்கான முனைப்பை யும் உழைப்பையும் அல்லாஹ் ஏற்றுக்கொள்ளப் பிரார்த்திக்கிறேன், ஆமீன்!

மேலும், இதில் எனக்கு ஏதாவது ஒரு வழியில் உதவி நல்கிய அனைவருக்கும் என் நன்றிகள். அவர்களின் பெயர்கள் இங்கு இடம் பெறாததால் அவர்களுடைய பங்களிப்பை நான் குறைத்து மதிப்பிடு வதாக எண்ணிவிடக் கூடாது. அவர்களுடைய நற்கூலி அல்லாஹ் விடத்தில் உள்ளது. அவன் தரும் நற்கூலி, நான் கூறும் நன்றியுரையை விஞ்சியது:

> *நிச்சயமாக அல்லாஹ்விடம் இருப்பதே உங்களுக்குச் சிறந்ததாகும், இதை நீங்கள் அறிந்துகொள்வீர்கள் எனில். (குர்ஆன்16: 95)*

நான் என்னால் இயன்ற எல்லா முயற்சிகளையும் எடுத்து கணவன், மனைவிக்கு இடையிலான பாலுறவு (உடலுறவு) குறித்த விஷயங்களைத் தெளிவுபடுத்தவும் சீராக, முறையாக விளக்கவும் முயன்றுள்ளேன். இதில் ஏதேனும் நன்மை செய்திருப்பின், அது அல்லாஹ்விடமிருந்தே வந்துள்ளது. நான் தவறிழைத்திருப்பின், அது என்னிடமிருந்தும் ஷைத்தானின் தூண்டுதலிலிருந்துமே தோன்றியுள்ளது. அல்லாஹ் என்னை மன்னிக்குமாறும் எனது குற்றங்குறைகளைப் பொறுத்தருளுமாறும் இந்தப் புத்தகத்தை முற்றிலும் அவனுக்குரியதாகவே ஆக்குமாறும் நான் பிரார்த்திக்கிறேன்; வாசகர்களும் இவ்வாறு பிரார்த்திக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். ஆமீன்!

எமது இறுதிப் பிரார்த்தனை: 'புகழ் யாவும் அகிலங்களின் அதிபதியான அல்லாஹ்வுக்கே.'

முஹம்மது இப்னு ஆதம் அல்-கவ்ஸரி

தாருல் இஃப்தா
லெய்ஸ்டர், ஐக்கிய இராச்சியம்.

# அணிந்துரை

உணர்வை நுட்பமாகத் தொடக்கூடிய, ஆனால் மிகவும் தேவைப்படக் கூடிய தலைப்பில் இந்த அருமையான நூலை இயற்றியுள்ள ஆசிரியர், முஃப்தி முஹம்மத் இப்னு அல்-ஆதமுக்கு நல்வாழ்த்துகள். ஓர் இளைய, துடிப்பான, நம்பிக்கை ஒளிமிக்க இஸ்லாமிய அறிஞர் இந்த நூலாக்கத் திற்குத் தேவையான விவர நுணுக்கம் மிகுந்த ஆய்வுக்காக அளப்பரிய முயற்சிகள் எடுத்துள்ளார். நூலில் சுட்டுக் குறிப்புகளும் அடிக்குறிப்பு களும் வழங்கப்பட்டு அவை நன்கு உரைவிளக்கத்துடன் அமைந்துள்ளன.

சில ஆண்டுகளுக்குமுன், இந்தத் தலைப்பு குறித்து ஆங்கிலத்தில் நல்ல, ஆதாரப்பூர்வமான தகவல் தேவைப்படுவதைக் கண்டு, நான் ஒரு சிறிய அடக்கமான புத்தகத்தை எழுதினேன். 'பாலுறவு ஒழுங்குகள்' என்னும் தலைப்பிலான அந்தப் புத்தகம், இன்றுவரை பன்முறை அச்சிடப்பட்டுள்ளது. எல்லாப் புகழும் இறைவனுக்கே.

இப்பொழுது, மிகத் தெளிவான முறையில் இந்தத் தலைப்பு குறித்து முஃப்தி முஹம்மது (இறைவன் அவரைப் பாதுகாப்பானாக.) ஒரு விரிவான நூலை இயற்றியுள்ளார். அதில், இக்கால பாலுறவுப் பழக்கங்கள் உள்ளிட்ட பல சமகால விஷயங்களையும் அவற்றிற்கான இஸ்லாமியச் சட்டதீர்ப்புகளையும் உள்ளடக்கியிருக்கிறார். இந்த நூலை சீர்தூக்கிப் பார்த்து ஆலோசனைகள் வழங்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. என்னுடைய ஆலோசனைகளை நூலாசிரியர் அன்புடன் ஏற்றிருக்கிறார்.

இந்த நூல் பெரிதும் பயனளிக்கக்கூடியதாகவும் மிகவும் தகவல் பொதிந்ததாகவும் இருப்பதை அறியும் நான், இதை வருங்காலத் தம்பதிகள் அனைவரும், இல்லை தம்பதிகள் அனைவருமே படிக்க வேண்டும் என அழுத்தமாகப் பரிந்துரைக்கிறேன்.

இந்நூலாசிரியரின் உழைப்புக்கு அல்லாஹ் வெற்றிமகுடம் சூட்டி ஏற்றுக்கொள்ளட்டும்; அவர்தம் அறிவுப் புலமையைக்கொண்டு இந்தச் சமூகத்திற்குத் (உம்மாவிற்கு) தொடர்ந்து சேவையாற்றட்டும் எனப் பிரார்த்திக்கிறேன்.

முஃப்தி ஸுபைர் பயாத்

இயக்குநர்
தாருல் இஹ்ஸான் மையம்
டர்பன், தென்ஆப்பிரிக்கா.



# அறிமுகம்

இஸ்லாம் முழுமையான மார்க்கம் என்பது, வாழ்வின் ஒவ்வொரு துறைக்கும் அது வழங்கும் வழிகாட்டுதலில் பிரதிபலிக்கிறது. தூய்மை, வணக்க வழிபாடு, வணிகச் சட்டதிட்டங்கள், திருமணச் சட்டங்கள், சொத்துப் பங்கீடு சட்டங்கள் என அனைத்திலும் அது வெளிப்படுகிறது. மதத்தையும் அரசையும் பிரிப்பதற்கு இங்கு இடமில்லை. மாறாக, தன் போதனைகளின் முழுவீச்சையும் பின்பற்றுமாறு அது வலியுறுத்துகிறது. நம்பிக்கையின் அடிப்படைக் கூறுகள் *(அகாயித்)*, வணக்க வழிபாடுகள் *(இபாதாத்)*, நிதி கொடுக்கல் வாங்கல்கள் *(முஆமலாத்)*, சமுதாய, சமூக நடத்தை முறைகள் *(முஆஷரா)*, ஒழுக்க நெறிகள் *(அஃக்லாக்)* என அனைத்தும் அதில் அடங்கியுள்ளன.

இறைவன் கூறுகிறான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُواْ ادْخُلُواْ فِي السِّلْمِ كَآفَّةً وَلاَ تَتَّبِعُواْ خُطُوَاتِ الشَّيْطَانِ إِنَّهُ لَكُمْ عَدُوٌّ مُّبِينٌ

*நம்பிக்கைகொண்டவர்களே, நீங்கள் இஸ்லாத்திற்குள் முழுமையாக நுழைந்து விடுங்கள். ஷைத்தானின் அடிச்சுவட்டைப் பின்பற்றாதீர்கள். நிச்சயமாக அவன் உங்களுக்கு வெளிப்படையான பகைவன் ஆவான். (குர்ஆன் 2:208).*

இஸ்லாம் வெறுமனே குறிப்பிட்ட வணக்க வழிபாட்டு வடிவங்களோடு நின்றுவிடுகிறது; அது சமூகப் பிரச்சினைகள், திருமணம், மணவிலக்கு, அரசியல், பொருளியல் முதலிய பிறவற்றைக் குறித்து எதுவும் பேசுவதில்லை என்பது பொதுவாக நிலவும் ஒரு தவறான கருத்தாகும். ஷரீஆவைச் சற்று மேலோட்டமாகப் படித்தாலே, வழிபாடுகளைவிட, வாழ்வியலின் இதர துறைகள் குறித்த பிரச்சினைகளுக்குத்தான் இஸ்லாமியச் சட்டத்தின் பெரும்பகுதி தீர்வளிக்க முற்படுகிறது என்பது புலப்படும். நபிமொழித் (ஹதீஸ்) தொகுப்புகளிலும்சரி, இஸ்லாமியச் சட்ட *(ஃபிக்ஹு)* ஏடுகளிலும் சரி, இந்தத் தலைப்புகளுக்கே கணிசமான அளவு இயல்கள் ஒதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். புகழ்பெற்ற செவ்விய ஹனஃபி ஃபிக்ஹு ஏடான *அல்-ஹிதாயா*வின் நான்கு தொகுதிகளுள், முதலாவது மட்டுமே வணக்க வழிபாட்டு விதிகளை விளக்குகின்றது. மற்ற மூன்றும் வணிகம், திருமணம், மணவிலக்கு ஆகியன குறித்த சட்டங்கள், தண்டனைச் சட்டம்,

உணவுமுறைச் சட்டங்கள், சொத்துப் பங்கீடு மற்றும் ஏனைய விஷயங்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளன. நபிமொழித் (ஹதீஸ்) திரட்டுகளிலும் இதே பாங்குதான் காணப்படுகிறது. பெரும்பகுதி, பிரத்யேக வணக்க வழிபாடுகள் தவிர்த்த இதர விஷயங்களையே உள்ளடக்கியிருக்கிறது.

இதன் பொருள், ஒரு முஸ்லிம் தனது இஸ்லாமிய நடைமுறையை வணக்க வழிபாட்டோடு மட்டும் நிறுத்திக்கொள்வாரெனில், அவர் குர்ஆன், சுன்னாவின் (நபிவழியின்) போதனைகளில் பெரும்பகுதியை விட்டு விடுகிறார் என்பதே. ஆகவே, முஸ்லிம்கள் இஸ்லாமிய போதனையின் முழுவீச்சையும் கற்று, செயலாற்றக் கடமைப்பட்டுள்ளனர். இதன் பலனாக இம்மையிலும் மறுமையிலும் அவர்களுக்கு அருள்பொதிந்த, நிம்மதியான, அமைதியான, வெற்றிவாழ்வு அமையும்.

அன்புத் தூதர் (ஸல்) ஓர் ஒளிவிளக்கு. ஈருலகில் பயனளிக்கக்கூடிய விஷயத்துக்கு வழிகாட்டுபவர். முழுமையான முன்மாதிரி. அன்றாட வாழ்வின் இயல்பான, எளிய செயல்களுக்கும்கூட வழிகாட்டி. இமாம் முஸ்லிமின் நபிமொழித் தொகுப்பில் ஓர் அறிவிப்பு உள்ளது. அதில், நபித்தோழர் சல்மான் அல்-ஃபார்சியை இணைவைப்பாளர்கள் சிலர் அணுகி பின்வருமாறு கூறுவதாக வருகிறது:

لَقَدْ عَلَّمَكُمْ نَبِيُّكُمْ كُلَّ شَيْءٍ حَتَّى الْخِرَاءَةَ

*உங்கள் நபி உங்களுக்கு அனைத்தையும் கற்றுத் தந்திருக்கிறாரோ! மலஜலம் கழிப்பதையும் கூடவா (மலஜலம் கழிப்பதன் ஒழுங்குகள்)!*

அதற்கு அவர் பதிலளித்தார்:

أَجَلْ ، لَقَدْ نَهَانَا صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْ نَسْتَقْبِلَ الْقِبْلَةَ بِغَائِطٍ أَوْ بَوْلٍ ، وَأَنْ لَا نَسْتَنْجِيَ بِالْيَمِينِ ، وَأَنْ لَا يَسْتَنْجِيَ أَحَدُنَا بِأَقَلَّ مِنْ ثَلَاثَةِ أَحْجَارٍ ، أَوْ يَسْتَنْجِيَ بِرَجِيعٍ أَوْ عَظْمٍ

*நிச்சயமாக! மலம் அல்லது சிறுநீர்க் கழிக்கும்போது நாங்கள் கிப்லாவை (தொழுகைக்காக முன்னோக்கும் திசையை) முன்னோக்குவதையும் வலக் கையால் தூய்மை செய்வதையும் மூன்றுக்கும் குறைவான கற்களைக் கொண்டு தூய்மை செய்வதையும் காய்ந்த சாணம் அல்லது எலும்புத்துண்டு மூலம் தூய்மை செய்வதையும் அவர்கள் எங்களுக்குத் தடைசெய்திருக்கிறார்கள். (சஹீஹ் முஸ்லிம் 262, சுனன் அபூ தாவூத் 7; இங்கு அபூ தாவூதின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

إِنَّمَا أَنَا لَكُمْ بِمَنْزِلَةِ الْوَالِدِ أُعَلِّمُكُمْ ، فَإِذَا أَتَى أَحَدُكُمُ الْغَائِطَ فَلَا يَسْتَقْبِلُ الْقِبْلَةَ وَلَا يَسْتَدْبِرْهَا وَلَا يَسْتَطِبْ بِيَمِينِهِ

*நிச்சயமாக, நான் உங்களுக்கு ஒரு தகப்பனைப் போன்றவர். நான் உங்களுக்குக் கற்பிக்கிறேன் (அதாவது, சாதாரண அடிப்படை விஷயங்களைக்கூட என்னிடமிருந்து கற்றுக்கொள்வதற்கு நீங்கள் வெட்கப்படவேண்டாம்). உங்களில் ஒருவர் மலஜலம் கழிக்கச் சென்றால், அவர் கிப்லாவை முன்னோக்கக் கூடாது. அதைப் பின்னோக்கவும் கூடாது; மேலும், தன் வலக் கையைக் கொண்டு தூய்மை செய்யக்கூடாது... (சுனன் அபூ தாவூத் 8)*

அதைப்போலவே, தனிமனித வாழ்வில் தனித்திருக்க வேண்டிய அந்தக் கணங்களை – கணவன், மனைவிக்கு இடையிலான உடலுறவு விஷயத்தை – இஸ்லாம் புறக்கணித்து விடுவதில்லை. உடலுறவு நடத்தை குறித்த விரிவான, தெளிவான சட்டவிதிகள் குர்ஆனிலும் சுன்னாவிலும் (நபிவழியிலும்) செவ்விய அறிஞர்களின் படைப்புகளிலும் உள்ளன. அறிஞர்கள் பலர் இந்த நளினமான, ஆனால் முக்கியமான தலைப்பிற்கு முழு இயல்களையே ஒதுக்குவதைப் பொதுவாகக் காணமுடிகிறது. இமாம் அபூ ஹாமித் அல்-கஸ்ஸாலியின் *இஹ்யா உலூம் அல்-தீன்*, இமாம் இப்னு அல்-கய்யிம் அல்-ஜவ்ஸிய்யாவின் *அல்-திப் அல்-நபவீ*, இமாம் இப்னு குதாமாவின் *அல்-முக்னி*, இமாம் நஸாயீயின் *இஷ்ராத் அல்-நிஸா*, இமாம் அபூ அல்-ஃபராஜ் இப்னு அல்-ஜவ்ஸியின் *ஸைத் அல்-ஃகாதிர்*, ஷெய்கு அப்துல் காதிர் அல்-ஜீலானியின் *குன்யா அல்-தாலிபீன்* மற்றும் பிற எண்ணற்ற செவ்விய நூல்கள் இந்தத் தலைப்பைச் சற்று விரிவாக அலசுகின்றன. இஸ்லாத்தின் முதன்மையான நான்கு சிந்தனைப் பிரிவுகளின் *(மத்ஹபுகள்)* முக்கிய குறிப்பு நூல்கள் அனைத்தும் உடலுறவின் பல கூறுகள்குறித்து கலந்துரையாடி, தம்பதிகள் எதைச் செய்யலாம், எதைச் செய்யக்கூடாது என்பதைக் குறித்துப் பேசுகின்றன.

மணவாழ்வின் நீடிப்பிற்கு திடமான உடலுறவு இன்றியமையாதது. மணவாழ்வு குலைவதற்கான அடிப்படைக் காரணங்களுள் ஒன்று, குறைபட்ட உடலுறவு எனும் கருத்தை இன்று அறிஞர்கள் பொதுவாக ஏற்றுள்ளனர். தாம்பத்திய உறவுவிரிசலின் ஆணிவேர், பெரும்பாலும், உடலுறவு அதிருப்திதான். படுக்கை அறையில் தொடங்கும் பிரச்சினை மனக்கசப்பு, மகிழ்ச்சியின்மை, எரிச்சல் எனத் தொடர்ந்து, சில வேளைகளில் மணவிலக்கில் போய் முடிகிறது.

திருமணத்தின் நோக்கங்களில் ஒன்று, ஒருவர் தன் பாலியல் தேவைகளை அனுமதிக்கப்பட்ட வழிகளில் நிறைவுசெய்துகொள்ள

வேண்டும். தம்பதியர் இருவரில் ஒருவர் திருப்தியடையாவிட்டாலும் கூட, அவர் தன் பாலுணர்வுகளை வேறு வழிகளில் தீர்த்துக்கொள்ள அதிகமாகத் தூண்டப்படலாம். பலநேரங்களில், தம்பதியருள் ஒருவர் ஓர் உடலுறவுச் செயல்வடிவை விலக்கப்பட்டது என தவறுதலாக எண்ணி அதில் ஈடுபட மறுக்கக்கூடும். இதனால் அவர்களுக்கிடையே உறவுப் பிரச்சினை ஏற்படலாம். ஆகவே, தம்பதிகள் உடலுறவு நடத்தை குறித்த இஸ்லாமிய போதனைகளைப் புரிந்துகொள்வது அதிமுக்கியமானது. இந்தத் தலைப்பில் சற்று அடிப்படைக் கல்வி பெறுவதன் மூலம், ஆரோக்கியமான பாலியல் வாழ்வு மேற்கொள்வதுடன் தாம்பத்திய மோதலையும் தவிர்த்துவிடலாம்.

இந்தத் தலைப்பிற்கு விரிவானதொரு விளக்கம் தேவைப்படுவதற்கான இரண்டாவது காரணம் – ஆனால், முக்கியத்துவத்தில் சற்றும் குறைவில்லாத காரணம் – பாலியல்மீதான நவீன உலகின் தீராத மோகம். இந்தத் தலைப்பு பள்ளிக்கூட பாடதிட்டத்தில் பாலியல் கல்வி எனும் தலைப்பின்கீழ் நிறுவனமாக்கப்பட்டுள்ளது. அதில், வெட்கக்கேடான, இழிவான செயல்கள் என சிலர் கருதும் விஷயங்கள் குழந்தைகளுக்குக் கற்பிக்கப்படுகின்றன. இதைவிட, அதிகமாக ஊடுருவும் பாலுறவு மனக்காட்சிகளைத் தூண்டும் வழிகளின் தொடர் பரவல் முஸ்லிம்களைப் பாதிக்கிறது. ஆபாசப் படங்களுக்கும் விலக்கப்பட்ட மற்ற பாலுறவுத் தணிப்பு முறைகளுக்கும் அடிமையாவோரின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே போகிறது.

இந்தச் சூழலில், இந்தத் தலைப்பு குறித்த இஸ்லாமிய நிலைப்பாட்டை வழங்குவது மிக முக்கியமானதாகிவிடுகிறது. இல்லாவிட்டால், முஸ்லிம்கள் இஸ்லாமல்லாத தகவல் மூலங்களிலிருந்து அதைக் கற்றுக்கொள்ளும் நிலைக்குத் தள்ளப்படுவர். அதன் விளைவாக, அவர்களின் பண்புக்கும் உடல் நலத்திற்கும் ஆன்மிகத்திற்கும் கேடு விளையும்.

பாலியல் குறித்த எந்தவொரு கலந்துரையாடலும் மார்க்க நன்னடத்தைக்கும் *(அதப்)* நாண உணர்வுக்கும் *(ஹயா)* பங்கம் ஏற்படுத்தும் மட்டுமீறிய செயல் என சிலர் கருதுகின்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே இந்தத் தலைப்பு குறித்து நன்கு விரிவாக விளக்கியுள்ளார்கள் என்பதை அவர்கள் அறியவில்லை போலும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) பாலியல் செய்திகளை எப்படி ஆண்களுக்கும், பெண்களுக்கும் கற்பித்தார்கள் என்பதை ஏராளமான நபிமொழிகள் (ஹதீஸ்) சித்திரிக்கின்றன. அவற்றைப் பின்வரும் பக்கங்களில் நாம் விளக்கவுள்ளோம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் தோழர்களுக்குக் கடமையான குளிப்பின் *(குஸ்லு)* விதிகளைக் கற்றுத்தந்த இந்த ஹதீஸை

அபூ ஹுரைரா (ரழி) அறிவித்துள்ளார். புகாரியிலும் முஸ்லிமிலும் அது பதிவாகியுள்ளது. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

إِذَا جَلَسَ بَيْنَ شُعَبِهَا الْأَرْبَعِ ، ثُمَّ جَهَدَهَا ، فَقَدْ وَجَبَ عَلَيْهِ الْغُسْلُ

ஒரு மனிதர் அவளின் நான்கு பாகங்களுக்கு மத்தியில் அமர்ந்து அழுத்தம் கொடுப்பாராயின், அவர்மீது குளிப்பு கட்டாயமாகிவிடுகிறது. (*ஸஹீஹ் அல்-புஹாரி 287, ஸஹீஹ் முஸ்லிம் 348,* இங்கு *முஸ்லிமின்* சொற்களே இடம்பெற்றுள்ளன.)

இந்த ஹதீஸில், குளிப்பு கட்டாயமாகக் கூடிய கணவன்-மனைவி பாலுறவு பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) வெளிப்படையாகச் சித்திரிக்கிறார்கள். இவ்வாறு, இந்த விஷயங்களை வெளிப்படையாக நபி (ஸல்) கலந்துரையாடுவதைக் காட்சிப்படுத்தும் மேலும் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன.

அல்லாஹ்வின் தூதரிடம் உடலுறவு தொடர்பான கேள்விகளைக் கேட்பதிலிருந்து நபித்தோழர்கள் வெட்கி ஒதுங்கவில்லை. பிரபலமான ஒரு சம்பவத்தில், உமர் இப்னு அல்-ஃகத்தாப் (ரழி) அல்லாஹ்வின் தூதரிடம் வந்து, ஒருவர் தம் மனைவியைப் பின்புறமிருந்து, அதாவது ஆசனவாயில் அல்லாமல், பெண்குறியில் புணர்வது அனுமதிக்கப் பட்டதா என்பது பற்றி வினவினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இது அவமரியாதையான கேள்வி எனக் கண்டிக்கவில்லை. மாறாக, இந்தக் கேள்வியின் பதிலை குர்ஆனிய வசனங்களாக இறைவனே இறக்கி வைக்கும்வரை காத்திருந்தார். (காண்க: *சுனன் அல்-திர்மிதீ 2980*)

கவனிக்கப்படவேண்டியது என்னவெனில், பெண்களும்கூட பாலியல் தொடர்பான கேள்விகளைத் தயக்கமோ வெட்கமோ இன்றி அல்லாஹ்வின் தூதரிடம் கேட்கத் துணிந்தார்கள். அல்லாஹ்வின் தூதரும் அவற்றுக்குப் பதில் உரைப்பதிலிருந்து வெட்கி ஒதுங்கவில்லை. இத்தனைக்கும் இறைத்தூதர் (ஸல்) இயற்கையாகவே நாணம் மிக்கவர்.

உம்மு சலமா (ரழி) அறிவிக்கிறார்கள்:

جَاءَتْ أُمُّ سُلَيْمٍ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَتْ : يَا رَسُولَ اللَّهِ ، إِنَّ اللَّهَ لَا يَسْتَحْيِي مِنَ الْحَقِّ ، فَهَلْ عَلَى الْمَرْأَةِ مِنْ غُسْلٍ إِذَا احْتَلَمَتْ؟ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: إِذَا رَأَتِ الْمَاءَ ، فَغَطَّتْ أُمُّ سَلَمَةَ تَعْنِي وَجْهَهَا وَقَالَتْ: يَا رَسُولَ اللَّهِ ، وَتَحْتَلِمُ الْمَرْأَةُ؟ قَالَ: نَعَمْ تَرِبَتْ يَمِينُكِ ، فَبِمَ يُشْبِهُهَا وَلَدُهَا؟

*உம்மு சுலைம் (ரழி) அல்லாஹ்வின் தூதரிடம் வந்து கூறினார்: 'அல்லாஹ்வின் தூதரே, நிச்சயமாக அல்லாஹ் உண்மையானவற்றில் வெட்கப்படுவதில்லை. ஒரு பெண் ஈரக்கனவு கண்டபின் குளிப்பு அவள்மீது கடமையா?' அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்), 'ஆம், திரவம் வெளிப்பட்டிருந்தால்' என பதிலளித்தார்கள். உம்மு சலமா தம் முகத்தை மறைத்துக்கொண்டு கேட்டார்கள், 'அல்லாஹ்வின் தூதரே! ஒரு பெண்ணுக்கு திரவம் வெளிப் படுமா?' அதற்கு நபியவர்கள் (ஸல்) கூறினார்கள்: 'ஆம், உம் வலக் கை மண்ணைப் பற்றிக்கொள்ளட்டுமாக (இது, ஒருவரின் கூற்றோடு முரண் படும்போது அவரிடம் நளினமாகக் கூறப்படும் அரபுச் சொற்றொடர்). பிறகு எப்படி மகன் தாயின் சாயலில் பிறக்கின்றான்?' (ஸஹீஹ் புஹாரி 130)*

இங்கே, ஈரக்கனவு போன்ற பாலுறவுச் செய்திகள்பற்றி அல்லாஹ்வின் தூதரிடம் கேட்பதில்கூட ஒரு பெண்ணுக்குத் தயக்க வுணர்வு இருக்கவில்லை. 'அல்லாஹ் உண்மையானவற்றில் வெட்கப் படுவதில்லை' எனும் உம்மு சுலைமின் வாசகத்திலிருந்து, *தீன்* விவகாரங்களைக் கற்பதில் வெட்கவுணர்வு என்பது கிடையாது எனும் தெளிவான சுட்டுதல் உள்ளது. இதே சொற்றொடரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே – ஆசனவாய் உறவைத் தடைசெய்தபோது – பயன்படுத்தியுள்ளார்கள்:

إِنَّ اللَّهَ لَا يَسْتَحْيِي مِنْ الْحَقِّ ، لَا تَأْتُوا النِّسَاءَ فِي أَدْبَارِهِنَّ

*அல்லாஹ் உண்மை கூறுவதில் வெட்கப்படுவதில்லை; பெண்களின் ஆசனவாயில் புணராதீர்கள். (சுனன் இப்னு மாஜா 1924, முஸ்னது அஹ்மது மற்றும் பிற தொகுப்புகள்)*

இதன்மூலம் கற்கும் நோக்கில் இந்தத் தலைப்புபற்றி கலந்துரை யாடுவதில் தவறேதும் இல்லை. ஆனால் அவை ஒழுக்க-நாகரிகத்துடன் இருக்கவேண்டும். உண்மையில், இறைவனின் போதனைகளிலிருந்தும் அவனுடைய தூதரின் போதனைகளிலிருந்தும் வெட்கப்பட்டு ஒதுங்கிக் கொள்வது தவறானது – அது பாலியல் விஷயங்கள் குறித்தவையாயினும் சரியே.

*முஜாஹிதிடமிருந்து* இமாம் *புஹாரி* இவ்வாறு *அறிவிக்கிறார்:* 'வெட்கப்பட்ட ஒரு மனிதராலும் ஆணவமுடைய ஒரு மனிதராலும் தூய அறிவை *(இல்ம்)* பெற்றுக்கொள்ள இயலாது.' (*ஸஹீஹ் அல்-புஹாரி* **1:60**)

இதேபோல், அன்னை ஆயிஷாவிடமிருந்து அவர் இவ்வாறு அறிவிக்கிறார்: '*அன்சாரி* பெண்மணிகள் எத்துணைப் போற்றுதலுக் குரியவர்கள். மார்க்கத்தில் ஆழமான விளக்கம் பெறுவதிலிருந்து வெட்கவுணர்வு அவர்களைத் தடுப்பதில்லை.' (மேலது)

நாணம் இஸ்லாமிய மார்க்கத்தின் ஓர் அடிப்படைக் கூறு என்பதில் ஐயமில்லை. எனினும், மார்க்க விஷயங்களைக் கற்றல் என வரும் பொழுது அது தடைக்கல்லாக இருக்கக்கூடாது. நவீன உலகில், பாலியல் கேள்விகள் குறித்து வெளிப்படையாகக் கலந்துரையாடப்படுகிறது. அதுவும் பெரும்பாலும் அநாகரிகமான விதத்தில். பிறகு ஏன், இந்தத் தலைப்பு குறித்து தூய்மையான, ஒழுக்க-நாகரிகம்கொண்ட இஸ்லாமிய போதனைகளைக் கற்பதில் நாம் வெட்கப்படவேண்டும்?

இந்தப் புத்தகத்தின் உள்ளடக்கம் மிகவும் வெளிப்படையாய் இருப்பதாக உணருவோர், இறைவனின் சொற்களை மனதில் வைத்துக் கொள்ள வேண்டும்: 'நிச்சயமாக அல்லாஹ் உண்மை (யை விளக்கும்) விஷயத்தில் வெட்கப்படுவதில்லை' (குர்ஆன் 33:53). இதையே அவனுடைய தூதரும் அவருடைய தோழர்களும் எதிரொலித்துள்ளனர். (சஹீஹ் அல்-புஹாரி 130, சுனன் இப்னு மாஜா 1924). இந்தப் புத்தகத்தில் கலந்துரையாடப்படுகிற அனைத்தும் நேரடியாக குர்ஆனின் அடிப்படையிலும் நபிவழி, நபித்தோழர்களின் வாக்குகள், செவ்விய அறிஞர்களின் படைப்புகள், இஸ்லாத்தின் முதன்மையான நான்கு சிந்தனைப் பிரிவுகளின் ஆதார நூல்கள் ஆகியவற்றின் அடிப்படை யிலும் அமைந்துள்ளன.

மேற்கூறிய இரண்டு காரணங்களின் அடிப்படையில் அதாவது, தம்பதியருக்கு இடையிலுள்ள பாலியல் பிரச்சினையே மணவாழ்வின் விரிசலுக்கு காரணமாக அமைதல், நவீனகாலத்தில் பாலியல் மீதான தீராத மோகத்தினால் முஸ்லிம்கள் மீது அது ஏற்படுத்தும் கடுமையான தாக்கம் ஆகியவற்றால் பாலியல் குறித்த இஸ்லாமிய வழிகாட்டுதல் முஸ்லிம்களுக்குப் பெரிதும் தேவைப்படுகின்றன.

மூன்றாவது காரணம், முஸ்லிம்கள் பலர் உடலுறவு குறித்த இஸ்லாமியச் சட்டங்களையும் ஒழுங்குகளையும் பற்றி அறவே அறிவதில்லை. மாதவிடாய்க் காலத்தில் புணர்வது திட்டவட்டமாகத் தடுக்கப்பட்டுள்ளது என்பதுகூட சிலருக்குத் தெரியாது. மேலும் பலர், தங்கள் வாழ்வை இஸ்லாமிய போதனைகளுக்கு ஏற்ப அமைத்துக் கொள்ள விரும்புகின்றனர்; கற்பதற்கான ஆர்வமும் கொண்டிருக் கின்றனர். ஆனால், அறிஞர்களிடம் நேரடியாகக் கேட்பதற்கு சங்கடப் படுகின்றனர். இப்படிப்பட்டவர்களுக்கு, இந்தப் புத்தகம் ஒரு பொக்கிஷமாக விளங்கும், *இன்ஷா அல்லாஹ்*.

இறுதியாக, தம்பதிகள் சிலர், அனுமதிக்கப்பட்ட வழிகளில் உடலுறவுப் பழக்கங்களில் ஈடுபட்டுக்கொண்டிருக்கலாம். ஆனால், அவை விலக்கப்பட்டவை அல்லது விரும்பத்தகாதவை எனும் தவறான

கருத்து கொண்டிருப்பர். நான் ஒருமுறை சந்தித்த ஒருவர், தம் மனைவியின் உடலை முத்தமிடுதல் விலக்கப்பட்டது என நம்பியிருந்தார். எனினும், அதை அவர் செய்துவந்தார். அவர் ஒரு பாவச் செயல் புரியாவிட்டாலும்கூட, விலக்கப்பட்டது என அவர் நம்பிய ஒரு செயலைச் செய்வது அவருடைய ஆன்மிகத்திற்குக் குந்தகம் விளைவிக்கக்கூடியதாய் இருக்கும் – அது உண்மையில் இஸ்லாமியச் சட்டங்களில் அனுமதிக்கப்பட்டாலும்கூட. இதுபோன்ற சூழ்நிலைகளில் இருக்கும் மக்களுக்கு, அனுமதிக்கப்பட்டவை குறித்து அறிவூட்ட வேண்டும். அதன் மூலம் அச்செயலில் ஈடுபடுவதால் குற்றவுணர்வு கொள்ளத் தேவையில்லை என்பதை அவர்களுக்கு உணர்த்தலாம். மேலும் மோசமானதொரு விஷயம், விலக்கப்பட்டதாக ஒருவர் நம்பும் செயல்களைச் செய்வதால் – அவை உண்மையில் முழுக்க, முழுக்க ஆகுமானவையாக இருப்பினும் – நாளடைவில், இஸ்லாமியச் சட்டம் மீது அவர் உள்ளத்தில் அலட்சியம் ஏற்பட்டுவிடும். பிறகு, உண்மையில் விலக்கப்பட்ட செயல்களுக்கு இது (தவிர்க்கவியலாது) வழிவகுக்கும். எனவே, அனுமதிக்கப்பட்டவை குறித்து தகவலளிப்பதற்கும் விலக்கப்பட்ட செயல்களில் வீழ்வதிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவதற்கும் தெளிவான வழிகாட்டுதல்கள் கண்டிப்பாகத் தேவை.

## 1

# எண்ணங்களும் உடலுறவும்

எண்ணம் *(நிய்யத்)* தான் சாதாரண செயல்களைப் பெரும் புண்ணியமாக உயர்த்தி, அளப்பரிய நற்கூலிகள் பெற்றுத்தரும் அடிப்படைக் கூறாகும். உமர் இப்னு அல்-கத்தாப் (ரழி), தாம் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து செவியுற்றதாக அறிவிக்கிறார்:

إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى...

*செயல்கள் எண்ணத்தின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. ஒருவர் எதை நாடுகிறாரோ அதுவே அவருக்குக் கிடைக்கும்... (ஸஹீஹ் அல்-புஹாரி 1)*

இமாம் இப்னு நுஜைம் (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) நன்கறியப்பட்ட ஒரு சட்டவியல் முதுமொழியை *(காயிதா ஃபிக்ஹிய்யா)* குறிப்பிடுகிறார்: 'எண்ணம் இன்றி நற்கூலி இல்லை' *(அல்-அஷ்பாஹ் வ அல்-நஸாயிர் பக்.19)*

இமாம் அப்துல்லாஹ் இப்னு அல்-முபாரக் (அல்லாஹ் அவர் மீது கருணை புரியட்டும்) கூறுகிறார்: 'எத்துணை சந்தர்ப்பங்களில் எண்ணத்தின் காரணமாக, ஓர் அற்பமான செயல் அற்புதமான காரியமாக மாறியிருக்கிறது; எத்துணைச் சந்தர்ப்பங்களில் எண்ணத்தின் காரணமாக, ஓர் அற்புதமான காரியம் அற்பச் செயலாக மாறியிருக்கிறது.' *(சியார் அஃலம் அல்-நுபலா 8:400)*

இதன்மூலம், ஒருவர் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் சரியான எண்ணம் அமைத்துக்கொள்வது தலையாய முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஒருவரின் செயல் அல்லாஹ்வின் அன்புத் தூதருடைய வழிக்கு ஏற்ப, அல்லாஹ்வின் பொருத்தத்தை அடைவதற்கு, அதை அவர் அல்லாஹ்வுக்காகச் செய்வதாய் எண்ணம் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால், அது வெறும் பழக்கச் செயலாகவே இருக்கும்.

இக்கோட்பாட்டில், ஒருவர் தம் துணைவருடன் உடலுறவு கொள்வதும் அடங்கும். அதாவது, நன்மாற்றம் ஏற்படுத்தும் எண்ணங்களுடனும் குறிக்கோள்களுடனும் *(மகாஸித்)* அதை மேற்கொள்ள வேண்டும். அவை,

***1. இஸ்லாத்திற்கு சேவையாற்றும் இறைபக்தியுடைய சந்ததியினரை நாடுவது; அல்லாஹ்வின் தூதருடைய சமூகத்தை (உம்மா) பெருக்குவது***

அல்லாஹ் கூறுகிறான்:

فَالْآنَ بَاشِرُوهُنَّ وَابْتَغُوا مَا كَتَبَ اللَّهُ لَكُمْ

மேலும், இப்போது அவர்களுடன் (உங்கள் மனைவியருடன்) உறவுகொண்டு, அல்லாஹ் உங்களுக்கு விதித்துள்ளதைத் தேடிக்கொள்ளுங்கள். *(குர்ஆன் 2:187)*

இதுபற்றி மாபெரும் குர்ஆன் விரிவுரையாளரான இமாம் இப்னு கஸீர் (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) கூறுகையில் – அபூ ஹுரைரா, அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ், அனஸ், முஜாஹித், இக்ரிமா, சயீத் இப்னு ஜுபைர் போன்ற நபித்தோழர்கள் பலர், அவர்களின் வழிவந்தவர்கள், செவ்விய குர்ஆன் விரிவுரையாளர்கள் *(முஃபஸ்ஸிரூன்)* ஆகியோரை மேற்கோள்காட்டி, 'தேடிக்கொள்ளுங்கள்' எனும் அல்லாஹ்வின் சொற்கள் குழந்தைகள் பெற்றுக்கொள்வதையே சுட்டுவதாகக் குறிப்பிடுகிறார். *(தஃப்ஸீர் அல்-குர்ஆன் அல்-அழீம் 1300)*

இந்தியத் துணைக்கண்டத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் மாபெரும் குர்ஆன் விரிவுரையாளரும் ஹதீஸ் கலை அறிஞருமான ஷெய்கு ஷப்பீர் அஹ்மத் உஸ்மானி, உருதுவிலுள்ள தனது புகழ்பெற்ற குர்ஆன் விரிவுரையில் இவ்வாறு எழுதுகிறார்: 'பெண்களுடன் உடலுறவு கொள்வது மூலம், உங்களுக்காக விண்ணுலக ஏட்டில் *(லவ்ஹுல் மஹ்ஃபூழ்)* விதிக்கப்பட்டிருக்கும் குழந்தைகளை நீங்கள் தேடிக்கொள்ளவேண்டும். வெறுமனே இச்சையைத் தணித்துக் கொள்வதும் உடலுறவு ஆசையும் மட்டுமே நோக்கமாக இருக்கக் கூடாது.' *(தஃப்ஸீரே உஸ்மானி 1:130)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:

النِّكَاحُ مِنْ سُنَّتِي فَمَنْ لَمْ يَعْمَلْ بِسُنَّتِي فَلَيْسَ مِنِّي ، وَتَزَوَّجُوا فَإِنِّي مُكَاثِرٌ بِكُمُ الأُمَمَ

திருமணம் என் வழியை *(சுன்னா)* சார்ந்தது. எவர் என் வழியை (நிராகரிக்கும் முகமாக) பின்பற்றுவதில்லையோ அவர் என்னைச் சார்ந்தவர் அல்லர். மேலும்,

*திருமணம் செய்யுங்கள் (மற்றும் இனவிருத்தி செய்யுங்கள்). நிச்சயமாக நான் உங்களைக் கொண்டு, பிற சமூகத்தாரை எண்ணிக்கையில் விஞ்சிவிடுவேன்... (சுனன் இப்னு மாஜா* ***1846)***

இந்த நபிமொழியிலிருந்து, மக்கள் செல்வத்தைப் பெருக்கிக் கொள்வதும் இறைபக்தியுடைய சந்ததியினரைத் தேடிக்கொள்வதும் ஒருவர் தம் மனைவியுடன் உடலுறவு கொள்வதன் அனுமதிக்கப்பட்ட குறிக்கோள்கள் என்பது தெளிவாக விளங்குகிறது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம்மைப் பின்பற்றுபவர்களை, திருமணம் செய்யுமாறு ஊக்குவித்தார்கள். இதன் மூலம் ஆணும் பெண்ணும் அழகான இணைவின் வாயிலாக அல்லாஹ் வழங்குவதை நாடுமாறு கூறினார்.

**2. விபச்சாரத்திலிருந்து பாதுகாப்பு.** தற்புணர்ச்சி (சுய இன்பம்), பாலியல் கிளர்ச்சியைத் தூண்டும் சாதனங்கள் (ஆபாசப் படம், கதை, கருவிகள் போன்றவை), எதிர்ப்பாலினர் மீதான இச்சைப் பார்வை போன்ற பிற சீரழிக்கும் பழக்கங்களிலிருந்தும் பாதுகாப்பு.

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்:

يَا مَعْشَرَ الشَّبَابِ ، مَنْ اسْتَطَاعَ الْبَاءَةَ فَلْيَتَزَوَّجْ فَإِنَّهُ أَغَضُّ لِلْبَصَرِ وَأَحْصَنُ لِلْفَرْجِ ، وَمَنْ لَمْ يَسْتَطِعْ فَعَلَيْهِ بِالصَّوْمِ فَإِنَّهُ لَهُ وِجَاءٌ

*இளைஞர்களே, (உங்களில்) வசதிபெற்றிருப்பவர் திருமணம் செய்து கொள்ளட்டும். அது பார்வையைத் தாழ்த்தவும் மர்மஸ்தானத்தை (பாலுறுப்புகளை) பாதுகாக்கவும் உதவும். திருமணம் முடிக்க வசதியில்லாதவர் நோன்பு நோற்கட்டும். அது (பாலியல்) பசியைக் கட்டுப்படுத்தக் கூடியது. (சஹீஹ் அல்-புஹாரி* ***4779)***

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதைச் செவியுற்றதாக ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا أَحَدَكُمْ أَعْجَبَتْهُ الْمَرْأَةُ فَوَقَعَتْ فِي قَلْبِهِ فَلْيَعْمِدْ إِلَى امْرَأَتِهِ فَلْيُوَاقِعْهَا فَإِنَّ ذَلِكَ يَرُدُّ مَا فِي نَفْسِهِ

*ஒரு பெண் உங்களில் ஒருவரைக் கவர்ந்து அவருடைய மனதைக் கொள்ளை கொண்டுவிட்டால், அவர் தம் மனைவியிடம் சென்று அவளுடன் உடலுறவு கொள்ளட்டும். ஏனெனில், அது அவரின் உள்ளத்தில் உள்ளதை (பாலியல் இச்சையை) போக்கக்கூடியது.(சஹீஹ் முஸ்லிம்* ***1403)***

இதன்மூலம், ஒருவர் தம் துணைவரோடு உடலுறவுகொள்வதன் அடிப்படைக் குறிக்கோள்களில் முதன்மையானவை, கற்பு காத்தலும்

தன் பாலியல் தேவைகளைச் சட்டப்பூர்வமான வழிகளில் பூர்த்தி செய்துகொள்ளுதலுமே. இதன் மூலம் அவர் விலக்கப்பட்ட செயல் களிலிருந்து தவிர்ந்திருக்க இயலும்.

**3. அனுமதிக்கப்பட்ட வழியில் ஒருவர் தம் துணைவரின் உரிமையை நிறைவேற்றுதல்.** தன் துணைவரின் பாலியல் தேவைகளை நிறைவு செய்வது தம்பதியர் ஒவ்வொருவருக்கும் பொறுப்பாகும். இதைச் சற்று விரிவாகப் பின்வரும் பக்கங்களில் பார்க்கலாம்.

**4. உடலிலிருந்து திரவங்களை வெளியேற்றுதல்.** இவை உடலிலேயே தேங்கியிருப்பின், நோய்நொடிகளுக்கும் ஆரோக்கியமின்மைக்கும் வழிவகுக்கும். (இப்னு அல்-கையூம், *அல்-திப் அல்-நபவி* 178)[1] .

**5. அளவற்ற அருளாளன் மனிதகுலத்துக்கு அளித்த இந்த மாபெரும் அன்பளிப்பை அனுபவித்து மகிழ்தல்.** ஒருவர் தம் துணைவரோடு உடலுறவில் ஈடுபடும்பொழுது, அனுபவித்து மகிழும், இச்சை தணிக்கும் நோக்கம்கொள்வதில் தவறு ஏதுமில்லை. உடலுறவு ஒரு அசிங்கமான செயலல்ல. மாறாக, எண்ணற்ற நபிமார்களும் அல்லாஹ்வின் பக்திமிகு அடியார்களும் செய்துள்ளதொரு செயல். எனவே, இச்செயலை சட்டத்துக்கு உட்பட்டு மகிழ்ந்து அனுபவிப்பது எவ்விதத்திலும் வெட்க உணர்வுக்கு எதிரானதும் அல்ல; நற்பண்புக்கு முரணானதும் அல்ல.

சிலவேளைகளில், சிலர் உடலுறவை அசுத்தமானது; ஒரு தேவை என்ற வகையில் மட்டும்தான் செய்யவேண்டியது – மலஜலம் கழிக்கும் தேவையைப் போல – எனக் காண்கின்றனர். இப்படி ஒரு தவறான எண்ணம்கொண்டிருக்கும் மனிதர்கள் தயக்கத்துடனே உடலுறவு கொள்கின்றனர். அதிலிருந்து கிடைக்கும் எவ்வித சுக அனுபவத்தையும் அவமரியாதையானது அல்லது ஒழுக்கக்கேடானது எனக் கருது கின்றனர். அவர்கள் அதன் அசல் தன்மையைத் தவறவிட்டுவிட்டனர்.

[1] குறிப்பு: இந்தப் புத்தகத்தில் உள்ள மருத்துவக் குறிப்புகள் யாவும் செவ்விய மற்றும் சமகால முஸ்லிம் அறிஞர்களின் நூல்களிலிருந்தே எடுத்தாளப்பட்டுள்ளன. அவர்களில் சிலர் கிரேக்க- தாக்கம் உடைய மருத்துவத்தில் பயிற்சி பெற்றவர்கள். எனவே மருத்துவம், உடலியக்கம் குறித்த அவர்களின் கருத்துகள் நபிவழி மருத்துவத்திலிருந்து அல்லாது, கிரேக்க மருத்துவத்திலிருந்தே பெறப்பட்டிருக்கலாம். நபிவழி மருத்துவத்தை எவரும் எப்போதும் மறுதலிக்கவோ மறுக்கவோ முடியாது என்பது சரிதான் என்றபோதிலும், கிரேக்க மருத்துவத்தின் கூறுகள் அத்தகையது அல்ல. இதனால், இந்தப் புத்தகத்தில் உள்ள மருத்துவக் கருத்துகள், நவீனகால மேற்கத்திய மருத்துவத்தின் கண்டுபிடிப்புகளிலிருந்தும் அணுகல்களிலிருந்தும் மாறுபடலாம். மட்டுமின்றி, முன்னவற்றுள் சில இந்நாளில் முற்றிலும் துல்லியமானதாக அன்றி இருக்கலாம். வாசகர்கள் இவற்றை மனத்தில் நிறுத்தியபடி புத்தகத்தை வாசிக்குமாறு அறிவுறுத்தப்படுகின்றனர்.

அனுமதிக்கப்பட்ட உடலுறவு ஓர் இறைவழிபாடாகும். அதை இயன்றளவு நன்கு அனுபவித்து மகிழவேண்டும்.

### உடலுறவு ஒருவகையான அறம் (சதகா)

மேற்கூறப்பட்ட சரியான எண்ணங்கள், உடலுறவை ஓர் உடல் அளவிலான சுகம் என்பதிலிருந்து மாற்றி, ஓர் அளப்பரிய நற்கூலி கிடைக்கும் செயலாகவும் ஒருவகையான அறச்செயலாகவும் உயர்த்து கின்றன. அபூதர் அல்-கிஃபாரி (ரழி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்:

إِنَّ بِكُلِّ تَسْبِيحَةٍ صَدَقَةً ، وَكُلِّ تَكْبِيرَةٍ صَدَقَةً ، وَكُلِّ تَحْمِيدَةٍ صَدَقَةً ، وَكُلِّ تَهْلِيلَةٍ صَدَقَةً
، وَأَمْرٌ بِالْمَعْرُوفِ صَدَقَةٌ ، وَنَهْيٌ عَنْ مُنْكَرٍ صَدَقَةٌ ، وَفِي بُضْعِ أَحَدِكُمْ صَدَقَةٌ ، يَا
رَسُولَ اللَّهِ ، أَيَأتِي أَحَدُنَا شَهْوَتَهُ وَيَكُونُ لَهُ فِيهَا أَجْرٌ؟ قَالَ: أَرَأَيْتُمْ لَوْ وَضَعَهَا فِي حَرَامٍ
أَكَانَ عَلَيْهِ فِيهَا وِزْرٌ؟ فَكَذَلِكَ إِذَا وَضَعَهَا فِي الْحَلَالِ كَانَ لَهُ أَجْرًا

'...நிச்சயமாக ஒவ்வொரு *தஸ்பீஹு*ம் *(சுப்ஹானல்லாஹ் - இறைவன் தூய்மை யானவன் எனக் கூறுதல்)* அறச்செயலே, ஒவ்வொரு *தக்பீரு*ம் *(அல்லாஹு அக்பர்* - இறைவன் மிகப் பெரியவன் எனக் கூறுதல்) அறச்செயலே, ஒவ்வொரு *தஹ்மீது*ம் *(அல்ஹம்துலில்லாஹ்* - எல்லாப் புகழும் இறைவனுக்கே எனக் கூறுதல்) அறச்செயலே , ஒவ்வொரு *தஹ்லீலு*ம் *(லா யிலாஹ இல்லல்லாஹ்* - வணக்கத்திற் குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை எனக் கூறுதல்) அறச் செயலே, நன்மையை ஏவுவது அறம், தீயதைத் தடுப்பது அறம், மற்றும் உங்கள் எல்லோரின் உடலுறவுச் செயலிலும் அறம் இருக்கிறது.' (அப்போது, நபித்தோழர்கள் கேட்டனர்), 'அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவர் தன் உடலுறவு ஆசையை நிறைவேற்றிக்கொள்வதற்காகவா அவருக்கு நற்கூலி கொடுக்கப்படும்?' அதற்கு நபியவர்கள் கூறினார்கள்: 'அவர் அதை (உடலுறவை) விலக்கப்பட்ட விதத்தில் செய்தால் அவர் பாவம் செய்பவராகக் கருதப்படுவதை நீங்கள் அறியவில்லையா? அதுபோலத்தான், அவர் அதை அனுமதிக்கப்பட்ட விதத்தில் செய்தால், அவருக்கு நற்கூலி கொடுக்கப்படும்.' *(ஸஹீஹ் முஸ்லிம் 1006)*

மாபெரும் ஹதீஸ் வல்லுநரும் *(முஹத்திஸ்)* ஷாஃபி சட்டவியலாளரு மான *(ஃபகீஹ்)* இமாம் நவவி (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) *ஸஹீஹ் முஸ்லிமிற்கான* தமது புகழ்பெற்ற விரிவுரையில், மேற்கண்ட ஹதீஸ் குறித்து கருத்துரைக்கிறார்: 'இந்த ஹதீஸில், சரியான எண்ணங்கள் மூலமாக வெறும் அனுமதிக்கப்பட்டதொரு செயல் ஒரு

வணக்க வழிபாடாக மாறிவிடுகிறது என்பதற்குச் சுட்டுதல் உள்ளது. இதன்மூலம், ஒருவர் – அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப – உடலுறவு மூலம் தம் மனைவியின் உரிமையை நிறைவேற்றவும் அவளை கண்ணியமாக நடத்தவும் எண்ணுதல் அல்லது இறைபக்தியுடைய சந்ததியைத் தேடிக்கொள்ளுதல், தம்முடைய அல்லது தம் மனைவியுடைய கற்பைக் காக்க விரும்புதல், விலக்கப்பட்டவற்றைப் பார்ப்பது, நினைப்பது, ஆசைவைப்பது முதலியவற்றால் தம்பதியர் இருவரையும் பாதுகாக்க எண்ணுதல் அல்லது இன்னபிற போற்றுதலுக்குரிய நோக்கங்களை அடைய இலட்சியம் கொள்வாரெனில் அவருடைய உடலுறவு ஒரு வணக்க வழிபாடாக மாறிவிடுகிறது.' *(அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் இப்னு அல்-ஹஜ்ஜாஜ் 778)*

ஆகவே, பரவசத்தின் உச்சநிலையிலும்கூட ஒருவர் தன் இறைவனை மறப்பதில்லை என்பது இதிலிருந்து தெளிவுபடுகிறது. ஒருவர் தம் துணைவரோடு கொள்ளும் உடலுறவு மூலம், ஆசை நிறைவேற்றத்துக்கு அப்பால் உள்ள பல உயர் நன்னோக்கங்களை நினைவில் நிறுத்த வேண்டும். இவ்வழிகள் மூலமாக அழகான, சுகமகிழ்வான, நிறைவான ஒரு செயல் ஒரு வணக்க வழிபாடாகவும் அறச் செயலாகவும் உயர்ந்து விடுகிறது.

இமாம் இப்னு அல்-ஜவ்ஸி (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) கூறுகிறார்: சில நேரங்களில், உடலுறவின் விளைவாக இமாம் ஷாஃபி, இமாம் அஹ்மத் இப்னு ஹம்பல் (அல்லாஹ் அவர்கள்மீது கருணை புரியட்டும்) போன்றோரின் தரத்தில் சந்ததிகளைப் பெறக்கூடும். இத்தன்மையுடைய உடலுறவு ஆயிரமாண்டு *நஃபில்* (கடமையில்லாத) வழிபாட்டைவிட உயர்வானது! *(தல்பீஸ் இப்லீஸ் 358)*

# 2

## உடலுறவு: தம்பதியர் இருவருக்குமான உரிமை

இஸ்லாம் கணவன், மனைவி இருவரின் பாலியல் உரிமைகளையும் பாதுகாக்கிறது. ஒருவர் தம் துணைவரின் பாலியல் பசியைத் தணிப்பது உடலுறவின் – ஏன் மணவாழ்விற்கும்கூட சட்ட ஏற்புக்குரிய வழிமுறை யாகும்.

பாலியல் திருப்தி என்பது கணவன், மனைவி இருவருக்கும் உள்ள உரிமை. இது கணவனுக்கு மட்டுமே உள்ளது என நினைத்துக்கொள்வது தவறாகும். கணவனின் அளவுக்கு மனைவிக்கும் தன் பாலியல் தேவை களின் நிறைவை எதிர்பார்க்கும் உரிமை உண்டு. துல்லியமாகச் சொன் னால், உடலுறவு என்பது தம்பதியர் இருவருக்குமான உரிமையாகும்.

புகழ்பெற்ற ஹனஃபி சட்டவியலாளர், இமாம் இப்னு ஆபிதீன் (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) இவ்வாறு உரைக்கிறார்: ‘திருமணத்தின் விளைவுகளுள் ஒன்று, தம்பதியர் இருவரும் ஒருவருக் கொருவர் பாலுறவுச் சுகம் பெற்றுக்கொள்வதற்கான அனுமதி.’ *(ரத் அல்-முஹ்தார் அலா அல்-துர் அல்-முஃக்தார் **3:4**)*

முதன்மையான செவ்விய ஹனஃபி சட்டவியலாளர், இமாம் அலாவுத்தீன் அல்-கஸானி (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) இவ்வாறு உரைக்கிறார்: ‘பாலியல் சுகம் பெற்றுக்கொள்வது குறித்த இந்தச் சட்டதீர்ப்பில் தம்பதியர் இருவருக்கும் பங்குண்டு. மனைவி கணவனுக்கு சட்டப்படி உரிமையானவள் (அவளிடமிருந்து பாலியல் சுகம் பெற்றுக்கொள்வது பொறுத்து) என்பதுபோலவே, அவளின் கணவனும் அவளுக்கு சட்டப்படி உரிமையானவன்... கணவன் தான் இஷ்டப்படும் போதெல்லாம், அவளிடம் உடலுறவு கோர உரிமை பெற்றுள்ளார். இதற்கு விதிவிலக்குகள் – மாதவிடாய் *(ஹய்ளு)*, பேறுகால இரத்தப்போக்கு *(நிஃபாஸ்)*, தன் மனைவியுடன் உடலுறவைத் தவிர்ப்பதாகக் கணவன் சபதம் செய்தல் *(ளிஹார்)*, புனித ஹஜ்ஜின் போது இஹ்ராம் எனும் நிலையில் இருப்பது முதலிய இன்னபிற

*தடைகள் மட்டுமே. மனைவிக்கு(ம்) கணவனை உடலுறவுகொள்ள அழைக்கும் உரிமை உண்டு. ஏனெனில், அவரிடமிருந்து பாலியல் சுகத்தைப் பெற்றுக்கொள்வது அவளது உரிமை அதாவது அவளிட மிருந்து பாலியல் சுகத்தைப் பெற்றுக்கொள்ளும் அவருடைய உரிமை போன்றதே. அவள் அவரை அழைக்கும்போது, அவர் அதற்குச் சம்மதிக்கக் கடமைப்பட்டுள்ளார்; மேலும் நீதிமன்றம் வாயிலாக ஒருமுறை நிர்ப்பந்திக்கப்படுவார் (அதாவது, மணவாழ்வு நெடுகிலும் ஒருமுறை). அதன் பிறகு அவர் அவளுடன் உடலுறவு கொள்ள மார்க்க ரீதியாக (சட்ட ரீதியாக அல்ல) கடமைப்பட்டுள்ளார். இது, சிறப்பாகக் கூடிவாழ்வது, தாம்பத்திய உறவை வலுப்படுத்துவது எனும் கருத்துச் சூழலில் கடமையாகி விடுகிறது...' (பதாயி அல்-சனாயி* **2:331)**

மார்க்கரீதியாக தம்பதியர் இருவரும் ஒருவருக்கொருவர் பாலியல் தேவைகளை நிறைவுசெய்வது கடமை என்றபோதிலும், உடலுறவுக் கான மனைவியின் கோரிக்கைக்கும் கணவனின் கோரிக்கைக்கும் இடையில் சிறிது சட்டரீதியான வித்தியாசம் உள்ளது. கணவன் நீதிமன்றம் மூலமாக உடலுறவு கோரலாம்; மேலும், பொதுவாக, அவரே உடலுறவு முனைப்பு எடுக்க வேண்டுமென எதிர்பார்க்கப் படுகிறது. அவருடைய கோருதலுக்கு மனைவி சம்மதிக்கவேண்டும். இதற்கான விதிவிலக்கு, உடல்ரீதியான நியாயமானதொரு காரணம் அல்லது ஷரீஆ விதித்துள்ள தடைகள் இருந்தால் மட்டுமே. எனினும், மனைவியின் விஷயத்தில், அவளுடைய பாலியல் தேவைகளைக் கணவன் நிறைவுசெய்ய மார்க்கரீதியாகக் கடமைப்பட்டுள்ள போதிலும் – திருமணமானது முதல் அவர் குறைந்தபட்சம் ஒருமுறையாவது அவளுடன் உடலுறவு கொண்டிருந்திருந்தால் – அவள் இதை நீதி மன்றத்தின் மூலமாகக் கோர முடியாது.

இந்த வேறுபாடு, பல்வேறு விஷயங்களைக் கருத்தில்கொள்வதன் அடிப்படையில் உருவாகிறது. ஆணுக்கும் பெண்ணுக்குமான பாலியல் ஆசையின் இயல்புகளுக்கு இடையில் உள்ள வித்தியாசம், கணவன் குடும்பத் தலைவராக *(அமீர்)* இருப்பது, இருவரின் 'கோருதல்' எப்படி தாம்பத்திய உறவை வெவ்வேறு விதத்தில் பாதிக்கும் என்பது பற்றிய கருதுதல் ஆகியவை இதில் அடங்கும். வேறுவிதமாகக் கூறுவ தெனில், உடலுறவு கோரும் வெளிப்படையான சட்ட உரிமை ஆணுக்கு இருப்பது போன்ற அதே விதத்தில் பெண்ணுக்கு இல்லை. எனினும், இந்த வேறுபாடு நிலவுவதற்குக் காரணம், வெறுமனே இருபாலருக்கும் இடையிலுள்ள உடல், உணர்ச்சி மற்றும் உள்ளூர இயல்புணர்ச்சி ரீதியான வித்தியாசங்கள் மட்டுமே. (காண்க. *ரத் அல்-முஹ்தார்* **3:4)**

மேற்கூறிய அனைத்தும் சட்டத்தின் அளவிலேயே நிலவுகின்றன. ஆனால், மணவாழ்வின் உயிரோட்டம் என்பது வேறு விஷயம். ஒருவர் தம் உரிமையை கோரிக்கை, கட்டாயம், தர்க்கவாதம் ஆகியவற்றின் மூலமாகத் தேடுவது, மணவாழ்வின் உயிரோட்டத்திற்கே முரணானது; எதற்கும் தீர்வளிக்கவியலாதது. உரிமைகளை எப்பொழுதுமே, நபி வழியைப் பின்பற்றுவதன் அடிப்படையில் விளங்கிக்கொள்ளவேண்டும்:

أَكْمَلُ الْمُؤْمِنِينَ إِيمَانًا أَحْسَنُهُمْ خُلُقًا وَخِيَارُكُمْ خِيَارُكُمْ لِنِسَائِهِمْ خُلُقًا

*உங்களில் நற்பண்பில் யார் சிறந்தவரோ அவரே இறைநம்பிக்கையாளர்களில் சிறந்தவர். உங்கள் துணைவர்களிடம் யார் சிறந்தவரோ அவரே உங்களில் மிகச் சிறந்தவர். (சுனன் அல்-திர்மிதீ 1162)*

### கணவனின் உரிமை

ஓர் ஆண் உடலுறவுக்கு விரும்பும் போதெல்லாம் அவர் தம் மனைவியுடன் உடலுறவுகொள்ள உரிமை பெற்றுள்ளார். அவருக்காகத் தன்னைத் தயாராக வைத்துக்கொள்வது அவளுடைய மார்க்கக் கடமை. ஒரு நியாயமான காரணமின்றி இதில் தவறிவிடுவது பாவச் செயலாகும். இது பல ஹதீஸ்களில் வலியுறுத்தப்படுகிறது.

அபூஹுரைரா (ரழி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்:

إِذَا دَعَا الرَّجُلُ امْرَأَتَهُ إِلَى فِرَاشِهِ فَلَمْ تَأْتِهِ ، فَبَاتَ غَضْبَانَ عَلَيْهَا ، لَعَنَتْهَا الْمَلَائِكَةُ حَتَّى تُصْبِحَ

*ஓர் ஆண் தன் மனைவியைத் தன் படுக்கைக்கு அழைத்து அவள் மறுத்துவிட்டால், அவர் கோபமான நிலையில் தூங்குவார் எனில், காலைப் பொழுது வரை வானவர்கள் அவளை சபிக்கின்றனர். (ஸஹீஹ் அல்-புஹாரி 3065, ஸஹீஹ் முஸ்லிம் 1436, இங்கு முஸ்லிமில் உள்ள சொற்களே இடம் பெற்றுள்ளன)*

அபூஹுரைரா (ரழி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்:

وَالَّذِي نَفْسِي بِيَدِهِ ، مَا مِنْ رَجُلٍ يَدْعُو امْرَأَتَهُ إِلَى فِرَاشِهَا فَتَأْبَى عَلَيْهِ إِلَّا كَانَ الَّذِي فِي السَّمَاءِ سَاخِطًا عَلَيْهَا حَتَّى يَرْضَى عَنْهَا

*எவன் கைகளில் என் ஆன்மா உள்ளதோ அவன் மீது ஆணையாக, ஒருவர் தன் மனைவியைத் தன் படுக்கையின்பால் அழைத்து அவள் மறுத்துவிட்டால்,*

அவளுடைய கணவன் அவள் மீது திருப்தியுறும்வரை அல்லாஹ் அவள் மீது கோபம் கொண்டிருக்கிறான். *(ஸஹீஹ் முஸ்லிம் 1436)*

இந்த உத்தரவு அத்துணை அழுத்தமானது. தன் கணவன் அழைக்கும் போது மனைவி அலுவல்களில் மூழ்கியிருந்தாலும், அவற்றையெல்லாம் விட்டுவிட்டு அவரின் அழைப்பை அவள் ஏற்கவேண்டும். தல்க் இப்னு அலீ (ரழி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்:

إِذَا الرَّجُلُ دَعَا زَوْجَتَهُ لِحَاجَتِهِ فَلْتَأْتِهِ وَإِنْ كَانَتْ عَلَى التَّنُّورِ

ஓர் ஆண் தன் மனைவியைப் பாலியல் தேவை நிறைவேற்றத்துக்காக அழைத்தால், அவள் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தாலும் (அதை விட்டுவிட்டு) வரவேண்டும். *(சுனன் அல்-திர்மிதீ 1160)*

இவையும் இவை போன்ற பிற நபிமொழிகளில் இருந்தும் உடலுறவுக் கான கணவனின் கோருதலுக்குப் பணிவதன் முக்கியத்துவம் தெள்ளத் தெளிவாக விளங்குகிறது. இயல்புநிலையில், மனைவி கணவனின் அழைப்பை மறுப்பது கொடிய பாவமாகும். அதைவிட, அவளின் மறுப்பால் கணவன் விலக்கப்பட்ட செயலைச் செய்துவிட்டால் அது மாபெரும் பாவமாகிவிடும்.

முன்பு மேற்கோள் காட்டப்பட்ட அபூஹுரைராவின் ஹதீஸிற் கான தம்முடைய கருத்துரையில் இமாம் நவவி இவ்வாறு உரைக்கிறார்: 'தகுந்த காரணமின்றி, மனைவி தன் கணவனுக்கு உடலுறவை மறுப்பது விலக்கப்பட்ட செயல் *(ஹராம்)* என இந்த ஹதீஸ் சுட்டுகிறது. மாதவிடாய் ஒரு தகுந்த காரணமாகக் கருதப்படுவதில்லை. ஏனெனில், (அந்நிலையில்) அவளை ஆடைக்கு மேலிருந்து (ஆடை தடுப்பாக இருக்கும் நிலையில்) சுகித்து மகிழும் உரிமை கணவனுக்கு உண்டு.' *(அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் ப. 1084)*

இந்தக் கருத்துச் சூழலில்தான், பெண்கள் சுயவிருப்ப *(நஃபில்)* நோன்பு வைப்பதற்குமுன் தங்கள் கணவர்களிடம் அனுமதி கேட்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) பணித்தார்கள். ஏனெனில், அவள் நோன்பு நோற்றிருக்கும்பொழுது கணவன் தன் பாலியல் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள ஆசைப்படலாம். நபியவர்கள் (ஸல்) கூறினார்கள்:

لَا تَصُومُ الْمَرْأَةُ وَبَعْلُهَا شَاهِدٌ إِلَّا بِإِذْنِهِ

ஒரு பெண், தன்னுடைய கணவன் அவளுடன் இருக்கும்போது, அவருடைய அனுமதியின்றி (சுயவிருப்ப) நோன்பு நோற்கக் கூடாது. *(ஸஹீஹ் அல்-புஹாரி 4896)*

இங்கே இரண்டு விஷயங்கள் கவனத்திற்குரியவை:

முதலாவதாக, உடலுறவு கோரும் கணவனின் உரிமை என்பதற்குப் பொருள், அவர் தம் இச்சைகளைத் தணித்துக்கொள்ளத் தம் மனைவியை வன்செயலால் கட்டாயப்படுத்தலாம் என்பதல்ல. கணவன் 'கோப நிலையில் உறங்குவது', 'அதிருப்தி கொள்வது' பற்றி ஹதீஸ்களில் (நபிமொழியில்) கூறப்படுவதிலிருந்து, கணவன் அவளுடன் பலவந்த மாக இணைவதிலிருந்தும் அவளைப் புண்படுத்துவதிலிருந்தும் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும் எனும் விஷயம் தெளிவுபடுகிறது. அதுபோன்ற செயல் நியாயமாக இருப்பின், நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அதைக் கணவனுக்கு அனுமதித்திருப்பார்கள்.

இரண்டாவதாக, மனைவி தன்னைத் தயார்நிலையில் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது இயல்புநிலைமைகளில் பொருந்தும். இஸ்லாமியச் சட்டங்கள் *(ஷரீஆ)* விதித்த இடர்களோ தகுந்த காரணமோ இருக்கும் நிலையில் அது பொருந்தாது. மனைவி தன் சுயஉரிமைகளை விட்டுத்தர வேண்டியநிலை இல்லாதவரை, அவள் தன் கணவனுக்குப் பணிய கடமைப்பட்டிருக்கிறாள். எனவே, இதுபற்றிய பல்வேறு ஹதீஸ்கள், தங்கள் கணவன்மார்களுக்கு எதிராக உடலுறவை ஆயுதமாகப் பயன்படுத்தும் பெண்களுக்கே ஓர் எச்சரிக்கையாக அமைந்துள்ளன.

எனினும், மனைவி மாதவிடாயில் இருந்தால் அல்லது பேறுகால இரத்தப்போக்கு கொண்டிருந்தால் அல்லது நோயுற்றிருந்தால் அல்லது உடல்ரீதியாக உடலுறவுகொள்ள இயலாமல் இருந்தால் அல்லது களைப்புற்று, உணர்வெழுச்சி குன்றியிருந்தால் அல்லது உடலுறவுச் செயல்பாடு அவளின் நலனைப் பாதிக்கக்கூடியதாய் இருந்தால், தன் கணவனின் உடலுறவுக் கோருதலுக்கு அவள் இணங்கவேண்டிய கட்டாயம் இல்லை. மாறாக, அவள் உடலுறவுகொள்ள இயாலாமல் இருக்கலாம் என கணவன் புரிந்துகொண்டு அவள்மீது அனுதாபம் காட்டவேண்டும். எனினும், வெறுமனே 'அதற்கான மனநிலையும் விருப்பமும் இல்லை' என்பது நியாயப்பாடாக அமையாது.

அல்லாஹ் கூறுகிறான்:

لَا يُكَلِّفُ اللَّهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا

*எந்தவொரு ஆன்மாவின் மீதும் அது தாங்கவியலாத சுமையை அல்லாஹ் சுமத்துவதில்லை. (குர்ஆன் 2:286)*

மனைவி கடும் நோயுற்று, உடலுறவுகொள்ள சக்திபெறாத நிலையில் இருப்பதைப் பொருட்படுத்தாது, தன் பாலியல் தேவைகளை

நிறைவேற்றுமாறு கணவன் மனைவியிடம் கோரும் பல உதாரணங்களை நாம் காண்கிறோம். சிலர், மணவிலக்கு செய்துவிடுவதாக மனைவிமார்களை மிரட்டுகின்றனர். தங்களின் இந்த நடத்தைக்கு மேற்கூறிய ஹதீஸ்களை ஆதாரமாகக் காட்டுகின்றனர்! மனைவி உடலுறவில் ஈடுபடும் நிலையில் இல்லாது, அதற்காக ஓர் உண்மையான மற்றும் இஸ்லாமியரீதியாகத் தகுந்த காரணம் இருப்பினும் கணவன் அவளை நிர்ப்பந்தித்தால், அவர் பாவம் செய்தவராகிறார். பெண்களும் மனிதப் பிறவிகளே; விரும்பும் போதெல்லாம் 'ஆன்', 'ஆஃப்' செய்துகொள்ள அவர்கள் இயந்திரங்கள் அல்லர் என்பதை முஸ்லிம் கணவன்மார்கள் உணர்ந்துகொள்ள வேண்டும்.

அறுதியாக, இந்த விவகாரங்களை மிகச் சிறந்த முறையில் தீர்ப்பதற்கான வழிகள்: ஒருவருக்கொருவர் புரிந்துகொள்ளுதல், மதிப்பு மரியாதை, அன்பு, பண்பு, பரிவு, துணைவருக்குத் தன்னைவிட முன்னிடம் அளிப்பது ஆகியவையே. நீங்கள் உங்களுக்கு விரும்புவதையே மற்றவர்களுக்கும் விரும்பாதவரை (உண்மையான) இறை நம்பிக்கையாளராக முடியாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறுகிறார்கள் (*ஸஹீஹ் முஸ்லிம் 45*). இந்தக் கருத்தாக்கம் தாம்பத்திய உறவில் மேலும் கூடுதலான முக்கியத்துவம் பெறுகிறது.

### மனைவியின் உரிமை

ஆணைப் போல், பெண்ணுக்கும் பாலியல் தேவைகள் உண்டு. எனினும், ஆணைப்போலன்றி, பெண் தன் பாலியல் வேட்கைகள்மீது கூடுதல் கட்டுப்பாடு கொண்டவள். இந்த வித்தியாசம், ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் நிலவும் உடல், உணர்வெழுச்சி மற்றும் உள்ளுர இயல்புணர்ச்சி ரீதியான வேறுபாடுகளினால் தோன்றுகிறது.

பொதுவாக, பெண் தன் பாலியல் தேவைகளை நிறைவேற்றும்படிக் கேட்கமாட்டாள். மாறாக, அவளுக்கு இச்சை ஏற்படும்பொழுது, தன் கணவனை வசீகரிப்பதற்குப் பல்வேறு உத்திகளைக் கையாளுவாள்: தன்னை அலங்கரித்துக்கொள்ளுதல், ஆசைதூண்டும் வகையில் அவரிடம் பேசுதல், ஏக்கத்துடன் அவரைப் பார்த்தல் முதலியன. மாதவிடாய் சுழற்சி முடிந்ததும் பெண்ணின் பாலுறவு விருப்பம் மிகுந்திருக்கும் என்பது மருத்துவ வல்லுநர்களின் கருத்து. புரிந்துகொள்ளும் கணவன் இதை உணர்ந்து, தன் மனைவியின் சமிக்ஞைகளை உணர்ந்து செயல்படுவான்.

கணவன், தன் மனைவியின் பாலியல் தேவைகளை நிறைவேற்றுவது மார்க்கக் கடமையாகும். ஒரு தகுந்த காரணமோ அனுமதியோ இன்றி,

மனைவியின் இந்த உரிமையை அளிக்கத் தவறினால் அவர் பாவம் செய்தவராவார். எனவேதான், கணவன் தன் மனைவியுடன் சிறிது காலத்திற்கு ஒருமுறை (அடிக்கடி) உடலுறவு கொள்ளவேண்டும் எனப் பல சட்டவியலாளர்கள் கருதுகின்றனர். (காண்க. பதாயி அல்-சனாயி 2:331)

அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரழி) அறிவிக்கிறார்:

أَنْكَحَنِي أَبِي امْرَأَةً ذَاتَ حَسَبٍ ، فَكَانَ يَتَعَاهَدُ كَنَّتَهُ فَيَسْأَلُهَا عَنْ بَعْلِهَا فَتَقُولُ: نِعْمَ الرَّجُلُ مِنْ رَجُلٍ ، لَمْ يَطَأْ لَنَا فِرَاشًا وَلَمْ يُفَتِّشْ لَنَا كَنَفًا مُنْذُ أَتَيْنَاهُ ، فَلَمَّا طَالَ ذَلِكَ عَلَيْهِ ذَكَرَ لِلنَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ: الْقَنِي بِهِ ، فَلَقِيتُهُ بَعْدُ فَقَالَ: كَيْفَ تَصُومُ؟ قُلْتُ: كُلَّ يَوْمٍ ، قَالَ: وَكَيْفَ تَخْتِمُ؟ قُلْتُ: كُلَّ لَيْلَةٍ ، قَالَ: صُمْ فِي كُلِّ شَهْرٍ ثَلَاثَةً ، وَاقْرَإِ الْقُرْآنَ فِي كُلِّ شَهْرٍ ، قَالَ قُلْتُ: أُطِيقُ أَكْثَرَ مِنْ ذَلِكَ ، قَالَ: صُمْ ثَلَاثَةَ أَيَّامٍ فِي الْجُمُعَةِ ، قُلْتُ: أُطِيقُ أَكْثَرَ مِنْ ذَلِكَ ، قَالَ: أَفْطِرْ يَوْمَيْنِ وَصُمْ يَوْمًا ، قَالَ قُلْتُ: أُطِيقُ أَكْثَرَ مِنْ ذَلِكَ ، قَالَ: صُمْ أَفْضَلَ الصَّوْمِ صَوْمَ دَاوُدَ ، صِيَامَ يَوْمٍ وَإِفْطَارَ يَوْمٍ ، وَاقْرَأْ فِي كُلِّ سَبْعِ لَيَالٍ مَرَّةً

என்னுடைய தந்தை என்னை ஒரு நல்ல பரம்பரையைச் சேர்ந்த பெண்ணுக்கு மணம்முடித்துக் கொடுத்தார். அவர் வழக்கமாக, தன் மருமகளுடன் – அதாவது, அவருடைய மகனின் மனைவியிடம் – கலந்துபேசி, அவளுடைய கணவன் குறித்துக் கேட்பதுண்டு. அப்போது அவள் கூறுவாள்: 'ஆஹா, அவர் பிரமாத மான மனிதர் அல்லவோ! நான் அவரிடம் வந்த நாள்தொட்டு அவர் என்னுடன் படுக்கையில் உறங்கவும் இல்லை; என்மீதுள்ள திரையை விலக்கவும் இல்லை!' இது நீண்ட காலம் நீடித்தபோது, அவர் (என்னுடைய தந்தை) இதுகுறித்து அல்லாஹ்வின் தூதரிடம் கூறிவிட்டார்: 'அவரை என்னிடம் அனுப்பிவையுங்கள்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள். எனவே, விரைவில் நான் அவர்களைச் சந்திக்கச் சென்றேன். 'எத்தனை நாளைக்கு ஒருமுறை நீர் நோன்பு நோற்கிறீர்?' என்று கேட்டார்கள். 'தினமும்' என்றேன். 'எத்தனை நாளைக்கு ஒருமுறை நீர் குர்ஆனை ஓதிமுடிக்கிறீர்?' என வினவினார்கள். 'ஒவ்வொரு இரவும்' எனக் கூறினேன். அதற்கு அவர்கள், 'மாதம் தோறும் மூன்று நாட்கள் நோன்பு நோற்கவும்; மாதம் ஒருமுறை குர்ஆனை ஓதிமுடிக்கவும்' என்றார்கள். 'அதைவிட அதிகமாகச் செய்யும் ஆற்றல் எனக்கு உண்டு' என்றேன். அதற்கு அவர்கள், 'அப்படியென்றால், வாரம் தோறும் மூன்று நாள்கள் நோன்பு நோற்கவும்' என்றார்கள். 'அதைவிட அதிகமாகச் செய்யும் ஆற்றல் எனக்கு உண்டு' என்றேன். 'ஒவ்வொரு இரண்டு நாள்களுக்குப் பின்னும் நோன்பு நோற்கவும்' என்றார்கள். 'அதைவிட

அதிகமாகச் செய்யும் ஆற்றல் எனக்கு உண்டு' என்றேன். அதற்கு அவர்கள் இவ்வாறு கூறினார்கள், 'மிக உயர்ந்த வகை நோன்பான தாவூதின் நோன்பை நோற்கவும். அவர் ஒருநாள் விட்டு ஒருநாள் நோன்பு நோற்கக்கூடியவராய் இருந்தார்; மேலும் ஏழு நாள்களில் ஒருமுறை குர்ஆனை ஓதி முடிப்பவராய் இருந்தார்...' *(ஸஹீஹ் அல்-புஹாரி* ***4765****)*

இதுபோன்ற இன்னொரு ஹதீஸை அப்துல்லாஹ் இப்னு அம்ர் *(ரழி)* அறிவிக்கிறார்:

قَالَ لِي رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: يَا عَبْدَ اللَّهِ ، أَلَمْ أُخْبَرْ أَنَّكَ تَصُومُ النَّهَارَ وَتَقُومُ اللَّيْلَ ، فَقُلْتُ: بَلَى يَا رَسُولَ اللَّهِ ، قَالَ: فَلَا تَفْعَلْ ، صُمْ وَأَفْطِرْ وَقُمْ وَنَمْ ، فَإِنَّ لِجَسَدِكَ عَلَيْكَ حَقًّا ، وَإِنَّ لِعَيْنِكَ عَلَيْكَ حَقًّا ، وَإِنَّ لِزَوْجِكَ عَلَيْكَ حَقًّا ، وَإِنَّ لِزَوْرِكَ عَلَيْكَ حَقًّا ، وَإِنَّ بِحَسْبِكَ أَنْ تَصُومَ كُلَّ شَهْرٍ ثَلَاثَةَ أَيَّامٍ ، فَإِنَّ لَكَ بِكُلِّ حَسَنَةٍ عَشْرَ أَمْثَالِهَا ، فَإِنَّ ذَلِكَ صِيَامُ الدَّهْرِ كُلِّهِ. فَشَدَّدْتُ فَشُدِّدَ عَلَيَّ ، قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ ، إِنِّي أَجِدُ قُوَّةً؟ قَالَ: فَصُمْ صِيَامَ نَبِيِّ اللَّهِ دَاوُدَ عَلَيْهِ السَّلَامُ وَلَا تَزِدْ عَلَيْهِ ، قُلْتُ: وَمَا كَانَ صِيَامُ نَبِيِّ اللَّهِ دَاوُدَ عَلَيْهِ السَّلَامُ؟ قَالَ: نِصْفَ الدَّهْرِ ، فَكَانَ عَبْدُ اللَّهِ يَقُولُ بَعْدَ مَا كَبِرَ: يَا لَيْتَنِي قَبِلْتُ رُخْصَةَ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) என்னிடம் கூறினார்கள், 'நீர் எல்லா நாள்களும் நோன்பு நோற்பதாகவும் எல்லா இரவுகளும் நின்றுவணங்குவதாகவும் எனக்குத் தகவல் கிடைத்துள்ளதே, அது உண்மையா?' அதற்கு நான், 'ஆம், அல்லாஹ்வின் தூதரே' என்றேன். அவர்கள் கூறினார்கள்: 'அவ்வாறு செய்யாதீர். நோன்பு நோற்கவும் செய், திறக்கவும் செய்; நின்றுவணங்கவும் செய், உறங்கவும் செய். ஏனெனில், உம்முடைய உடலுக்கு உம்மீது உரிமை உள்ளது; உம்முடைய கண்ணுக்கு உம்மீது உரிமை உள்ளது; உம்முடைய மனைவிக்கு உம்மீது உரிமை உள்ளது; மற்றும், உம்மைப் பார்க்க வருபவருக்கு உம்மீது உரிமை உள்ளது. மாதத்தில் மூன்று நாள்கள் நோன்பு நோற்பது உமக்குப் போதுமானது. ஒவ்வொரு நற்செயலும் பத்து மடங்காகப் பெருகும்; எனவே, அது எப்பொழுதும் நோன்பு நோற்பதற்குச் சமமாகிவிடும்'. எனினும், நான் அப்போது துறவறப்போக்கு கொண்டிருந்தேன். எனக்கு நானே சிலவற்றைக் கடுமையாக்கிக் கொண்டேன். 'அல்லாஹ்வின் தூதரே, எனக்கு (மேலும்) ஆற்றல் உள்ளது' என்றேன். அதற்கு அவர், 'அல்லாஹ்வின் தூதர் தாவூதின் நோன்பு போன்று நோற்றுக்கொள்ளவும்; ஆனால், அதைவிடக் கூடுதலாக நோற்கவேண்டாம்' என்றார்கள். 'தாவூதின் நோன்பு என்பது என்ன?' என நான் வினவினேன். 'அரைவாசி காலம் (நோன்பு நோற்பது)' என்று கூறினார்கள்.*

*பின்னர் அப்துல்லாஹ் முதுமை அடைந்துவிட்டபோது இவ்வாறு கூறுவார்: 'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அளித்த மிக எளிதானவற்றை நான் ஏற்று இருந்திருக்கவேண்டும் என விரும்புகிறேன்.' (ஸஹீஹ் அல்-புஹாரி 1874)*

இந்த ஹதீஸில், அப்துல்லாஹ் இப்னு அம்ருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்), வழிபாட்டில் மிதமாக இருக்குமாறு அறிவுரை கூறுகிறார்கள். அவர் தம் மனைவியுடன் படுத்துறவாடி இருக்கவில்லை என்பதை அறிந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்), 'உம்முடைய மனைவிக்கு உம்மீது உரிமை உள்ளது' என அவரிடம் கூறி, மனைவியின் பாலுறவு முதலிய பிற தேவைகளைக் கணவன் நிறைவேற்றவேண்டிய கடமையைத் தெளிவாக வரையறுக்கிறார்[2].

*அபூ ஜுஹைஃபா அறிவிக்கிறார்:*

آخَى النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بَيْنَ سَلْمَانَ وَأَبِي الدَّرْدَاءِ ، فَزَارَ سَلْمَانُ أَبَا الدَّرْدَاءِ فَرَأَى أُمَّ الدَّرْدَاءِ مُتَبَذِّلَةً ، فَقَالَ لَهَا : مَا شَأْنُكِ؟ قَالَتْ : أَخُوكَ أَبُو الدَّرْدَاءِ لَيْسَ لَهُ حَاجَةٌ فِي الدُّنْيَا ، فَجَاءَ أَبُوالدَّرْدَاءِ فَصَنَعَ لَهُ طَعَامًا ، فَقَالَ: كُلْ ، قَالَ: فَإِنِّي صَائِمٌ ، قَالَ: مَا أَنَا بِآكِلٍ حَتَّى تَأْكُلَ ، قَالَ: فَأَكَلَ ، فَلَمَّا كَانَ اللَّيْلُ ذَهَبَ أَبُوالدَّرْدَاءِ يَقُومُ ، قَالَ: نَمْ ، فَنَامَ ، ثُمَّ ذَهَبَ يَقُومُ ، فَقَالَ: نَمْ ، فَلَمَّا كَانَ مِنْ آخِرِاللَّيْلِ قَالَ سَلْمَانُ: قُمِ الْآنَ ، فَصَلَّيَا ، فَقَالَ لَهُ سَلْمَانُ : إِنَّ لِرَبِّكَ عَلَيْكَ حَقًّا ، وَلِنَفْسِكَ عَلَيْكَ حَقًّا ، وَلِأَهْلِكَ عَلَيْكَ حَقًّا ، فَأَعْطِ كُلَّ ذِي حَقٍّ حَقَّهُ ، فَأَتَى النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَذَكَرَ ذَلِكَ لَهُ ، فَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ : صَدَقَ سَلْمَانُ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சல்மானையும் அபூதர்தாவையும் சகோதரர்களாகச் சேர்த்துவைத்தார். சல்மான் (ரழி) அபூதர்தாவின் வீட்டுக்குச் சென்றார். அங்கு உம்மு தர்தா (அபூதர்தாவின் மனைவி) நல்ல உடையணியாமல் இருப்பதைக் கண்ட அவர், 'உமக்கு என்ன பிரச்சினை?' எனக் கேட்டார். அதற்கு அவர், 'உங்கள் நண்பர் அபூதர்தாவுக்குத்தான் இந்த*

[2] இந்த ஹதீஸ், நபித்தோழிகளின் கற்புப் பேணுதல், நாணம், அடக்கம் ஆகியவற்றின் முன்மாதிரிகளை நமக்கு எடுத்துரைப்பதோடு, அவர்கள் தங்கள் கணவன்மார்களின் அலட்சியத்தை எப்படி பொறுமையுடன் சகித்துக்கொண்டனர் என்பதையும் கூறுகிறது. இங்கு மேற்கோள் காட்டப்பட்டுள்ள எடுத்துக்காட்டில், அப்துல்லாஹ் இப்னு அம்ரின் மனைவி தன் கணவர் குறித்து தன்னுடைய மாமனார் வினவியபோது அவருக்குப் பண்பாக பதிலளித்திருப்பது, நல்லொழுக்கத்திற்கும் சகிப்புத்திறனுக்கும் தலைசிறந்ததோர் எடுத்துக்காட்டு.

உலகமே தேவையில்லையே!' என்றார். (அதாவது, தன்னுடைய மனைவி தனக்காக அலங்கரித்து இருக்கிறாளா இல்லையா என்பதை அவர் பொருட்படுத்தவில்லை; ஏனெனில், அல்லாஹ்வை வணங்குவதிலேயே மும்முரமாக இருந்தார்.) பின் அபூதர்தா வந்து அவருக்காக (சல்மானுக்காக) சிறிது உணவைத் தயாரித்து வைத்தார். '(நீங்களும்) சாப்பிடுங்கள்' என சல்மான் கூறினார். '(இல்லை) நான் நோன்பு நோற்றிருக்கிறேன்' என்றார் அவர். அதற்கு சல்மான் கூறினார், 'நீங்கள் சாப்பிடாதவரை நானும் சாப்பிட மாட்டேன்.' 'எனவே, அவர் சாப்பிட்டார்' என்பதாக சல்மான் (பிறகு) கூறினார். இரவில் அபூதர்தா நின்றுவணங்கச் சென்றபோது, 'படுத்து உறங்குங்கள்!' என அவரிடம் சல்மான் கூறினார். எனவே, அவர் படுத்து உறங்கினார். பிறகு அவர் மீண்டும் எழுந்தபோது, படுத்து உறங்குங்கள்! என (மீண்டும்) சல்மான் கூறினார். பின்னர், இரவின் பிற்பகுதியை அடைந்த போது, 'இப்போது நீங்கள் எழுங்கள்' என சல்மான் கூறினார். இருவரும் ஒன்றாகத் தொழுதனர். அதன்பின் அவரிடம் சல்மான் இவ்வாறு கூறினார்: 'உம்முடைய இறைவனுக்கு உம்மீது உரிமை உள்ளது; உம்மீதும் உமக்கு உரிமை உள்ளது; உம்முடைய மனைவிக்கும் உம்மீது உரிமை உள்ளது. எனவே, உரிமையுள்ள ஒவ்வொருவருக்கும் அவரவரது உரிமையை அளிக்கவும்.' (பின்னர்), அபூதர்தா அல்லாஹ்வின் தூதரிடம் வந்து இவ்விஷயத்தைக் கூறியபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: 'சல்மான் உண்மையே உரைத்துள்ளார்.' (*ஸஹீஹ் அல்-புஹாரி* **1867**)

கணவன் தன் மனைவியின் தேவைகளை நிறைவேற்றுவதற்காக அவளுடன் எத்தனை நாள்களுக்கு ஒருமுறை உடலுறவு கொள்வது என்பது குறித்து அறிஞர்களிடையே கருத்துவேறுபாடு நிலவுகிறது:

1. இமாம் அபூ ஹாமித் அல்-கஸ்ஸாலியின் கருத்தில், ஒரு மனிதர் தன் மனைவியுடன் நான்கு இரவுகளுக்கு ஒருமுறை உடலுறவு கொள்வது மார்க்கக் கடமை எனக் கூறப்படுகிறது. இந்தக் கண்ணோட்டத்திற்கு பின்வரும் சம்பவம் ஆதாரமாக இருக்கிறது:

கதாதாவும் ஷஅபியும் அறிவிப்பதாக அப்துர் ரஸ்ஸாக் தம்முடைய *அல்-முஸன்னஃபில்* கூறுகிறார்: ஒரு பெண்மணி உமரிடம் வந்து, 'என் கணவர் இரவில் நின்றுவணங்குகிறார், பகலில் நோன்பு நோற்கிறார்' என்றாள். உமர் (ரழி) கூறினார், 'நீர் உம் கணவரை மிகச் சிறப்பாகப் போற்றியிருக்கிறாய்.' அதற்கு கஅப் இப்னு சவ்வார், அவள் (அசலில்) புகார் செய்கிறாள் என்று உமரிடம் கூறினார். 'எப்படி?' என்று உமர் கேட்டார். 'அவள் தன் கணவரிடமிருந்து திருமணப் பங்கை பெறுவதில்லை எனக் கோருகிறாள் (அதாவது, தன்னுடைய உரிமைகளை அவளது கணவன் நிறைவேற்றுவதில்லை)' என்றார். அதற்கு உமர் (ரழி) கூறினார், 'இந்த அளவிற்கு நீர் புரிந்திருந்தால், நீரே அவர்களுக்கு இடையில் தீர்ப்புக் கூறவும்.' அப்போது அவர் (கஅப்) இவ்வாறு கூறினார்: 'அமீருல் முஃமினீனே! நான்கு மனைவிகளைத் திருமணம் செய்ய அல்லாஹ் அனுமதித்துள்ளான். எனவே, நான்கு பகல்களில் ஒரு பகலும்,

நான்கு இரவுகளில் ஓர் இரவும் அவளுக்கு உரிமை உண்டு.' (*சுயூத்தி, தாரீஃக் அல்-குலஃபா* ப.161)

இதன் அடிப்படையில், நான்கு இரவுகளில் ஒருமுறை ஒரு மனிதர் தன் மனைவியின் பாலுறவுத் தேவைகளை நிறைவேற்றவேண்டும் என்பது கஸ்ஸாலியின் கருத்து. ஏனெனில், அவருக்கு நான்கு மனைவிகள் இருப்பின், அவர் மற்ற மூன்று இரவுகளை தன்னுடைய மற்ற மனைவிகளுடன் கழிப்பதற்கு அனுமதி உண்டு. ஹனஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் தஹாவியும் (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) இந்த நிலைப்பாட்டிற்கே ஆதரவு தெரிவித்துள்ளார். (காண்க: *ரத் அல்-முஹ்தார்* 3:203 மற்றும் *ஜதீத் ஃபிக்ஹி மஸாயில்* 2:172)

2. இமாம் இப்னு ஹஸமின் கருத்தில், ஒரு மனிதர் மாதத்தில் ஒருமுறை தன் மனைவியுடன் படுக்கையில் கூடுவது மார்க்கக் கடமை. அவர் கூறுகிறார்: 'ஒரு மனிதர் – அவரால் இயன்றால் – மாதவிடாய்களுக்கு இடையே உள்ள ஒவ்வொரு காலத்திலும் ஒருமுறையாவது தன் மனைவியுடன் உடலுறவு கொள்வது கடமை. இல்லாவிட்டால், அவர் பாவியாகிவிடுவார்.' இதற்கு ஆதாரம், அல்லாஹ்வின் (பின்வரும்) வாசகம்: 'எனினும், அவர்கள் தூய்மையடைந்துவிட்டால், அவர்களை அல்லாஹ் கட்டளையிட்டுள்ள இடத்திலிருந்து அணுகுங்கள்.' (*அல்-முஹல்லா* ப.1672)

'அவர்களை அணுகுங்கள்' என்ற அல்லாஹ்வின் சொற்களிலிருந்து இப்னு ஹஸம் தமது கருத்தைப்பெற்று, இது கடமையைக் குறிக்கும் ஒரு கட்டளை என்கிறார். ஆனால் அறிஞர்கள் பலர் மாதவிடாய்க்குப் பின் உடலுறவை அனுமதிக்கும் வாசகமாகவே கருதுகின்றனர். அதாவது, மாதவிடாய் உடலுறவைத் தடுத்திருந்தது; எனவே, அவள் தூய்மையடைந்ததும், உடலுறவுக்கான அனுமதியை அல்லாஹ் திரும்ப அளிக்கிறான் என எண்ணுகின்றனர். ஆனால், இமாம் இப்னு ஹஸமோ, இந்த வசன உரையின் நேர்பொருளை விளங்கி, ஒருவரின் மனைவி மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்ததும் அவளுடன் உடலுறவுகொள்வது கடமையென சட்டதீர்ப்பு அளித்தார்.

3. அறிஞர்கள் சிலரின் கருத்துப்படி, ஒரு மனிதர் தன் மனைவியுடன் நான்கு மாதங்களில் ஒருமுறை கட்டாயம் உடலுறவுகொள்ள வேண்டும்; இல்லாவிட்டால், அவர் பாவியாகிவிடுவார். இவர்கள் தங்களின் நிலைப்பாட்டிற்குப் பின்வரும் சம்பவத்தை ஆதாரமாகக் காட்டுகின்றனர்:

இப்னு ஜரீர் அறிவிக்கிறார்: 'நான் நம்பும் ஒருவர் இந்தத் தகவலை என்னிடம் கூறினார்: உமர் இப்னு அல்-ஃகத்தாப் (ரழி) ரோந்து வரும்பொழுது

*ஒரு பெண் இவ்வாறு கூறுவதை (கவிதை பாடுவதை) செவியுற்றார், 'இந்த இரவோ நீண்டு செல்கிறதே, இருள் சூழ்ந்துள்ளதே, (ஆனால்) என்னுடன் நெருங்கியிருக்க தோழன் இல்லையே. என் உறக்கம் தொலைந்ததே. தனக்கு இணையில்லாத அல்லாஹ்வின் அச்சம் மட்டும் இல்லையெனில், இந்தப் படுக்கையின் இருபக்கங்கள் அங்குமிங்கும் நகர்ந்திருக்குமே.' உமர் (ரழி) கேட்டார், 'உமக்கு என்ன நேர்ந்தது?' அதற்கு அவள், 'நீங்கள் தான் என் கணவரை சில மாதங்களுக்குமுன் போருக்கு அனுப்பிவிட்டீரே, இங்கே நான் அவருக்காக ஏங்கிக்கொண்டிருக்கிறேன்' என்றாள். 'உமக்கு தவறிழைக்கும் எண்ணம் இருக்கிறதா?' என்று அவர் கேட்டார். அதற்கு அவள், 'அல்லாஹ்விடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்!' என்றாள். அவர் கூறினார், 'அப்படியென்றால் நீர் உம்மைக் கட்டுப்படுத்திக்கொள். அவருக்கு வெறும் ஒரு செய்தி அனுப்பினாலே போதும். விஷயம் தீர்ந்துவிடும்.' உமர் (ரழி) அவரை (திரும்பி வருமாறு) பணித்து செய்தி அனுப்பினார். பின்னர் அவர் (உமர்) தன் மகள் ஹஃப்ஸாவிடம் சென்று கேட்டார்: 'என் விஷயம் சம்பந்தப்பட்ட ஒன்றை நான் உன்னிடம் கேட்க விரும்புகிறேன். அதற்குத் தீர்வு கூறவும். ஒரு பெண் தன் கணவன் இன்றி எவ்வளவு காலம் தாக்குப் பிடிக்க முடியும்?' அவர் (ஹஃப்ஸா) வெட்கத்தில் தன் தலையைத் தாழ்த்திக்கொண்டார். 'நிச்சயமாக அல்லாஹ் உண்மையான விஷயத்தில் வெட்கம்கொள்வதில்லை' என்றார் அவர் (உமர்). ஆகையால், அவர் (ஹஃப்ஸா) தன் கையால் சைகை காட்டினார் – மூன்று மாதங்கள் அல்லது, இயலாவிட்டால், நான்கு மாதங்கள் என. எனவே, நான்கு மாதங்களுக்கு மேலாக இராணுவப் படைகள் பணியில் அமர்த்தப்படக்கூடாது என உமர் உத்தரவு பிறப்பித்தார்.' (தாரீஃக் அல்-குலஃபா ப.**161-162**)[3]*

புகழ்பெற்ற ஹம்பலி சட்டவியலாளரான இமாம் முவஃப்பக் இப்னு குதாமாவும் (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) இந்த நிலைப்பாட்டுடன் உடன்படுகிறார். இது, அவருடைய ஹம்பலி மற்றும் ஒப்பியல் சட்டத்தின் தலைசிறந்த நூலான *அல்-முக்னியில்* இடம்பெற்றுள்ளது. கணவன் நோயுற்றல் போன்ற தகுந்த இஸ்லாமியக் காரணங்களால் தம் மனைவியின் பாலியல் தேவைகளை நிறைவேற்றாமல் இருந்தால், அவர் அவளுடன் உடலுறவு கொள்வதற்கெனக் குறிப்பிட்ட காலஅளவு எதுவும் இல்லை. எனினும், சரியான காரணமின்றி அவர் உடலுறவைத் தவிர்த்தால், அவர் நான்கு மாத காலத்திற்குள்ளாக உடலுறவு கொள்வது கடமையாகும். இந்த கால

[3] உமர் இப்னு அல்-ஃகத்தாப் (ரழி) இக்கேள்வியைத் தம் மனைவியிடம் கேட்காது, மகளிடம் கேட்டுள்ளார் என்பது கவனிக்கவேண்டிய விஷயம். இதற்கான காரணத்தை மௌலானா அஷ்ரஃப் அலி தானவி இவ்வாறு கூறுகிறார்: 'உமர் தம் மகளிடமிருந்து நேரிய விடையை எதிர்பார்த்தார். தம் மனைவியைப் பொறுத்தவரை, கேட்பது அவளுடைய கணவன் என்பதால் அவளுடைய விடை பாரபட்சமாக அமையக்கூடிய சாத்தியம் உண்டு என உமர் எண்ணினார்.' *(அல்-இஃபாதாத் அல்-யவ்மிய்யா மின் அல்-இஃபாதாத் அல்-கவ்மிய்யா* **2:300***)*

அவகாசத்திலும் அவர் அவளுடைய பாலுறவுத் தேவைகளை நிறை வேற்றத் தவறிவிட்டால், அவர் அவளை மணவிலக்கு செய்யுமாறு உத்தரவிடவேண்டும். (*அல்-முக்னி* 8:551-552)

4. ஹனஃபி அறிஞர்கள் பலர் உட்பட அநேக சட்டவியலாளர்களின் (*ஃபுகஹா*) கருத்தில், ஒரு கணவன் சிறிது காலத்திற்கு ஒருமுறை (அடிக்கடி) தன் மனைவியுடன் உடலுறவுகொள்வது மார்க்கக் கடமை; எனினும், இதற்குக் குறிப்பிட்ட கால அளவு எதுவும் இல்லை. முதன்மையான ஹனஃபி சட்டவியலாளரான இமாம் ஹஸ்கஃபி கூறுகிறார்: 'ஒரு கணவன் தன் மனைவியுடன் சிறிது காலத்திற்கு ஒருமுறை (அடிக்கடி) உடலுறவுகொள்வது மார்க்கக் கடமை. (உடலுறவு கொள்ளாமல்,) அவர் தன் மனைவியின் அனுமதியின்றி நான்கு மாதகால அவகாசத்தைக் கழிப்பது கூடாது...'

இமாம் இப்னு ஆபிதீன் இதை விளக்குகிறார்: கணவன், ஏதோ ஒரு வகையான நோய் அல்லது பிற தகுந்த காரணம் கொண்டிருந்தாலொழிய, தன் மனைவியுடன் சிறிது காலத்திற்கு ஒருமுறை (அடிக்கடி) உடலுறவு கொள்வது மார்க்கக் கடமை என்கிறார். அடுத்து, அவர் ஹனஃபி சிந்தனாவழியைச்சார்ந்த இமாம் தஹாவியின் கருத்தை மேற்கோள்காட்டுகிறார். அதாவது, கணவன் நான்கு இரவுகளில் ஒருமுறை தன் மனைவியுடன் உடலுறவுகொள்வது கடமை என்பதாக. எனினும், அவர் மேற்கொண்டு ஹனஃபி சிந்தனாவழியின் ஸ்தாபித்த நிலைப்பாட்டை (*ஸாஹிர் அல்-மத்ஹப்*) கூறுகிறார். அதாவது, இதற்குக் குறிப்பிட்ட கால அளவு எதுவும் இல்லை; மாறாக, சிறிது காலத்திற்கு ஒருமுறை (அடிக்கடி) கணவன் தன் மனைவியுடன் இரவைக் கழித்து அவளுடைய பாலுறவுத் தேவைகளை நிறைவேற்றுவது கட்டாயக் கடமையாகும். (காண்க: *ரத் அல்-முஹ்தார் அலா அல்-துர் அல்-முஃக்தார்* 3:202-203, பாப் அல்-கசம்)

இந்த நூலாசிரியரின் கருத்தில், இந்தக் கடைசி நிலைப்பாடே – குறிப்பாக, நம் காலகட்டத்தில் – மிக நியாயமான, நடைமுறைக்கு உகந்த ஒன்றாகத் தெரிகிறது. எனவே, கணவன் சிறிது காலத்திற்கு ஒருமுறை தன் மனைவியுடன் உடலுறவில் ஈடுபடவேண்டும். இது, அவள் விலக்கப்பட்ட செயலைச் செய்ய எண்ணாமல் இருக்கும் அளவு அக, புற கற்பு ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்கத் தகுந்தவாறு இருக்க வேண்டும். ஒரு மனிதர் தொடர்ந்து தன் மனைவியை மறுப்பார் எனில், அவர் பாவியாகி விடுவார்.

எனினும், கணவனுக்கான உடலுறவு உரிமை போலவே, தன் மனைவியின் பாலுறவுத் தேவைகளை நிறைவேற்றுவதற்கும் நிபந்தனை

உண்டு. அவர் தன் மனைவியுடன் உடலுறவுகொள்ளும் அளவிற்கு உடல் வலிமை பெற்றிருக்கவேண்டும். கணவன் மிகவும் நோய்வாய்ப் பட்டிருந்தால், அல்லது உடலுறவில் ஈடுபடவியலாத அளவு பலவீன மாக இருந்தால், அல்லது தன் மனைவியுடன் உடலுறவு கொள்வதன் விளைவாக தாங்கவியலாத பலவீனம் ஏற்படுமென்றால், அவர் தன் மனைவியின் பாலுறவுத் தேவைகளை நிறைவேற்றவேண்டிய அவசிய மில்லை. அதனால் பாவியாகவுமாட்டார்.

# 3

## உடலுறவு: எத்தனை நாள்களுக்கு ஒருமுறை?

உடலுறவுக்கான பெண்ணின் மார்க்க உரிமை குறித்து கலந்துரை யாடினோம். இப்போது, தம்பதியரின் பரஸ்பர மார்க்க உரிமைகள், கடமைகள் ஆகியவற்றை ஒதுக்கிவைத்துவிட்டு, தம்பதியர் ஒருவருக் கொருவர் சம்மதத்தின் மூலம் எத்தனை நாள்களுக்கு ஒருமுறை உடலுறவில் ஈடுபடவேண்டும் என்பதை விரிவாக ஆராய்வோம்.

ஒரு தம்பதியர் எத்தனை நாள்களுக்கு ஒருமுறை உடலுறவில் ஈடுபடலாம் என்பது பற்றி ஒரு குறிப்பிட்ட அளவையோ வரைமுறை யையோ ஷரீஆ நிர்ணயிப்பதில்லை. ஏனெனில், ஒவ்வொருவருக்கும் இயல்புணர்ச்சி, உடல்வாகு, பாலுணர்வு ஆகியவற்றில் பாரிய வேறுபாடு உள்ளது. எனவே, தங்களுக்கு மிகப் பொருத்தமான அளவை தம்பதியரே ஒருவருக்கொருவர் முடிவுசெய்துகொள்ள வேண்டும். இதில் ஒரு பொதுவான விதி இல்லை. தம்பதியர் இருவரின் தேவை களையும் பொறுத்து, வெவ்வேறு தம்பதியருக்கு விடை வெவ்வேறு விதமாக இருக்கும்.

எனினும், இஸ்லாம் ஒரு சமநிலைப்போக்குகொண்ட மார்க்கம். அதைப் பின்பற்றுபவர்கள், வாழ்வின் அனைத்துக் கூறுகளிலும் சமநிலை பேணவேண்டுமென ஊக்குவிக்கப்படுகின்றனர். ஏனெனில், நடுநிலைப் பாதையே மிகச்சிறந்த பாதை. இருதிசைகளிலும் தீவிரப் போக்குகொள்வது, இஸ்லாத்தின் உயிரோட்டத்திற்கு முரணானது. இஸ்லாத்தின் அனைத்துப் போதனைகளிலும் சமநிலைப்போக்கு ஊடுருவிக் கலந்துள்ளது. பாலியல் விவகாரங்களிலும்கூட சமநிலை அணுகுமுறையே அதன் இலட்சியமாக விளங்குகிறது.

முழுபிரம்மச்சர்யமோ குறைந்தபட்சத்திற்கும் குறைவான பாலுறவு செயல்பாடோ ஆரோக்கியமானதல்ல. எனவே, உடலுறவை முற்றிலும் துறப்பது தம்பதியருக்கு அறிவான செயலல்ல. ஏனெனில், அவர் களுடைய பாலியல் தேவைகளை நிறைவேற்றிக்கொள்வதற்கே அல்லாஹ் இதற்கான வழியை அவர்களுக்கு அருளியுள்ளான்.

அதேபோல், அளவுகடந்த உடலுறவும் உடல்நலத்திற்குக் கேடானது. ஃபகீஹ் அபுல் லைய்ஸ் அஸ்-ஸமர்கந்தி தமது *அல்-புஸ்தானில்* நபித்தோழர் அலீயிடமிருந்து இவ்வாறு அறிவிக்கிறார்: 'நீண்ட ஆரோக்கியமான ஆயுளை விரும்புபவர், காலையிலும் மாலையிலும் உண்ண வேண்டும்; கடன் வாங்குவதைத் தவிர்க்கவேண்டும்; வெறுங்காலோடு அங்குமிங்கும் செல்வதைத் தவிர்க்கவேண்டும்; அளவுகடந்த உடலுறவு கொள்வதிலிருந்து காத்துக்கொள்ளவேண்டும்.' *(கானூன்-ஏ-முபாஷராத் ப.16)*

இந்த அறிவுரை ஒரு ஷரீஆ சட்டத்தீர்ப்பு அல்ல; ஒரு பொதுவான அறிவுரை மட்டுமே. இது தொடர்பாக ஒருவர் தம் நிலை குறித்து கவலைகொண்டிருந்தால், அவர் வல்லுநர் ஒருவரை ஆலோசிப்பதே நல்லது.

அறிஞர்கள் சிலர், வாரம் ஒருமுறை உடலுறவுகொள்வதைப் பரிந்துரை செய்கின்றனர். இது, சமநிலைப்போக்கின் வட்டத்திற்குள் அமைந்திருப்பதாகக் கருதுகின்றனர். இந்த நிலைப்பாட்டுக்கு ஆதாரமாக அவர்கள் அவ்ஸ் இப்னு அவ்ஸ் அஸ்-ஸகஃபி (ரழி) அறிவித்த நபிமொழியைக் கூறுகின்றனர். அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறுகிறார்:

مَنْ غَسَّلَ يَوْمَ الْجُمُعَةِ وَاغْتَسَلَ ، ثُمَّ بَكَّرَ وَابْتَكَرَ وَمَشَى وَلَمْ يَرْكَبْ وَدَنَا مِنْ الْإِمَامِ فَاسْتَمَعَ وَلَمْ يَلْغُ ، كَانَ لَهُ بِكُلِّ خُطْوَةٍ عَمَلُ سَنَةٍ : أَجْرُ صِيَامِهَا وَقِيَامِهَا

எவர் வெள்ளிக்கிழமை நாளன்று (தன் மனைவியை) குளிக்கச் செய்வித்து, தானும் குளித்துவிட்டு, (வெள்ளிக்கிழமை தொழுகைக்கு) நேரத்திலேயே புறப்பட்டு, வாகனத்தில் செல்லாமல் நடந்துசென்று, இமாமுக்கு அருகில் உள்ளதொரு இடத்தில் அமர்ந்து, கவனமாக அவரைச் செவியேற்று, வீண் செயலில் ஈடுபடுவதைத் தவிர்க்கிறாரோ, அவருக்கு, அவர் எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடிக்கும் பகரமாக, ஓராண்டு காலம் நோன்பு நோற்று இரவில் தொழுத நன்மை கிடைக்கும். *(சுனன் அபூ தாவூத் **349** சுனன் அல்-நஸாயி **1381**, அபூ தாவூதில் உள்ள சொற்களே இங்கு இடம்பெற்றுள்ளன)*

இந்த நபிமொழியில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) *மன் கஸ்ஸல* எனும் சொற்றொடரைப் பயன்படுத்துகின்றார். இதன் நேரடி மொழிபெயர்ப்பு, 'இன்னொருவரைக் குளிப்பாட்டும் ஒருவர்' அல்லது 'இன்னொருவரைக் குளிக்கச் செய்விக்கும் ஒருவர்'. இந்த வாசகத்தை இமாம் சுயூத்தி (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) *சுனன் அல்-நஸாயீ*யிற்கான தம்முடைய விரிவுரையில் இவ்வாறு விளக்குகிறார்: '...*கஸ்ஸல* (மற்றொருவரைக் குளிப்பாட்டுதல் அல்லது குளிக்கச்

செய்வித்தல்) என்பதன் (உட்)பொருள், ஒருவர் (வெள்ளிக்கிழமை) தொழுகைக்குச் செல்லுமுன் தம் மனைவியுடன் உடலுறவுகொள்ளுதல் எனக் கூறப்படுகிறது. ஏனெனில் இது, வழியில் அவருடைய பார்வை யைத் தாழ்த்திக்கொள்ள உதவும்...' *(சுனன் அல்-நஸாயி பி ஷரஹ் அல்-சுயூத்தி* 3:95)

இமாம் இப்னு குதாமா கூறுகிறார்: 'மன் *கஸ்ஸல வ இக்தஸல* என்ற அல்லாஹ்வின் தூதருடைய வாசகத்தின் பொருள், அவர் தம் மனைவி யுடன் உடலுறவுகொண்டுவிட்டு குளிக்கிறார் என்பதே.' *(அல்-முக்னி* 2:201)

இதன்படி, இந்த நபிமொழியின் பொருள்களுள் ஒன்று, எவர் வெள்ளிக் கிழமையன்று தம் மனைவியுடன் உடலுறவுகொண்டு, பின் தானும் குளித்து தன் மனைவியையும் குளிக்கச் செய்வித்து, கூறப்பெற்றுள்ள பிற செயல்களை நடைமுறைப்படுத்துகிறாரோ, அவருக்கு, அவர் வெள்ளிக்கிழமை தொழுகைக்காக எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடிக்கும் பகரமாக, ஒருவருட காலம் நோன்பு நோற்று இரவில் தொழுத நன்மை கிடைக்கும்.

வெள்ளிக்கிழமை வாரம் ஒருமுறை வருவதால், வாரம் ஒருமுறை உடலுறவுகொள்வது பரிந்துரைக்கப்பட்டதும் சமநிலை உயிரோட்டத் திற்குப் பொருத்தமானதுமாகும் என இந்த அறிஞர்கள் கருதுகின்றனர்.

முடிவாக, சமநிலைப் போக்கே பொன்விதி. அடிக்கடி உடலுறவு கொள்வது களைப்பையும் உடல்நலக் கெடுதியையும் ஏற்படுத்தலாம். மறுபுறம், முற்றிலுமாக உடலுறவைத் துறப்பது அல்லது அதைக் குறைந்த பட்சத்திற்கும் குறைவாக ஆக்குவது கேடுவிளைவிப்பதாகவும் உடல் நலக் கெடுதியாகவும் விளங்கலாம். தம்பதியர், பாலுறவு செயல்பாடு ரீதியாக தங்களால் அடையவியலும் நோக்கம் குறித்து சமரசம் செய்துகொள்ளவேண்டும். இதன்மூலம் ஒருவருக்கொருவர் திருப்தி யேற்படுத்தும் அளவில் நிலைபெற்றுக்கொள்ள இயலும். இதை அடைவதற்கான மிகச் சிறந்த வழி, நேரிய, மரியாதையான கலந் தாலோசனையே ஆகும். இதன்மூலம், தம்பதியர் இருவருக்கும் உடலுறவு அதிக நிறைவளிக்கக்கூடியதாக விளங்கும், *இன்ஷா அல்லாஹ்* (இறைவன் நாடினால்).

# 4

## உடலுறவுக்கான நேரத்தைத் தேர்ந்தெடுத்தல்

பொதுவாக, உடலுறவுச் செயல்பாடுகளில் ஈடுபடுவதற்கோ தவிர்த் திருப்பதற்கோ குறிப்பிட்ட நேரம் எதையும் ஷரீஆ ஒதுக்கவில்லை. தம்பதிகள் உடலுறவுகொள்வதற்கு இரவு, பகலில் எந்த நேரத்தை வேண்டுமானாலும் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். இதற்கு விதி விலக்கு, உடலுறவைத் தடுக்கும் புறக் காரணிகள் மட்டுமே. எடுத்துக் காட்டாக, ஒருவர் இன்னும் தொழுதிராத நிலையில் தொழுகைக்கான நேரம் முடிவடையும் வேளை, மனைவி மாதவிடாயில் இருக்கும் வேளை போன்றவை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இரவு, பகல் எனப் பல்வேறு நேரங்களில் தம் மனைவிகளுடன் உடலுறவு கொண்டிருக் கின்றார் என நம்பகமான அறிவிப்புகள் உள்ளன.

மேலும், உடலுறவுக்கான தூண்டுதலும், தம்பதியருக்குப் போதிய வீரியமும் ஓய்வும் இருந்தாலே உடலுறவுச் செயல்பாடு நடக்கும் என்பதால், உடலுறவுக்குக் குறிப்பிட்ட நேரத்தை விதியாகத் திணிப்பது நடைமுறைக்கு ஒவ்வாதது. தம்பதிகள் தங்களின் பணியின் கால அளவு, ஓய்வு, உறக்க நேரங்கள், உடலுறவுக்கான ஆசை ஆகியவற்றில் ஒருவருக்கொருவர் வேறுபாடு கொண்டுள்ளனர். இதன் காரணமாக, அவர்கள் எந்த நேரத்தில் உடலுறவுகொள்ள வேண்டும் என்பது குறித்து ஷரீஆ சட்டத்தில் இடம்பெறவில்லை.

எனினும், உடலுறவுச் செயல்பாடுகளுக்கு சாதகமான மற்றும் விரும்பத்தகாத சில குறிப்பிட்ட நேரங்களை அறிஞர்கள் கூறி யுள்ளனர். இதுபற்றி, நபித்தோழர்களிடமிருந்தும் தொடக்ககால முஸ்லிம்களிடமிருந்தும் வாசகங்கள் அறிவிக்கப்பட்டுள்ளன.

இந்த விருப்பத்தெரிவுகள் - மருத்துவக் காரணங்கள், சுய அனுப வங்கள் அல்லது சுய முடிவுகளின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன; இவை சட்டத் தீர்ப்பு (ஷர்'ஈ) அல்ல என்பதை இங்குக் குறிப்பிடுவது முக்கியம். இவற்றைக் கடைப்பிடிக்காமல் இருப்பதில் பாவம் எதுவும்

இல்லை. இது தொடர்பாக, நபித்தோழர்களிடமிருந்தும் தொடக்ககால முஸ்லிம்களிடமிருந்தும் மேற்கோள்காட்டப்படும் பல கூற்றுகள் சரியான வரிசைத் தொடர் மூலமாக நம்பகத்தன்மை நிறுவப்படாதவை. எடுத்துக்காட்டாக, இந்தத் தலைப்பில் நபித்தோழர் அலீயிடமிருந்து அறிவிக்கப்படும் ஒரு கவிதை.

இவ்வாறிருக்க, கீழே தரப்பட்டுள்ள அறிவுரை கட்டாயமானது அல்லது நம்பத்தக்கது எனக் கருதத் தேவையில்லை. அதன் தகுதிக்கு மேலாக முக்கியத்துவம் அளிக்கப்படக் கூடாது. அதேவேளை, சில புத்தகங்களில், உடலுறவுக்கு விரும்பத்தகுந்த அல்லது தவிர்க்கப் படவேண்டிய நேரங்கள் எனக் கூறப்பட்டிருப்பதை அடிப்படையற்றது எனக் கருதுவதும் கூடாது. இந்தப் பரிந்துரைகள் எல்லாம் அனுபவங்கள், சுய முடிவுகள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே உள்ளன. இந்தக் கருத்துச் சூழலில்தான் 'விரும்பத்தக்கவை', 'விரும்பத்தகாதவை' போன்ற சொற்களைப் பின்வரும் பத்திகளில் புரிந்துகொள்ள வேண்டும்.

### விரும்பத்தக்க நேரங்கள்

1. உடலுறவுக்கு ஏதுவான நேரம் - ஓய்வாக இருக்கும் வேளை, தம்பதியர் இருவரிடத்திலும் சமமான இயல்புணர்ச்சி நிலவும் வேளை. பதற்றம், ஏதாவது கவலை அல்லது பசி, தாகம், சோகம், நோய்நொடி போன்றவை இச்சையைக் குன்றச்செய்துவிடலாம்; மேலும், உடல் நலத்திற்குக் கெடுதியாக விளங்கக்கூடும். சிலருக்கு ஏதுவான நேரம் இரவுதான். அப்பொழுதுதான் கணவன் பணிநெருக்கடியில் மூழ்காமல் இருக்கும்வேளை. வேறு சிலரோ, காலைநேரம் தூக்கத்திலிருந்து எழுந்தவுடனே திடமாகவும் வீரியத்துடனும் இருப்பார்கள்.

2. அறிஞர்கள் சிலர், இரவின் பிற்பகுதியே உடலுறவுக்கு மிகப் பொருத்தமான நேரம் எனக் கருதுகின்றனர். ஏனெனில், இரவின் முதற்பகுதியில் வயிறு நிறைந்திருக்கும். நிறைந்த வயிற்றுடன் உடலுறவு கொள்வது கெடுதியானது. முழுமையாக உணவுச் செரிமானம் ஆனபின்பே தம்பதியினர் உடலுறவு கொள்வது மிகப்பொருத்தமாக இருக்கும். இதுவே அல்லாஹ்வின் தூதருடைய வழக்கமும்கூட. இருப்பினும், இறைத்தூதர் நேரங்களிலும் தம்முடைய மனைவிமார் களுடன் படுத்துறவாடி இருக்கின்றார்கள்.

அபூ இஸ்ஹாக் அறிவிக்கிறார்கள்: 'அல்லாஹ்வின் தூதருடைய (இரவுநேரத்) தொழுகை குறித்து ஆயிஷா (ரழி) அவரிடம் என்ன கூறினார் என அல்-அஸ்வத் இப்னு யஸீதிடம் கேட்டேன். அவர் (ஆயிஷா) இவ்வாறு கூறியிருக்கிறார்:

كَانَ يَنَامُ أَوَّلَ اللَّيْلِ وَيُحْيِي آخِرَهُ . ثُمَّ إِنْ كَانَتْ لَهُ حَاجَةٌ إِلَى أَهْلِهِ قَضَى حَاجَتَهُ ثُمَّ يَنَامُ . فَإِذَا كَانَ عِنْدَ النِّدَاءِ الأَوَّلِ . قَالَتْ : وَثَبَ – وَلَا وَاللَّهِ مَا قَالَتْ : قَامَ – فَأَفَاضَ عَلَيْهِ الْمَاءَ – وَلَا وَاللَّهِ مَا قَالَتْ : اغْتَسَلَ . وَأَنَا أَعْلَمُ مَا تُرِيدُ – وَإِنْ لَمْ يَكُنْ جُنُبًا تَوَضَّأَ وُضُوءَ الرَّجُلِ لِلصَّلَاةِ ثُمَّ صَلَّى الرَّكْعَتَيْنِ

*அவர்கள் இரவின் முதற்பகுதியில் உறங்கி, பிற்பகுதியில் (தொழுகைக்காக) எழுந்திருப்பார்கள். அப்போது அவர்கள் தம் மனைவியுடன் தம் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள நாடினால், விருப்பத்தை நிறைவேற்றிவிட்டு உறங்கி விடுவார்கள். தொழுகைக்கான முதல் அழைப்புக் கொடுக்கப்பட்டதும் அவர்கள் குதித்தெழுவார்கள் (அல்லாஹ்வின் மீது ஆணையாக, 'அவர்கள் எழுந்து நிற்பார்கள்' என்று ஆயிஷா கூறவில்லை). பிறகு தம்மீது நீரை ஊற்றிக்கொள்வார்கள் (அல்லாஹ்வின் மீது ஆணையாக, அவர்கள் குளித்தார்கள் என ஆயிஷா கூறவில்லை. எனினும், அவர் கூறியதை நான் விளங்கிக்கொண்டேன்). (எனினும்,) அவர்கள் குளிப்பு கடமையான நிலையில் இருக்கவில்லை எனில், (வெறுமனே) தொழுகைக்கான ஒளு - கைகால் கழுவி தூய்மை செய்துகொண்டு, இரு ரக்ஆத்துகள் * (ஃபஜ்ர் தொழுகையின் சுன்னா) தொழுவார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 739)*

இரவின் இறுதிவரை காத்திருப்பதற்கு சிரமப்படுபவர்கள், மாலை நேர முற்பகுதியில் சிறிதளவு உணவு உட்கொள்வதை நடைமுறைத் தீர்வாக ஆக்கிக்கொள்ளலாம். இதன்மூலம், இரவின் முதற்பகுதியில் உடலுறவு கொள்ளும்பொழுது வயிறு நிறைந்திருக்காது.

*3.* வெள்ளிக்கிழமை நாளிலும் அதற்கு முந்தைய இரவிலும் உடலுறவு கொள்வது பரிந்துரைக்கப்பட்டது. சிலர் இதை நன்மையான செயல் எனக் கருதுகின்றனர். இமாம் அபூ ஹாமித் அல்-கஸ்ஸாலி புகழ் பெற்ற தம்முடைய *இஹ்யா உலூம் அல்-தீனில்,* அறிஞர்கள் சிலரின் கருத்துப்படி வெள்ளிக்கிழமையன்றும் அதற்கு முந்தைய இரவிலும் உடலுறவு கொள்வது பரிந்துரைக்கப்பட்டது *(முஸ்தஹப்)* எனக் கூறுகிறார். இதற்குக் காரணமாக விளங்குவது, தாமும் குளித்து தமது மனைவியையும் குளிக்கச் செய்விப்பதற்கான நற்கூலி குறித்த, அவ்ஸ் இப்னு அவ்ஸ் அஸ்-தகஃபியின் மேற்கூறிய நபிமொழியே என்கிறார். (காண்க: *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* **6:175**)

## விரும்பத்தகாத நேரங்கள்

*1.* மலஜலம் கழிக்கும் தேவை உள்ளபொழுது உடலுறவுகொள்வது

* *ரக்ஆத்துகள்:* உடலசைவுகளுடன் கூடிய வணக்க வழிபாட்டின் அலகு (ப-ர்)

விரும்பத்தகாததும் உடல்நலக்கேடு விளைவிப்பதுமாகும். இது தொடர்பாக ஒரு ஹதீஸும் உள்ளது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளதாக அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கிறார்:

لَا يُجَامِعَنَّ أَحَدُكُمْ وَبِهِ حَقْنٌ مِنْ خَلَاءٍ ، فَإِنَّهُ يَكُونُ مِنْهُ الْبَوَاسِيرُ ، وَلَا يُجَامِعَنَّ أَحَدُكُمْ وَبِهِ حَقْنٌ مِنْ بَوْلٍ ، فَإِنَّهُ يَكُونُ النَّوَاصِيرُ

மலம் கழிக்கும் தேவை உள்ளபொழுது உங்களில் எவரும் உடலுறவு கொள்ளக் கூடாது. அது மூலநோயை ஏற்படுத்தும் *(பவாசீர்)*. சிறுநீர்க் கழிக்கும் தேவை உள்ளபொழுது உங்களில் எவரும் உடலுறவுகொள்ளக் கூடாது. அது கட்டிகளைத் தோற்றுவிக்கும் *(நவாஸீர்)*. *(கன்ஸ் அல்-உம்மால்* **44902,** இந்த அறிவிப்பிற்கான வரிசைத் தொடரின் நம்பகத்தன்மை சோதிக்கப் படாதது)

2. மாதத்தில் மூன்று நாள்கள் உடலுறவுகொள்வது விரும்பத்தகாதது என இமாம் கஸ்ஸாலி தம்முடைய நூல் *இஹ்யாவில்* கூறுகிறார். அதாவது முதல், கடைசி மற்றும் நடு (பதினான்காம்) இரவுகளில். இந்த இரவுகளில், தம்பதியருக்கு இடையில் உடலுறவு நேரும்பொழுது *(ஷைத்தான்கள்)* தோன்றுவார்கள் எனக் கூறப்படுகிறது. இந்த இரவுகளில் உடலுறவுகொள்வது வெறுக்கப்பட்டது என்பது அலீ, முஆவியா, அபூஹுரைரா ஆகியோரிடமிருந்து அறிவிக்கப்படுகின்றது. (காண்க: *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* **6:175)**

## கர்ப்பகாலத்திலும் தாய்ப்பாலூட்டும் காலத்திலும் உடலுறவு

மனைவி கர்ப்பமாய் இருக்கும்போது உடலுறவுகொள்வதற்கு அனுமதி உண்டு என்பதில் அறிஞர்களுக்கிடையே கருத்துவேறுபாடு இல்லை. அதேபோல், தாய்ப்பாலூட்டுக் காலங்களில் உடலுறவுகொள்வதும் அனுமதிக்கப்பட்டதே.

சஅத் இப்னு வக்காஸ் (ரழி) அறிவிக்கிறார்:

أَنَّ رَجُلًا جَاءَ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ: إِنِّي أَعْزِلُ عَنِ امْرَأَتِي ، فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: لِمَ تَفْعَلُ ذَلِكَ؟ فَقَالَ الرَّجُلُ: أُشْفِقُ عَلَى وَلَدِهَا أَوْ عَلَى أَوْلَادِهَا ، فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: لَوْ كَانَ ذَلِكَ ضَارًّا ، ضَرَّ فَارِسَ وَالرُّومَ

*ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து, 'நான் என் மனைவியுடன் (உறவு கொள்ளும்பொழுது) விலக்கிவிடுதல் முறையை (அஸ்ல் - விந்து வெளியேறுவதற்கு முன் ஆணுறுப்பை பெண்ணுறுப்பிலிருந்து எடுத்துவிடுதல்) பின்பற்றுகிறேன்' என்றார். 'ஏன் அவ்வாறு செய்கிறீர்?' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கேட்டார்கள். 'அவளுடைய குழந்தைக்காகவோ குழந்தைகளுக் காகவோ நான் அஞ்சுகிறேன்' என அவர் பதிலளித்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: 'அது கெடுதியாய் இருப்பின், பாரசீகர்களையும் பைசாந்தியர்களையும் அது பாதித்திருக்குமே.' (ஸஹீஹ் முஸ்லிம் 1443)*

மாபெரும் ஹதீஸ் அறிஞரும் ஹனஃபி சட்டவியலாளருமான முல்லா அலீ அல்-காரி (அல்லாஹ் அவர்மீது கருணைபுரியட்டும்) இதற்கு இவ்வாறு விளக்கமளிக்கிறார்: அந்த மனிதர் தம் மனைவியின் கருவறையில் உள்ள குழந்தையின் நிலை குறித்து அஞ்சினார். அவளுடன் உடலுறவுகொள்வது அவளை மீண்டும் கர்ப்பமாக்கலாம். அதன் மூலம் இரட்டைக் குழந்தைகள் உண்டாகி, இரு சிசுக்களும் பலவீனமடை யலாம். இரண்டாவது விளக்கம், தாய்ப் பாலூட்டப்படும் குழந்தையின் நிலை குறித்து அவர் அஞ்சினார் – உடலுறவு, தாய்ப்பாலூட்டப்படும் குழந்தையை பாதிக்கலாம் என்று. இந்த இரு யோசனைகளையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) மறுத்துரைத்தார். கர்ப்பம் அல்லது தாய்ப் பாலூட்டுக் காலத்தின்போது உடலுறவு கெடுதியானதாக இருப்பின், அது பாரசீகர்களையும் பைசாந்தியர்களையும் பாதித்திருக்க வேண்டுமே என்றார். (காண்க: *மிர்காத் அல்-மஃபாதிஹ்* 6:238)

ஜுதாமா பின்த் வஹ்ப் அல்-அசதிய்யா (ரழி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) பின்வருமாறு கூறுவதைத் தாம் செவியுற்றதாக அறிவிக்கிறார்:

لَقَدْ هَمَمْتُ أَنْ أَنْهَى عَنْ الْغِيلَةِ حَتَّى ذَكَرْتُ أَنَّ الرُّومَ وَفَارِسَ يَصْنَعُونَ ذَلِكَ فَلَا يَضُرُّ أَوْلَادَهُمْ

*தாய்ப்பாலூட்டுக் காலத்தின்போது (கய்லா) உடலுறவு தடைசெய்யப் பட்டிருப்பதாக நான் கருதியிருந்தேன். எனினும், பைசாந்தியர்களும் பாரசீகர்களும் இதைச் செய்கின்றபோதிலும் அவர்களின் குழந்தைகள் பாதிக்கப்படுவதில்லை என்பது என் நினைவுக்கு வந்தது... (ஸஹீஹ் முஸ்லிம் 1442)*

மேலும், இன்னொருவர் மூலம் கர்ப்பமானதொரு பெண்ணுடன் உடலுறவுகொள்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தடுத்தார்கள் (*சுனன் அல்-திர்மிதீ* 1131). இதிலிருந்து, தன் மூலம் கர்ப்பமான பெண்ணுடன் உடலுறவுகொள்வது அனுமதிக்கப்பட்டது எனும் முடிவை அறிஞர்கள் ஆய்ந்துபெற்றனர்.

இந்த விஷயங்கள் ஒருபுறமிருக்க, தம்பதியர் கர்ப்பத்தின்போதும், தாய்ப்பாலூட்டுக் காலங்களிலும் உடலுறவுகொள்ளுமுன் முறையான

மருத்துவ ஆலோசனை பெறவேண்டும் என அறிஞர்கள் பரிந்துரைக்கின்றனர். ஒரு குறிப்பிட்ட தம்பதியர், மருத்துவ வல்லுநரின் ஆலோசனைப்படி, கர்ப்பம் அல்லது தாய்ப்பாலூட்டுக் காலத்தில் உடலுறவு கொள்வது கெடுதியானது – தாய்க்கோ பாலூட்டப்படும் குழந்தைக்கோ, அல்லது சிசுவிற்கோ ஆபத்தானது – என அறிவுறுத்தப் பட்டால், உடலுறவு தவிர்க்கப்படவேண்டும் (*அதபே முபாஷராத்* ப.*34-35*). இந்தக் கருத்துச்சூழலில், மேற்கண்ட நபிமொழியை இயல்பான நிலைமைகளுக்கே பொருந்தும் என விளங்கிக்கொள்ள வேண்டும்.

மேலும், கணவன் தன் கர்ப்பமுற்ற மனைவியுடன் உடலுறவு கொள்ளும்பொழுது, மிகுந்த மென்மையோடும் எச்சரிக்கையோடும் இருப்பதை உறுதிசெய்வது அவசியம். அவளுக்குத் தொல்லை தரும் நிலைகளை அவர் தவிர்க்கவேண்டும் - குறிப்பாக, கர்ப்பகாலத்தின் இறுதிக் கட்டங்களில். ஏனெனில் அப்பொழுது, மனைவிக்கு வெகு விரைவில் களைப்பு ஏற்படலாம். (அஹ்மது கன்ஆன், *உசூல் அல்-முஆஷரா அல்-ஸவ்ஜிய்யா* ப.79)

## *மாதவிடாய் (ஹய்ளு), பேறுகால இரத்தப்போக்கு (நிஃபாஸ்) காலத்தில் உடலுறவு*

*1.* மாதவிடாய் காலத்தில் புணர்வது, முற்றிலும் அழுத்தம் திருத்தமாய்த் தடுக்கப்பட்டுள்ளது (*ஹராம்*). இது குர்ஆனின் தெளிவான வாசகத்தினாலும் ஏராளமான நபிமொழிகளினாலும் நிறுவப்பட்டுள்ளது. இதற்கு முஸ்லிம் சமூகத்தினருக்கும் அறிஞர்களுக்குமிடையே முழுமையான கருத்தொற்றுமை (*இஜ்மா*) நிலவுகிறது.

அல்லாஹ் கூறுகிறான்:

وَيَسْأَلُونَكَ عَنِ الْمَحِيضِ قُلْ هُوَ أَذًى فَاعْتَزِلُوا النِّسَاءَ فِي الْمَحِيضِ وَلَا تَقْرَبُوهُنَّ حَتَّى يَطْهُرْنَ
فَإِذَا تَطَهَّرْنَ فَأْتُوهُنَّ مِنْ حَيْثُ أَمَرَكُمُ اللَّهُ إِنَّ اللَّهَ يُحِبُّ التَّوَّابِينَ وَيُحِبُّ الْمُتَطَهِّرِينَ

*அவர்கள் மாதவிடாய் குறித்து உம்மிடம் கேட்பார்கள். (நீர்) கூறும்: அது அசுத்தமானது. எனவே, மாதவிடாயின் போது பெண்களிடமிருந்து விலகியிருங்கள். அவர்கள் தூய்மையடையும்வரை அவர்களை அணுகாதீர்கள். எனினும், அவர்கள் தூய்மையடைந்து விட்டால், அல்லாஹ் கட்டளையிட்டபுறங்களிலிருந்து அவர்களை அணுகுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பாவமீட்சி தேடுபவர்களை நேசிக்கின்றான்; சுய பரிசுத்தம் கொண்டவர்களையும் நேசிக்கின்றான். (குர்ஆன் 2:222)*

*அனஸ் (ரழி) அறிவிக்கிறார்:*

أَنَّ الْيَهُودَ كَانُوا إِذَا حَاضَتْ الْمَرْأَةُ فِيهِمْ ، لَمْ يُؤَاكِلُوهَا وَلَمْ يُجَامِعُوهُنَّ فِي الْبُيُوتِ ، فَسَأَلَ أَصْحَابُ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ، فَأَنْزَلَ اللَّهُ تَعَالَى: وَيَسْأَلُونَكَ عَنِ الْمَحِيضِ قُلْ هُوَ أَذًى فَاعْتَزِلُوا النِّسَاءَ فِي الْمَحِيضِ إِلَى آخِرِ الْآيَةِ ، فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: اصْنَعُوا كُلَّ شَيْءٍ إِلَّا النِّكَاحَ

*யூத சமூகத்தில் பெண்கள் மாதவிடாயில் இருந்தால், அவர்களுடன் உண்ணமாட்டார்கள்; அவர்களுடன் (மாதவிடாய் பெண்களுடன்) தங்கள் வீட்டில் சகவாசம் கொள்ளமாட்டார்கள். எனவே, அல்லாஹ்வின் தூதருடைய தோழர்கள் இறைத்தூதரிடம் (இப்பழக்கத்தைப் பற்றி) வினவினார்கள். அப்போது அல்லாஹ் இவ்வசனத்தை வெளிப்படுத்தினான்: 'அவர்கள் மாதவிடாய் குறித்து உம்மிடம் கேட்பார்கள். (நீர்) கூறும்: 'அது அசுத்த மானது. எனவே, மாதவிடாயின் போது பெண்களிடமிருந்து விலகியிருங்கள்' என வசன இறுதிவரை. ஆக, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: 'உடலுறவைத் தவிர வேறு அனைத்தையும் செய்து கொள்ளுங்கள்.' (ஸஹீஹ் முஸ்லிம் 302)*

*அபூஹுரைரா (ரழி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்:*

مَنْ أَتَى حَائِضًا أَوْ امْرَأَةً فِي دُبُرِهَا أَوْ كَاهِنًا فَقَدْ كَفَرَ بِمَا أُنْزِلَ عَلَى مُحَمَّدٍ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ

*மாதவிடாயில் இருக்கும் பெண்ணுடனோ பெண்ணின் ஆசனவாயிலோ புணர்பவரும், குறிசொல்பவரிடம் செல்பவரும் முஹம்மதுக்கு இறை வசனம் இறக்கியருளப்பட்டதை நிராகரித்துவிட்டவர் (குஃப்ர்) ஆவர். (சுனன் அல்-திர்மிதீ 135)*

இந்த ஹதீஸில் கூறப்பட்டுள்ள *குஃப்ர்*, இச்செயல்களின் கடுமையை *(தஹ்லீழ்)* சுட்டுவதாக உள்ளது. ஏனெனில், மாதவிடாய் காலத்தில் புணர்வதும் ஆசனவாய் புணர்ச்சியும் குறிசொல்பவரின் கூற்றை உண்மை யென ஏற்பதும் இறைநிராகரிப்புக்கு நெருக்கமான விஷயங்கள். வேறுசிலரின் கருத்தில், இந்தச் செயல்கள் சட்டப்படி சரி *(இஸ்திஹ்லாலன்)* எனக் கருதிய நிலையில் ஒருவர் செய்வாராயின், ஐயமின்றி அவர் இஸ்லாத்தின் வட்டத்திலிருந்து விலகிச் சென்றவராகிவிடுவார். (காண்க: *துஹ்ஃபத் அல்-அஹ்வாதி பி ஷரஹ் ஜாமிஃ அல்-திர்மிதீ* 1:440)

இமாம் நவவி கூறுகிறார்: 'ஒருவர் தன் மனைவியுடன் (மாதவிடாய் காலத்தில்) புணர்வது விலக்கப்பட்டது என்பதில் முஸ்லிம்கள்

கருத்தொற்றுமை கொண்டுள்ளனர். ஏனெனில், அது குர்ஆன் மற்றும் சுன்னாவின் வெளிப்படையான, தெளிவான வாசகங்களால் நிறுவப் பட்டுள்ளது. இஸ்லாமிய அறிஞர்களின் கூற்றுப்படி, மாதவிடாயில் இருக்கும் பெண்ணின் பெண்ணுறுப்பில் புணர்வதை நியாயமானது எனக் கருதும் முஸ்லிம் இறைநிராகரிப்பாளராக ஆகிவிடுகிறார் *(காஃபிர்);* மற்றும், மார்க்கத்தைத் துறந்துவிட்டார் *(முர்தத்).* எனினும், ஒருவர் இதை ஆகுமானதாகக் கருதாமலோ மறதியாகவோ *(நிஸ்யான்)* பெண் மாதவிடாயில் இருப்பதை அறியாமலோ அதன் தடை குறித்து அறியாமலோ கட்டாயப்படுத்தப்பட்டதனாலோ அதில் ஈடுபடுவாரா யின், அது பாவச்செயலாக ஆகாது; அதற்காகப் பரிகாரம் வழங்கவும் தேவையில்லை. எனினும், அவள் மாதவிடாயில் இருப்பதை அறிந்தும், அதன் தடையை அறிந்தும், சுய விருப்பத்திலேயே அவளுடன் உடலுறவு கொள்வாராயின், நிச்சயமாக அவர் பெரும் பாவம் *(கபீரா)* இழைத்து விட்டவராவார். இது பெரும் பாவம்தான்; இதற்கு உளப்பூர்வமான பாவமீட்சி அவசியம் என்பதை இமாம் ஷாஃபி (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) வலியுறுத்தியுள்ளார். (*அல்-மின்ஹாஜ் ஷரஹ் முஸ்லிம்* ப. 366)

மருத்துவ நோக்கிலும் மாதவிடாய் கால புணர்ச்சி கெடுதியானது. மாதப்போக்குத் திரவத்தில் சில நச்சுப் பொருள்கள் கலந்துள்ளன. அவை ஆணின் உடலுக்குள் புகக்கூடும் அல்லது பெண்ணின் உடலி லிருந்து வெளியேறும் தடத்தில் தடைகள் ஏற்படுத்தக்கூடும். இது, பெண் மாதவிடாயில் இருக்கும்பொழுது புணர்வதால் ஏற்படலாம். எனவே, மாதவிடாய்கால உடலுறவின் விளைவாக ஆண், பெண் இருபாலருக்கும் பல்வேறு வகையான, வலிகூடிய மற்றும் - பல சந்தர்ப்பங்களில் - மரணம் ஏற்படுத்தவல்ல, இரத்தம் மூலம் நோய்கள் பரவும் அபாயத்தை அதிகரிக்கின்றன. (*மகப்பேறு நலவியல் பற்றிய ஆப்பிரிக்க இதழ்* தொ.8, எண்.2, ஆக. 2004 ப. 55-58)

எனவே, மாதவிடாய் காலத்தில் தம்பதியர், புணர்வதை முற்றிலு மாகத் தவிர்க்கவேண்டும். அவர்கள் ஒருவேளை அதில் ஈடுபட்டு விட்டால், அதற்காக உளப்பூர்வமாக பாவமீட்சி தேடி, அல்லாஹ் விடம் மன்னிப்புக் கோரவேண்டும். மேலும், பரிகாரம் எனும் வகையில் சிறிது தர்மமும் வழங்கவேண்டும்.

தம் மனைவி மாதவிடாயில் இருக்கும்பொழுது புணரும் மனிதர் குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதை அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:

يَتَصَدَّقُ بِنِصْفِ دِينَار

*அவர் அரை தினாரை தர்மமாகக் கொடுக்கவேண்டும். (சுனன் அல்-திர்மிதீ* ***136)***

செவ்விய அறிஞர்களில் பெரும்பான்மையினர் - இமாம் அபூ ஹனீஃபா, இமாம் மாலிக், இமாம் ஷாஃபி (அல்லாஹ் அவர்கள்மீது கருணை புரியட்டும்) உள்ளிட்டோர் - சிறிது தர்மம் செய்வது ஒருவருடைய பாவமீட்சியின் *(தவ்பா)* ஏற்புக்கு நிபந்தனை அல்ல; சுயவிருப்பமானதே எனக் கருதுகின்றனர். எனவே, அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருவதே போதுமானது. எனினும், இமாம் அஹ்மத் இப்னு ஹம்பல் (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) மற்றும் வேறுசிலரின் கருத்தில், உளப்பூர்வமான பாவமீட்சியுடன் சிறிது தர்மம் செய்வதும் அவசியம் எனப்படுகிறது. (காண்க: *அல்-மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம்* ப. **366-367)**

2. கணவன் தன் மனைவியுடைய உடலின் தொப்புளுக்கு மேலும், முழங்காலுக்குக் கீழும் உள்ள பகுதிகளில் நேரடி சருமத் தொடர்பு மூலம் இன்பம்பெற அனுமதியுள்ளது என்பதில் நான்கு *சிந்தனைப் பிரிவுகளும்* ஒருமித்த கருத்து கொண்டுள்ளன. அதாவது, முத்தமிடுதல், கட்டிப் பிடித்தல், தழுவுதல் எல்லாம் அனுமதிக்கப்பட்டவையே. கணவன் தன் மனைவியுடைய உடலின் தொப்புளுக்கு மேலும், முழங்காலுக்குக் கீழும் உள்ள எந்தப் பகுதியை வேண்டுமானாலும் தன் கைகளாலோ ஆண்குறியாலோ இதர அங்கங்களாலோ தொடலாம். மனைவி தன் கணவனுக்குத் தற்புணர்ச்சி (சுயஇன்பம்) செய்துவிடுவதும் அனுமதிக்கப் பட்டது. ஏனெனில், அவளுடைய உடலில் தொப்புளுக்கும் முழங் காலுக்கும் இடைப்பட்ட எந்தப் பகுதியையும் கணவன் தொடுவதில்லை. ஷெய்கு அபூ ஹாமித் அல்-இஸ்ஃபிராயினியும் வேறு பலரும், இந்த விஷயம் குறித்து அறிஞர்களிடையே முழு கருத்தொற்றுமை உள்ளதாக அறிவிக்கின்றனர். (*அல்-மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம்* ப.**367)**

*ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:*

كَانَ إِحْدَانَا إِذَا كَانَتْ حَائِضًا ، أَمَرَهَا رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَتَأْتَزِرُ بِإِزَارٍ ثُمَّ يُبَاشِرُهَا

*எங்களுள் ஒருவர் (அல்லாஹ்வின் தூதருடைய மனைவிமார்கள்) மாதவிடாயில் இருக்கும்பொழுது, அவளை இஸார் (தொப்புளுக்கும் முழங்காலுக்கும் இடையிலுள்ள மறைப்பு) அணியுமாறு பணித்து, அவளை அணுகுவார்கள். (சஹீஹ் முஸ்லிம்* ***293)***

தம் தந்தையின் சகோதரரிடமிருந்து ஹரம் இப்னு ஹாகிம் (ரழி) அறிவிக்கிறார்:

أَنَّهُ سَأَلَ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَا يَحِلُّ لِي مِنْ امْرَأَتِي وَهِيَ حَائِضٌ قَالَ لَكَ مَا فَوْقَ الْإِزَارِ

*அவர் அல்லாஹ்வின் தூதரிடம் வினவினார், என் மனைவி மாதவிடாயில் இருக்கும்பொழுது நான் அவளுடன் எதைச் செய்ய அனுமதியுள்ளது? அதற்கு அவர்கள், மறைப்புக்கு (இஸார்) மேலே உள்ள அனைத்தும் என்று கூறினார்கள். (சுனன் அபூ தாவூத் 214)*

ஹனஃபி சிந்தனாவழியின் குறிப்பு நூலான *அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யாவில்* கூறப்படுகிறது: 'இமாம் அபூ ஹனீஃபா மற்றும் இமாம் அபூ யூசுஃபின் கருத்துப்படி, மாதவிடாயில் இருக்கும் மனைவியை முத்தமிடுவதும் அவளுடன் படுத்துறங்குவதும் அவளுடைய முழு உடலையும் சுகித்து மகிழ்வதும் அனுமதிக்கப்பட்டது. இதற்கு விதி விலக்கு, (அவளுடைய) தொப்புளுக்கும் முழங்காலுக்கும் இடைப் பட்ட பாகம் மட்டுமே...' *(அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா 1:39)*

இமாம் இப்னு ஆபிதீன் தம் *ரத் அல்-முஹ்தாரில்* கூறுகிறார்: 'தொப்புளையும் அதற்கு மேலுள்ள எல்லா பாகங்களையும், முழுங் காலையும் அதன் கீழுள்ள எல்லா பாகங்களையும் மறைப்பு இல்லாமல் கூட சுகித்து மகிழ அனுமதியுண்டு.' *(ரத் அல்-முஹ்தார் அலா அல்-துர் அல்-முஃக்தார் 1:292)*

*3.* தொப்புளுக்கும் முழங்காலுக்கும் இடையிலுள்ள பகுதியைப் பொறுத்தவரை, பெரும்பான்மையான அறிஞர்களின் - இமாம் அபூ ஹனீஃபா, இமாம் மாலிக், இமாம் ஷாஃபி உள்ளிட்டோர் - கருத்தில், அந்தப் பகுதியில் நேரடி சருமத் தொடர்பு கூடாது, பாலியல் இச்சை *(ஷஹ்வா)* இருந்தாலும் இல்லாவிட்டாலும் சரியே. எனினும், (ஆடை போன்ற) தடுப்பு மூலம் கிளர்ச்சியூட்டுதல் போன்ற நேரடியற்ற தொடர்புக்கு அனுமதியுண்டு. ஆகவே, உடல் வெப்பம் கடப்பதைத் தடுக்கும் வகையில் தடுப்பாடை இருப்பின், கணவன் தன் ஆணு றுப்பைத் தன் மனைவியின் பிறப்புறுப்போடு தேய்க்க அனுமதி உண்டு. இந்த நிலைப்பாட்டிற்கு ஆதாரமாக இருப்பது, மறைப்பு ஆடை *(இஸார்)* அணிவதுபற்றி கூறும் நபிமொழிகளே.

ஹனஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் இப்னு ஆபிதீன் கூறுகிறார்: 'தொப்புளுக்கும் முழங்காலுக்கும் இடையிலுள்ள பகுதியைச் சுகித்து மகிழ்வதும் ஆகுமானது. எனினும், அதற்கு ஆடை போன்ற தடுப்பு இருக்கவேண்டும்; புணர்தல் கூடாது. இதனால் அனைத்து

இடங்களிலும் இரத்தம் பரவினாலும் தவறில்லை.' *(ரத் அல்முஹ்தார் அலா அல்-துர் அல்-முஃக்தார் 1:292)*

எனினும் இமாம் அஹ்மத் இப்னு ஹம்பல், இமாம் முஹம்மத் இப்னு அல்-ஹஸன், இமாம் நவவி மற்றும் வேறுசில அறிஞர்களின் கருத்தில், கணவன் தன் மனைவியின் உடலில் தொப்புளுக்கும் முழங்காலுக்கும் இடைப்பட்ட பகுதியைத் தடுப்பு இல்லாமலும் தொடலாம்; பெண்குறியும் ஆசனவாயும் தவிர்க்கப்பட்டாலே போதும். அவர்களின் இந்த நிலைப்பாட்டுக்கு ஆதாரமாக, 'புணர்ச்சியைத் தவிர மற்ற எல்லாம் செய்துகொள்ளலாம்' எனும் அல்லாஹ்வுடைய தூதரின் வாசகத்தைக் குறிப்பிடுகின்றனர். (இமாம்களின் பல்வேறு நிலைப்பாடுகள் பற்றி மேற்கொண்டு விவரங்கள் அறிவதற்குப் பார்க்க: ஃபத்ஹ் அல்-பாரி *1:525* மற்றும் *அல்-மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம் ப. 367)*

4. இறுதியாக இமாம் ஷாஃபி, இமாம் மாலிக், இமாம் அஹ்மது மற்றும், பெரும்பான்மையான முற்கால *(சலஃப்)* மற்றும் பிற்கால *(ஃகலஃப்)* அறிஞர்களின் கருத்துப்படி, மாதவிடாய் முடிவடைந்த பின்பும் உடலுறவுக்கான கட்டுப்பாடுகள் நீடிக்கும். இவை, மனைவி கட்டாயக் குளிப்பு *(குஸ்லு)* மேற்கொண்ட பின்பே அல்லது, தண்ணீர் கிடைக்காத சந்தர்ப்பத்தில், தயம்மம் செய்த பின்பே நீங்கும்.. *(அல்-மின்ஹாஜ் ப.367)*

எனினும், ஹனஃபி சிந்தனாவழியின்படி, இதுகுறித்து மேலும் சில விவரங்கள் உள்ளன. மாதவிடாய் அதிகபட்சம் பத்து நாளுக்குப் பிறகு முடிவடைந்தால், கட்டாயக் குளிப்பு இன்றியே உடலுறவு கொள் வதற்கு அனுமதியுண்டு. என்றாலும், குளிப்பது பரிந்துரைக்கப்பட்டது. மாதவிடாய் அதிகபட்சம் பத்து நாளுக்கு முன்பாக அல்லது அவளின் வழக்கமான மாதவிடாய் தவணைக்குப்பின் *(அதா)* முடிவடைந்தால், குளித்துவிட்டு அல்லது ஒரு தொழுகை நேரம் முழுதும் கழிந்த பின்புதான் உடலுறவுக்கு அனுமதியுண்டு. ஆனால், அவளின் வழக்க மான மாதவிடாய் தவணைக்குமுன் அது முடிவடைந்துவிட்டால், அவள் குளித்த பின்பும்கூட உடலுறவு கொள்வது தடுக்கப்பட்டதும் பாவமானதுமாகும். வழக்கமான தவணை முடியும்வரை அவள் காத்திருக்கவேண்டும். (காண்க: *ரத் அல்-முஃதார் 1:294* மற்றும் *இம்தாத் அல்-ஃபத்தாஹ் ஷரஹ் நூர் அல்-ஈதாஹ் ப.141-142)*

மாதவிடாய்க்குப் பொருந்தும் விதிகள், பேறுகால இரத்தப் போக்குக்கும் *(நிஃபாஸ்)* பொருந்தும். மற்றபடி, வழக்கத்திற்கு மாறான கர்ப்பப்பை இரத்தப்போக்கை *(இஸ்திஹாழா)* பொறுத்தவரை, அதற்கு

உடலுறவுக் கட்டுப்பாடுகள் எதுவுமில்லை. அச்சமயத்தில், இரத்தம் எங்கும் பரவினாலும்கூட, தம்பதியர் உடலுறவுகொள்வதற்கு அனுமதியுண்டு. எனினும், உடலுறவுக்குமுன், இரத்தத் தடயங்களை மனைவி தூய்மை செய்து நீக்கிவிடவேண்டும். *(ரத் அல்-முஹ்தார் **1:294**)*

# 5

## உடலுறவுக்குத் தயாராதல்

ஆரோக்கியமான உடலுறவைப் பராமரிப்பதற்கு, உளரீதியாகவும் உடல்ரீதியாகவும் தயாராகுதல் அதன் நீடிப்புக்கு முக்கியமானது. உடலுறவுக்குத் தயாராகுதல், புணர்ச்சிக்கு நிகராக முக்கியம் பெற்றுள்ளது. இருபாலரும் தங்களைத் தயாராக்கிக்கொள்வதில் கவனமாக இருப்பது மூலம், தங்கள் இணைவில் முழுமையான இன்பம் காணலாம். இந்த விஷயத்தில் அசட்டையாக இருப்பது, விபரீத விளைவுகளை ஏற்படுத்தக்கூடும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் மனைவிமார்களின் வீடுகளுக்குள் நுழையும்போது, தம் வாயையும் பற்களையும் பல்துலக்கி *(சிவாக்)* கொண்டு சுத்தம்செய்வது வழக்கம். ஷுரைஹ் இப்னு ஹானி அறிவிக்கிறார்:

سَأَلْتُ عَائِشَةَ ، قُلْتُ: بِأَيِّ شَيْءٍ كَانَ يَبْدَأُ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِذَا دَخَلَ بَيْتَهُ؟

قَالَتْ : بِالسِّوَاكِ

*'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் வீட்டினுள் நுழைந்ததும் முதலில் என்ன செய்தார்கள்' என்று நான் ஆயிஷாவிடம் வினவினேன். 'சிவாக்கைப் பயன்படுத்துவார்கள்' என அவர் பதிலளித்தார்.' (ஸஹீஹ் முஸ்லிம் 253)*

நீண்ட பயணங்களிலிருந்து திரும்பிவருகையில் அல்லாஹ்வின் தூதரும் அவருடைய தோழர்களும் இரவுநேரத்தில் தங்களுடைய வீடுகளுக்குள் எதிர்பாராவிதமாக நுழையமாட்டார்கள். மாறாக, தங்கள் மனைவிகளுக்கு முன்கூட்டியே செய்தியனுப்பி, அவர்கள் தங்கள் கணவர்களுக்குத் தயாராகவிருக்க அவகாசம் அளிப்பார்கள்.

كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي غَزَاةٍ ، فَلَمَّا قَدِمْنَا الْمَدِينَةَ ذَهَبْنَا لِنَدْخُلَ ،
فَقَالَ: أَمْهِلُوا حَتَّى نَدْخُلَ لَيْلًا أَيْ عِشَاءً كَيْ تَمْتَشِطَ الشَّعِثَةُ وَتَسْتَحِدَّ الْمُغِيبَةُ

நாங்கள் அல்லாஹ்வின் தூதருடன் ஒரு போர் நடவடிக்கைக்குச் சென்றிருந்தோம். நாங்கள் மதீனாவுக்குத் திரும்பியபோது, எங்கள் வீடுகளுக்குச் செல்ல நாடினோம். அப்போது நபியவர்கள் (ஸல்) கூறினார்கள்: 'மாலையில் பின்நேரம்வரை காத்திருந்து (வீடுகளுக்குச்) செல்லவும். இதன் மூலம், கலைந்த தலையுடன் இருக்கும் பெண் தன் கூந்தலைச் சீவி சரிசெய்துகொள்வாள்; தன் கணவன் உடன் இல்லாத நிலையில் உள்ள பெண் தன் பருவ முடிகளை மழித்துக்கொள்வாள்.' *(ஸஹீஹ் அல்-புஹாரி* **4949** மற்றும் *ஸஹீஹ் முஸ்லிம்* **1928,** இங்கு முஸ்லிமில் உள்ள சொற்களே இடம் பெற்றுள்ளன)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا قَدِمَ أَحَدُكُمْ لَيْلًا فَلَا يَأْتِيَنَّ أَهْلَهُ طُرُوقًا حَتَّى تَسْتَحِدَّ الْمُغِيبَةُ وَتَمْتَشِطَ الشَّعِثَةُ

உங்களில் ஒருவர் (பயணத்திலிருந்து மீண்டு) இரவுநேரத்தில் வரும் பொழுது, அவர் தன் குடும்பத்தாரிடம் ஓர் இரவு-விருந்தாளியாகச் செல்லக் கூடாது. (மாறாக சற்று தாமதிப்பது மூலம்) கணவன் வீட்டிலில்லாத பெண் தன் பருவ முடிகளை மழித்துக்கொள்ளவும், கலைந்த தலையுடன் இருக்கும் பெண் தன் கூந்தலைச் சீவி சரிசெய்துகொள்ளவும் இயலும். *(ஸஹீஹ் அல்- புஹாரி,* **4948** மற்றும் *ஸஹீஹ் முஸ்லிம்* **1928,** இங்கு முஸ்லிமில் உள்ள சொற்களே இடம்பெற்றுள்ளன)

இமாம் அபுல் ஃபராஜ் இப்னு அல்-ஜவ்ஸி தம்முடைய ஸைத் அல்-ஃகாதிரில் இவ்வாறு கூறுகிறார். அதாவது, தம்பதிகள் உடலுறவுக்கென பகலிலோ இரவிலோ குறிப்பிட்ட நேரத்தை நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். இதன் மூலம் இருவரும் உடல், உளரீதியாக தயார்நிலையில் இருக்கவியலும். இது அவர்களின் இன்ப சுகத்தை மேம்படுத்துவது மட்டுமின்றி, அவர்களில் ஒருவர் உடல் அல்லது உள ரீதியாகத் தயாரின்றி இருக்கும் சாத்தியத்தையும் அகற்றிவிடும். *(ஸைத் அல்-ஃகாதிர். ப.280)*

## மனைவி தயாராதல்

### 1. சுத்தமும் தற்சுகாதாரமும்

சுத்தமும் *(நழாஃபா)* தூய்மையும் *(தஹாரா)* தற்சுகாதாரமும் இஸ்லாத்தில் அளப்பரிய முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்கள். தூய்மையே தொழுகைக்குத் திறவுகோல். தொழுகை, ஒரு முஸ்லிமின் வாழ்வில் முதன்மையான செயல். மேலும், தூய்மை அல்லாஹ்வின் அன்பை ஒருவருக்குப் பெற்றுத்தருகிறது. அல்லாஹ் கூறுகிறான்:

إِنَّ اللَّهَ يُحِبُّ التَّوَّابِينَ وَيُحِبُّ الْمُتَطَهِّرِينَ

*நிச்சயமாக, அதிகமாகப் பாவமன்னிப்புக் கோருபவர்களை அல்லாஹ் நேசிக்கின்றான்; தீமையிலிருந்து விலகி இருப்பவர்களையும் தூய்மையாளர் களையும் நேசிக்கின்றான். (குர்ஆன் 2:222)*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூமாலிக் அல்-அஷ்அரி (ரழி) அறிவிக்கிறார்:*

الطُّهُورُ شَطْرُ الْإِيمَانِ

*தூய்மை இறைநம்பிக்கையில் பாதியாகும்... (ஸஹீஹ் முஸ்லிம் 223)*

எனவே, ஓர் இறைநம்பிக்கையாளர் எல்லா நேரங்களிலும் சுத்த மாகவும் தூய்மையாகவும் இருக்கவேண்டும். இதை, தன் மண வாழ்வில் இன்னும் உறுதியாகக் கடைப்பிடிக்கவேண்டும்.

வீட்டில் கணவர் இருக்கும்போது அவருக்கு எதிரில் அழகாகவும் தூய்மையாகவும் இருக்கவேண்டுமே எனும் உணர்வே பெண்களில் சிலருக்கு இருப்பதில்லை. அதேவேளை, பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும்போது அல்லது நண்பர்களைக் காணச்செல்லும் போது தங்களைத் தூய்மைப்படுத்தி அலங்கரித்துக்கொள்வதில் கவனமாக இருக்கின்றனர். வேறுசிலர், திருமணம் ஆகுமுன் தங்களை அலங் கரித்துக்கொள்வதில் பெரிதும் அக்கறை காட்டுவார்கள். ஆனால், தங்கள் மணவாளனைத் தேர்ந்தெடுத்து மணம்முடித்தபின், இந்த முக்கியமான அம்சத்தில் அலட்சியம் காட்டுவார்கள்.

உண்மையில் இது இஸ்லாமிய போதனைகளுக்குப் புறம்பானது. மனைவி முதலில் தன் கணவனுக்காகவே தன்னை அலங்கரித்துக் கொள்ளவேண்டும். இதற்காக அவளுக்கு நற்கூலியும் அளிக்கப்படுகிறது. *மஹ்ரம்* அல்லாத (குடும்பத்தார் அல்லாத) ஆண்களின் கவனத்தைக் கவர்வதற்கு அழகுபடுத்திக்கொள்வது முழுக்கமுழுக்க விலக்கப் பட்டதும் பெரும்பாவமும் ஆகும். அவள் வீட்டில் தன் கணவன்முன் இயன்றளவு மிக அழகாகவும் தூய்மையாகவும் இருப்பது அவசியம். வீட்டுவேலைகள் காரணமாக அவள் அலங்கோலமாக இருப்பின், வேலை முடிந்ததும் தன்னைத் தூய்மை செய்துகொள்ள வேண்டும். தன் வேலை முடிந்து நீண்டநேரம் ஆகியும் அலங்கோலமாகவே திரிவது அவளுக்கு உகந்ததல்ல.

ஆரோக்கியமான உடலுறவுக்கு, கசப்புணர்வோ தொந்தரவோ ஏற்படுத்தக்கூடிய அனைத்தையும் தவிர்க்கவேண்டும். மனைவி, வாய் நாற்றம் அல்லது வேறுவித உடல்நாற்றமின்றி இருப்பதில் கவனமாக இருக்கவேண்டும். ஏனெனில், இது ‘ஆசையைக் கெடுக்கும்’ முக்கிய

விஷயமாக அமையக்கூடும். வாய்நாற்றம் அடித்தால், அவர்கள் பள்ளிவாசலுள் நுழைவதைக்கூட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தடுத்துள்ளார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கிறார்:

مَنْ أَكَلَ ثُومًا أَوْ بَصلاً فَلْيَعْتَزِلْنَا . أَوْ قَالَ . فَلْيَعْتَزِلْ مَسْجِدَنَا وَلْيَقْعُدْ فِي بَيْتِهِ

*'பூண்டு அல்லது வெங்காயம் உண்டவர்கள் எம்மிடம் வரக்கூடாது' அல்லது, இப்படிக் கூறினார்: 'அவர் நம் பள்ளிவாசலுக்கு வரவேண்டாம். தன் வீட்டிலேயே இருந்துகொள்ளட்டும்...' (ஸஹீஹ் அல்-புஹாரி* **817***)*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கிறார்:*

مَنْ أَكَلَ مِنْ هَذِهِ الْبَقْلَةِ ، الثُّوم – وقَالَ مَرَّةً : مَنْ أَكَلَ الْبَصَلَ وَالثُّومَ وَالْكُرَّاثَ – فَلَا يَقْرَبَنَّ
مَسْجِدَنَا ، فَإِنَّ الْمَلَائِكَةَ تَتَأَذَّى مِمَّا يَتَأَذَّى مِنْهُ بَنُو آدَمَ

*எவர் இந்தச் செடியை, அதாவது பூண்டை, உண்டாரோ – இன்னொரு முறை, 'எவர் வெங்காயமும் பூண்டும் சமையற்பூண்டும் உண்டாரோ' எனக் கூறினார்கள் – அவர் நம் பள்ளிவாசலுக்கு வரவேண்டாம். ஏனெனில், ஆதமின் மக்கள் பாதிக்கப்படும் அதே பொருள்களினால் வானவர்களும் பாதிக்கப்படுகின்றனர். (ஸஹீஹ் முஸ்லிம்* **564***)*

துர்நாற்றம் மனிதர்கள், வானவர்கள் இரு சாராரையும் பாதிக்கின்றது என்பதை மேற்கூறிய நபிமொழி காட்டுகிறது. எனில், ஒருவர் தன் துணைவருக்குத் தீங்கிழைக்காமல் தவிர்ந்திருப்பது இதைவிட முக்கியமானது என்பதன் காரணங்களைக் குறிப்பிடத் தேவையில்லை. எனவே, மனைவி என்பவள் அழுக்கு, அசுத்தம், வாய்நாற்றம், உடல் நாற்றம் அனைத்தையும் தவிர்ப்பதில் கவனமாய் இருக்க வேண்டும். பற்களை இயன்றளவு அடிக்கடி துலக்கி வாய் சுத்தம் பேணவேண்டும். இதன்மூலம், முத்தமிடும்வேளை துணைவருக்குப் பாதிப்புவராமல் காக்கமுடியும். அவள் எப்பொழுதுமே தன் கணவன் முன் தான் தூய்மையாக இருப்பதில் ஆர்வமும் அக்கறையும்கொள்ள வேண்டும்.

ஒருவருக்கு உடல்நாற்றம் தொடர்பாக உண்மையில் பிரச்சினை உள்ளதென்றால், அவர் மருத்துவ சிகிச்சையை நாடவேண்டும். இந்த நிலைமையை சீர்செய்ய பல எளிய, திறனுள்ள சிகிச்சைகள் உள்ளன. பொதுவாக, உடல்நாற்றத்துக்கு மருத்துவ நோய்க்குறி சோதனை அவசியமில்லை. எனினும், சரிசெய்யும் முயற்சிகளையும் மீறி அது தொடர்ந்து நீடித்தால், மருத்துவ ஆலோசனை பெறுவது சிறந்தது.

**2. அலங்கரித்தலும் அழகுபடுத்தலும்**

உடலுறவுக்குத் தயாராவதன் மிக முக்கிய பகுதி, மனைவி தன்னைக் கணவனுக்காக அழகுபடுத்திக்கொள்வதில் கவனமாய் இருப்பதே. மனிதர்கள், அழகானவற்றைப் பார்த்து, ரசித்து, மகிழக்கூடிய காட்சி சார்ந்த படைப்பினங்களைப் பார்ப்பதிலும் அனுபவிப்பதிலும் மகிழ்ச்சி அடைவார்கள். இதனால்தான் இஸ்லாம், *ஜும்ஆ* (வெள்ளிக்கிழமை தொழுகை), *ஈத்* (பெருநாள்) போன்ற மக்கள் கூடும் இடங்களுக்குச் செல்லும்போது தங்களை அலங்கரித்துச் செல்ல வேண்டும் என ஊக்குவிக்கிறது. முஸ்லிம்கள் இதர முஸ்லிம்களின் கண்களுக்கு இதமாகக் காட்சிதர வேண்டும். வாழ்க்கைத் துணைவரின் விஷயத்தில் இது மேலும் முக்கியத்துவம் பெறுகிறது.

எனவே, பெண் தன் கணவனுடன் உடலுறவுக்காகத் தன்னை அலங்கரித்துத் தயார்படுத்திக்கொள்வதன் முக்கியத்துவத்தை மேலும் வலியுறுத்தத் தேவையில்லை. *ஹூர் அல்-அய்ன்* அல்லது ‘அழகான கண்களையுடைய கன்னிகள்’ எனும் சுவனத்து மங்கைகளை சித்திரிக்கையில் அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான்:

كَأَنَّهُنَّ الْيَاقُوتُ وَالْمَرْجَانُ

*அவர்கள் இரத்தினங்களையும் பவளங்களையும் போல அழகானவர்கள். (குர்ஆன் 55:58)*

ஆகவே, அலங்காரம்செய்தல் என்பது ஒருவர் தன் துணைவரின் கவனத்தை ஈர்ப்பதற்கான வழியாகும். திடமான உடலுறவையும் அதன்மூலம் திடமான மணவாழ்வையும் நாடும் பெண்மணி, தன்னைத் தன் கணவனுக்காக அழகுபடுத்த முனைவது அவசியம். இதன்மூலம், கணவனும் பிற பெண்களை இச்சையுடன் பார்ப்பதிலிருந்து காக்கப் படுவார்.

துரதிர்ஷ்டவசமாக, பேணுதலான முஸ்லிம் பெண் தன்னைத் தன் கணவனுக்காக வசீகரிக்கும் விதத்தில் அலங்கரித்துக்கொள்வது சரியான செயலல்ல என சில முஸ்லிம்கள் கருதுகின்றனர். இது உண்மைக்கு எதிரான கருத்து. ஒரு பெண் தன் கணவனுக்காகப் பல்வேறு அழகு படுத்தல் வழிகளைப் பயன்படுத்துவதற்கு அனுமதி மட்டுமல்ல நற்கூலி யும் உண்டு. இறைபக்தியும் பேணுதலுமுள்ள முஸ்லிமாக இருப்பதன் ஒரு பகுதி, கற்பு காத்து வாழுதல். இதற்கான அனைத்து வழிகளும் ஊக்குவிக்கப்படுகின்றன – அவை ஷரீஆவினால் (இஸ்லாமியச் சட்டத்தினால்) குறிப்பாக விலக்கப்படாத வழிகளாக இருந்தாலே போதும்.

பெண்கள் தங்களை அலங்கரித்துக்கொண்டு, தங்கள் கணவர்கள் முன் அழகாகத் தோன்றவேண்டுமென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ஊக்குவித்தார்கள். அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:

أَوْمَتْ امْرَأَةٌ مِنْ وَرَاءِ سِتْرٍ بِيَدِهَا كِتَابٌ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ، فَقَبَضَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَدَهُ ، فَقَالَ : مَا أَدْرِي أَيَدُ رَجُلٍ أَمْ يَدُ امْرَأَةٍ؟ قَالَتْ : بَلْ امْرَأَةٌ ، قَالَ : لَوْ كُنْتِ امْرَأَةً لَغَيَّرْتِ أَظْفَارَكِ يَعْنِي بِالْحِنَّاءِ

*அல்லாஹ்வின் தூதரிடம் தரவேண்டிய கடிதம் தன்னிடம் உள்ளதாக ஒரு பெண் திரைமறைவிற்குப் பின்னாலிருந்து சைகை காட்டினாள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் கையை விலக்கிக்கொண்டு கூறினார்கள்: 'இந்தக் கை ஆணுடையதா பெண்ணுடையதா என்பதை என்னால் அறிய முடியவில்லையே.' அதற்கு அவள், 'இல்லை, இது ஒரு பெண்ணின் கைதான்' என்றாள். அப்போது நபியவர்கள், 'நீ பெண்ணாக இருப்பின், உன்னுடைய நகங்களை அழகுபடுத்த மருதாணி பூசியிருப்பீர் என்றார்கள்.' (சுனன் அபூ தாவூத் 4163)*

ஹிந்து பின்த் உத்பா அல்லாஹ்வின் தூதரிடம் வந்து இப்படிக் கூறியதாக அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார், 'அல்லாஹ்வின் தூதரே! என்னுடைய உறுதிப் பிரமாணத்தை *(பைஅத்)* ஏற்றுக் கொள்ளுங்கள்.' அதற்கு நபியவர்கள் (ஸல்) பதிலளித்தார்கள்:

لَا أُبَايِعُكِ حَتَّى تُغَيِّرِي كَفَّيْكِ كَأَنَّهُمَا كَفَّا سَبُعٍ

*நீ உன்னுடைய உள்ளங்கைகளின் தோற்றத்தை மாற்றும்வரை நான் உன்னுடைய உறுதிப் பிரமாணத்தை ஏற்கமாட்டேன். அவை வனவிலங்கின் பாத நகங்கள் போன்று தோன்றுகின்றன ! (சுனன் அபூ தாவூத் 4162)*

அன்னை ஆயிஷா (ரழி) மேலும் அறிவிக்கிறார்:

قَدِمَتْ عَلَى النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ حِلْيَةٌ مِنْ عِنْدِ النَّجَاشِيِّ أَهْدَاهَا لَهُ ، فِيهَا خَاتَمٌ مِنْ ذَهَبٍ فِيهِ فَصٌّ حَبَشِيٌّ ، قَالَتْ : فَأَخَذَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بِعُودٍ مُعْرِضًا عَنْهُ أَوْ بِبَعْضِ أَصَابِعِهِ ، ثُمَّ دَعَا أُمَامَةَ ابْنَةَ أَبِي الْعَاصِ – ابْنَةَ ابْنَتِهِ زَيْنَبَ – فَقَالَ : تَحَلَّيْ بِهَذَا يَا بُنَيَّةُ

*'நஜாஷி (மன்னர்) தமக்கு அன்பளிப்பாக அளித்த சில நகைகளை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) பெற்றார்கள். அவற்றில், அபிஸீனியக் கல்*

*பதித்ததொரு தங்க மோதிரமும் இருந்தது.' ஆயிஷா (ரழி) கூறினார்: 'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் முகத்தை அதிலிருந்து திருப்பி, அதை ஒரு குச்சியாலோ தம் விரலாலோ எடுத்து, அபுல் ஆஸின் மகளும் தம் மகள் ஸைனபின் மகளுமான உமாமாவை அழைத்து, 'என் அருமை மகளே, இதை அணிந்து உன்னை அலங்கரித்துக்கொள் என்றார்கள்.' (சுனன் அபூ தாவூத் 4232)*

எனவே, மனைவி தன்னை அழகுபடுத்திக்கொள்வது திடமான உடலுறவுக்கு வழிவகுக்கும்; மேலும் உடலுறவுக்கு உடல்ரீதியாகத் தயாராதலில் இது மிகத்தேவையான அம்சமாகும். இதுகுறித்து சில முக்கியமான விஷயங்களைக் கீழே தருகிறோம்:

**அ. உடல் முடிகளை அகற்றுதல்.** மனைவி – தன் கணவன் விரும்பினால், தன் உடலிலிருந்து தேவையற்ற முடியை அகற்றுவதை உறுதிசெய்ய வேண்டும். நாம் ஏற்கனவே *ஸஹீஹ் புஹாரியிலும் ஸஹீஹ் முஸ்லிமிலும்* பதிவாகியுள்ள அந்த ஹதீஸை மேற்கோள்காட்டினோம். அதில், மனைவி 'பருவ முடிகளை மழிப்பது', வீடுதிரும்பும் கணவனுக்காகத் தன்னைத் தயார்படுத்துவதில் ஒரு பகுதி என்பதாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கருதியுள்ளார்கள். உடல் முடியை நீக்குவது முற்றிலும் அனுமதிக்கப்பட்டது. மேலும், அதற்கான எண்ணம் கணவனைத் திருப்திப்படுத்துவதற்காக இருப்பின், அது விரும்பத்தக்கதும் நற்கூலிக்கு உரித்தானதும்கூட.

பெண்கள் தங்களுடைய கைகள், கால்கள், உடலின் இதர பகுதிகளிலிருந்து – பாலுறுப்பு, அக்குள் மற்றும் முகத்தின் ரோமங்களுக்கு சிறப்பு அழுத்தம் உள்ளது – முடியை நீக்கிவிடலாம். புருவங்கள் மட்டுமே இதற்கு விதிவிலக்கு. நபிமொழியின் பிரகாரம், புருவங்களை மழிப்பதற்கு அனுமதி இல்லை.

சில பெண்களுக்கு கன்னங்களிலும் முகத்தின் இதர பகுதிகளிலும் மிகுதியான முடி வளரக்கூடும். முகத்திலுள்ள இந்த முடியை நீக்குவது விரும்பத்தக்கது. இதன்மூலம், தாங்கள் ஆண் சாயலில் தெரிவதைத் தவிர்க்கலாம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்), பெண்கள் முகத்திலுள்ள முடி நீக்கப்படுவதைத் தடைசெய்த ஹதீஸிற்கான விளக்கவுரையில் இமாம் நவவி இவ்வாறு கூறுகிறார்: 'இந்தச் செயல் (அதாவது, முகத்திலுள்ள முடியைப் பெண்கள் நீக்குவது) அனுமதிக்கப்பட்டதல்ல, ஒரு பெண்ணிற்கு தாடியோ மீசையோ முளைத்தாலொழிய. அப்படி முளைத்தால், அதை நீக்குவதற்குத் தடையில்லை. உண்மையில், எங்கள் கருத்துப்படி, அது (அதை நீக்குவது) விரும்பத்தக்கது... (இந்த ஹதீஸில் உள்ள) தடை, புருவங்களை வடிவமைக்கும் விஷயத்திற்கு மட்டுமே பொருந்தும்.' (*அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம்* ப.1602)

தேவையற்ற உடல் முடியைப் பல்வேறு வழிகளில் மெழுகு, பசை, பொடி, சவரக்கத்தி போன்றவை மூலம் நீக்குவதற்கு அனுமதியுண்டு. இதற்குப் பதிலாக, முடியின் நிறத்தை மாற்றுவதற்கு அனுமதியுண்டு. அதே போல், உடல் முடியை நிரந்தரமாக நீக்குவதற்கும் ஷரீஆவில் தடை ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஏனெனில், இங்கே தற்காலிக மாகவோ நிரந்தரமாகவோ தேவையற்ற முடியை நீக்குவதுதான் நோக்கம்.

எனினும், முஸ்லிம் பெண்களின் முன்னிலையில்கூட, அவளது மறைவான பகுதியை *(அவ்ரா)* வெளிப்படுத்தக் கூடாது எனும் நிபந்தனை உண்டு. பிற முஸ்லிம் பெண்களின் முன்னிலையில் ஒரு முஸ்லிம் பெண்ணின் மறைவான பகுதி *(அவ்ரா)* என்பது, அவளுடைய தொப்புளிலிருந்து முழங்கால் வரையாகும். இதில் முழங்காலும் அடங்கும். எனவே, பிற முஸ்லிம் பெண்களின் முன்னிலையில்கூட அவள், தன் உடல்முடியை நீக்குவதற்காக தொப்புள் முதல் முழங்கால் வரையிலான பகுதியை வெளிப்படுத்தக் கூடாது. அதேபோல், முஸ்லி மல்லாத பெண்களின் முன்னிலையில் ஒரு முஸ்லிம் பெண்ணின் மறைவான பகுதி *(அவ்ரா)* என்பது, அவளுடைய முகம், கைகள் தவிர்த்து உடல் முழுவதுமாகும். *(அல்-ஹிதாயா* **4:461** *ரத் அல்-முஹ்தார்* **6:371)**

**ஆ. வசீகரிக்கும் ஆடையணிதல்.** ஒரு பெண் தன் கணவனுடன் உடலுறவு கொள்வதற்காக கவர்ச்சியான, வசீகரமான, வெளிக்காட்டக்கூடிய உடை அணிந்து அலங்கரித்துக்கொள்வதில் தவறேதுமில்லை. உல்லாச சன்ன உள்ளாடை, மயக்கும் உள்ளாடை போன்றவற்றை அணிவது மார்க்க ஒழுங்குக்கும் *(அதப்)* நாணத்துக்கும் *(ஹயா)* எதிரானதல்ல. இதற்கான நிபந்தனை, அது கணவனுக்காக மட்டுமே இருக்க வேண்டும்; அந்தக் கோலத்தில் எந்த மூன்றாவது ஆளும் தம்பதியருடன் இருக்கக்கூடாது. உண்மையில், நாம் ஏற்கனவே கூறியதுபோல, தன்னுடைய கற்பையும் தன் கணவனின் கற்பையும் காக்க உதவுவதே இதன் நோக்கமாக இருப்பின், அவளுக்கு நற்கூலி கிடைக்கும், *இன்ஷா அல்லாஹ்.*

எனினும், ஹனஃபி சிந்தனாவழியின் வலுவான பேணுதலான கண்ணோட்டத்தில், தனிமையில் இருக்கும் பொழுதும்கூட ஆண், பெண் இருவரும் தங்களின் மறைக்கவேண்டிய பகுதிகளை (தொப்புள் முதல் முழங்கால் வரை) மறைப்பது அவசியமாகும் *(வாஜிப்)*. குளித்தல், மலஜலம் கழித்தல், உடை மாற்றுதல், ஒருவர் தன் துணைவருடன் உடலுறுவு கொள்ளுதல் போன்ற சூழல்கள் மட்டுமே இதற்கான விதிவிலக்குகள் ஆகும். *(ரத் அல்-முஹ்தார்* **1:404)**

ஆக, மனைவி வீட்டில் தனியாக இருக்கும்போதுகூட, தொப்புளுக்கும் முழங்காலுக்கும் இடையிலுள்ள பகுதியை மறைப்பதில் அவள் கவனமாக இருக்கவேண்டும். மேலே கூறப்பட்ட உடைபற்றிய குறிப்புகளை அவள் தன் கணவனின் முன்னிலையில் மட்டும்தான், அதுவும் படுக்கையறை சூழலில்தான், பின்பற்ற வேண்டும்.

**இ. நறுமணம்.** இதமான வாசனை பிறர்மீது குறிப்பிடத்தக்க தாக்கம் ஏற்படுத்தலாம். அருமையான நறுமணங்கள் மனதுக்கு இதமளிக்கக் கூடியன. வாசனைத் திரவியங்களைப் பூசி மகிழ்வது மனித இயற்கையின் (*ஃபித்ரா*) ஒரு பகுதியாகும். இதனால்தான், நறுமணம் பூசும் வழக்கத்தை அல்லாஹ்வின் தூதர்கள் அனைவரும் பின்பற்றியிருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூ அய்யூப் (ரழி) அறிவிக்கிறார்:

أَرْبَعٌ مِنْ سُنَنِ الْمُرْسَلِينَ: الْحَيَاءُ وَالتَّعَطُّرُ وَالسِّوَاكُ وَالنِّكَاحُ

*நான்கு விஷயங்கள் நபிமார்களின் வழிகளைச் சேர்ந்தவை: நாணம், நறுமணம் பூசுதல், பல்துலக்கியைப் (சிவாக்) பயன்படுத்தல், திருமணம் முடித்தல். (சுனன் அல்-திர்மிதீ 1080)*

அல்லாஹ்வின் அன்புத் தூதர் (ஸல்) நறுமணப் பொருட்களை நேசித்தார்கள். அனஸ் (ரழி) அறிவிக்கிறார்:

أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ لَا يَرُدُّ الطِّيبَ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) நறுமணப் பொருளை மறுக்கமாட்டார்கள். (சஹீஹ் அல்-புஹாரி 5585)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

مَنْ عُرِضَ عَلَيْهِ رَيْحَانٌ فَلَا يَرُدُّهُ ، فَإِنَّهُ خَفِيفُ الْمَحْمِلِ طَيِّبُ الرِّيحِ

*ரய்ஹான் (நறுமணப் பொருள்) வழங்கப்படும்போது எவரும் அதை மறுக்கக் கூடாது. அது மென்மையான, அருமையான நறுமணம் கொண்டது. (சஹீஹ் முஸ்லிம் 2253)*

ஆண்கள் வெள்ளிக்கிழமை, *ஈத்* (பெருநாள்) போன்ற பொது நிகழ்ச்சிகளுக்குச் செல்லும்பொழுது நறுமணம் பூசுவது விரும்பத்தக்கது எனும் விஷயம் பல நபிமொழிகள் வாயிலாக ஆதாரப்பூர்வமாக நிறுவப்பட்டுள்ளது. ஒரு முஸ்லிம் இதமான நறுமணம்பூசிக்கொள்வதன் மூலம் பிறருக்கு நலன் பயக்கிறார். இந்தக் கருத்துச்சூழலில்தான், நறுமணம் பூசுவது அறச்செயலாகக் கருதப்படுகிறது.

இயல்பாகவே, நறுமணப் பொருள்கள் உடலுறவுச் செயல்பாடு களில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இதமான மணம் பாலுறவு வேட்கையைத் தூண்டி, இன்ப சுகத்தையும் செயல்திறனையும் அதிகரிக்கும். எனவே, மனைவி தன் கணவனுடன் உடலுறவு கொள்வ தற்கான அலங்கரிப்பின் ஒரு பகுதியாக நறுமணம் பூசிக்கொள்ள முயலவேண்டும். அவள் தனக்கு மிகப் பொருத்தமான, தன் கணவனை மகிழ்விக்கக்கூடிய நறுமணப் பொருளைத் தெரிவுசெய்துகொள்ள வேண்டும். அது, அவளின் உடல் அல்லது உடையில் உள்ள எந்தவொரு துர்நாற்றத்தையும் போக்க உதவும்.

எனினும், இரண்டு விஷயங்கள் இங்கே கவனிக்கத்தக்கவை:

முதலாவதாக, பொதுவாக சந்தையில் உள்ள நறுமணப்பொருள்கள், வாடைபோக்கிகள் *(டியோடிரண்ட்ஸ்)*, களிம்புகள் (கிரீம்ஸ்) ஆகிய வற்றைப் பயன்படுத்துவதற்கு அனுமதியுண்டு. அவற்றின் உட்பொருளாக ஆல்கஹால் இருந்தாலும் பரவாயில்லை. ஏனெனில், அவற்றில் உள்ள ஆல்கஹால்வகை – திராட்சை, பேரீத்தம் பழம் மற்றும் பார்லியிலிருந்து எடுக்கப்படுபவை அல்ல. பல உற்பத்திப் பொருள்களில் இரசாயனப் பொருள்களின் கலவையாலான செயற்கை ஆல்கஹால் பயன்படுத்தப் படுகின்றது. இது, ஹனஃபி பிரிவின் மார்க்கத் தீர்ப்பின்படி அசுத்த மானது *(நஜீஸ்)* அல்ல. எனினும், அதுபோன்ற நறுமணப் பொருள் களைத் தவிர்ப்பதுதான் நல்லது. ஏனெனில், நவநாகரிக, அழகு சாதனப் பொருள்களில் பயன்படுத்தப்படும் அனைத்தும் தீயவையாகவே உள்ளன. மேலும், செயற்கை ஆல்கஹாலை அசுத்தமானது எனக் கருதுபவர்களின் நியாயமான கருத்துவேறுபாட்டைத் தவிர்க்கவும் இது உதவும். (காண்க: *தக்மிலா ஃபத்ஹ் அல்-முல்ஹிம் பி ஷரஹ் சஹீஹ் முஸ்லிம்* **3:342-343**)

சில குறிப்பிட்ட நறுமணப் பொருள்களில் – *ஈதைல் ஆல்கஹால்* – திராட்சையிலிருந்தும் பேரீத்தம் பழத்திலிருந்தும் எடுக்கப்படும் ஆல்கஹால் கலந்துள்ளதால் அவற்றைப் பயன்படுத்துவது விலக்கப் பட்டுள்ளது. *எத்தனால், மெத்திலேடட் ஸ்பிரிட்ஸ்* ஆகியன ஆல்கஹாலின் மறுபெயர்களாகும். ஆகவே இவை அடங்கியுள்ள நறுமணப் பொருள் களும் விலக்கப்பட்டவை ஆகும்.

இரண்டாவதாக, பெண்கள் நறுமணம் பூசிக்கொண்டு வெளியில் செல்ல அனுமதியில்லை. இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்), மிக ஆதாரப்பூர்வமான *(சஹீஹ்)* ஹதீஸ்களில் திட்டவட்டமாகத் தடுத் துள்ளார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூமூஸா (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا اسْتَعْطَرَتْ الْمَرْأَةُ فَمَرَّتْ عَلَى الْقَوْمِ لِيَجِدُوا رِيحَهَا فَهِيَ كَذَا وَكَذَا ، قَالَ قَوْلًا شَدِيدً

*'ஒரு பெண் நறுமணம் பூசிக்கொண்டு, ஓர் (ஆண்கள்) குழுவைக் கடந்து செல்கையில், அவர்கள் அவளுடைய நறுமணப் பொருளின் வாசனையை நுகர்வார்களெனில், அவள் அப்படிப்பட்டவளாவாள்..' (மேலும்,) 'அவர்கள் (ஸல்) கடுமையான சொற்களைப் பயன்படுத்தினார்கள் என அறிவிப்பாளர் கூறுகிறார்.' (சுனன் அபூ தாவூத் 4170)*

எனவே, மனைவி வீட்டினுள் இருக்கும்போது மட்டுமே நறுமணம் பூசிக்கொள்ளலாம். வெளியே போகுமுன் மிகுந்த கவனத்துடன் அதைக் கழுவி அகற்றிவிடவேண்டும்.

**ஈ. அழகுணர்வும் ஆபரணங்களும்.** மனைவியின் அலங்காரத்தில், அழகு படுத்தலில் தங்கம், வெள்ளி மற்றும் இதரவகை ஆபரணங்கள் அணிவதும் அடங்கும்; முக ஒப்பனையும் உதட்டுச் சாயம் பூசுதலும் அடங்கும். கைகால்களுக்கு மருதாணி இட்டுக்கொள்வதும் – அவளுக்குப் பிடித்தால், கண்களுக்கு மை அல்லது *சுர்மா* போட்டுக்கொள்வதும் – அவளின் அழகை அதிகரிக்கும். இவற்றை நபிவழி *(சுன்னா)* குறிப்பாக அனுமதித்துள்ளது. மேலும், கூந்தலை அழகாக சீவி, சீர்படுத்தி, பராமரிப்பது மூலம் அதையும் அவள் அலங்கரித்துக்கொள்ள வேண்டும். கூந்தலுக்குச் சாயம் பூசுவதற்கும் அனுமதியுண்டு. இதில், சாயத்தின் உட்பொருள்கள் மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டவையாக *(ஹலால்)* இருக்கவேண்டும். மேலே, பொதுவாக சந்தையிலுள்ள நறுமணப் பொருள்களுக்கும் வாடைபோக்கிகளுக்கும் தரப்பட்ட அதே விளக்கம் கூந்தல்சாயத்திற்கும் பொருந்தும்.

மேற்கூறப்பட்டதிலிருந்து, பெண் தன் கணவனுக்காகத் தன்னை அலங்கரித்துக்கொள்ளும் விஷயத்தில் பொதுவாக இஸ்லாம் பெரிய அளவில் தடைகள் எதையும் விதிக்கவில்லை என்பது விளங்கும். ஆம், அலங்காரம்செய்வது மூலம் கணவன், மனைவி இருவரும் தங்கள் கற்பு ஒழுக்கத்தைப் பேணவும் விலக்கப்பட்டதைத் தவிர்க்கவும் இயலும்.

எனினும், ஒருவரின் உருவத்தையே திரிக்கக்கூடிய சில 'அலங் காரங்கள்' தடைசெய்யப்பட்டுள்ளன – அவை கணவனுக்காக வேண்டி செய்யப்பட்டாலும் சரியே. இதில் அழகுபடுத்தலுக்காகச் செய்யப் படும் அலங்கார அறுவைசிகிச்சை, புருவங்களை வடிவமைத்தல், பச்சை குத்துதல், காதுகள், மூக்கு தவிர்த்த உடலின் பிற பகுதிகளைக் குத்துதல், மனித ரோமத்தால் செய்யப்பட்ட சவுரி அல்லது செயற்கைத் தலைமுடி அணிதல் ஆகியவை அடங்கும். எனவே, இவையெல்லாம் தவிர்க்கப்படவேண்டும்.

**உடல் உருவத்தை அழகாக வைத்துக்கொள்ளுதல்.** ஒரு பெண், தன்னைக் கச்சிதமாகவும் நல்ல வடிவிலும் ஆரோக்கியமாகவும் வைத்துக் கொள்ளுதல் கணவனுக்கு அவள் செய்யும் அலங்காரத்தின் ஒரு பகுதியே ஆகும். மனைவி தன் உடல் உருவத்தையும் நன்கு கவனித்து, இயன்றளவு அதன் அழகைப் பராமரிப்பது அவசியம். இதன்மூலம், அவளுடைய உடலின்பால் கணவன் ஈர்க்கப்படுவது மட்டுமின்றி, அவள் தன் உடல்நலத்தையும் காத்துக்கொள்ள உதவும்.

### 3. பெண்மைசார்ந்த நடத்தை

உடலுறவுக்கு உளரீதியாகத் தயாராகும் ஒரு பெண், தன்னுடைய மென்மையும் நளினமும் பெண்மைசார்ந்த நடத்தைகளும்தான் தன் கணவனைத் தன் பக்கம் ஈர்க்கும் என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும். முரட்டுத்தனமும், ஆண் போன்ற இயல்புகளும், பொதுவாக ஆண்களுக்கு 'ஆசை கெடுக்கும்' விஷயங்கள் என்பதை விளங்கிக் கொள்வது அவசியம்[4].

பெண்ணின் குரலில் ஓர் இயற்கையான கவர்ச்சியையும் ஈர்ப்பை யும் இறைவன் வைத்துள்ளான். இது ஆணிடம் பாலியல் கிளர்ச்சி யூட்ட வல்லது. இந்த உண்மையை எவராலும் மறுக்கவியலாது. பல உளவியலாளர்களும் இதை ஏற்றுள்ளதோடு, அவர்கள், ஒருவரின் குரல் பாலியல் ஆசைகளைத் தூண்டுவதில் பெரும்பங்கு வகிப்பதாக அழுத்த மாகக் குறிப்பிட்டுள்ளனர்.

இதனால்தான், இறைவன் குறிப்பாகத் தன்னுடைய தூதரின் மனைவிமார்களையும், பொதுவாக அனைத்து முஸ்லிம் பெண்களை யும், அந்நிய ஆண்களிடம் மென்மையான, இனிமையான குரலில் பேசவேண்டாம் எனத் தடுத்துள்ளான்.

இறைவன் கூறுகிறான்:

يَا نِسَاءَ النَّبِيِّ لَسْتُنَّ كَأَحَدٍ مِنَ النِّسَاءِ إِنِ اتَّقَيْتُنَّ فَلَا تَخْضَعْنَ بِالْقَوْلِ فَيَطْمَعَ الَّذِي فِي قَلْبِهِ مَرَضٌ وَقُلْنَ قَوْلًا مَعْرُوفًا

[4] அல்லாஹ்வின் தூதர் (ஸல்), பெண் நடத்தைகொண்ட ஆண்களையும், ஆண் நடத்தைகொண்ட பெண்களையும் சபித்துள்ள ஹதீஸிற்கு, புகழ்பெற்ற ஹதீஸ் ஆசானும் *(ஹாஃபிழ்)* ஹனஃபி சட்டவியலாளருமான இமாம் பத்ருத்தீன் அல்-அய்னி அளிக்கும் கருத்துரையில், எதிர்பாலினரின் பாவனை அறிந்தும் அறியாமலும் - இரண்டு விதத்திலும் - செய்யப்படுகின்றன என விளக்குகிறார். இந்த ஹதீஸில் உள்ள குற்றச்சாட்டும் சாபமும், அறிந்து செய்பவர்கள் மீதே சாரும். *(உம்தத் அல்-காரி ஷரஹ் சஹீஹ் அல்-புஹாரி* **15:85***)*

*நபியின் மனைவியரே! நீங்கள் ஏனைய சாதாரணப் பெண்களைப் போன்ற வர்கள் அல்லர். நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சக்கூடியவர்களாய் இருந்தால் மென்மையாகக் குழைந்து பேசாதீர்கள். ஏனெனில் உள்ளத்தில் கெட்ட எண்ணம் கொண்டிருக்கும் யாரேனும் ஒருவன் சபலம்கொள்ளக் கூடும். (குர்ஆன் 33:32)*

அந்நிய ஆண்களோடு மிகுந்த மென்மையுடன் பேச வேண்டாம் எனவும், அவர்களோடு பேசுகையில் உள்ளடக்கமும் பொருளும் நேர்மையாக இருக்கவேண்டும் எனவும், ஆசைதூண்டுதல் அறவே இருக்கக்கூடாது எனவும் மேற்கூறிய வசனம் பெண்களுக்குக் கட்டளை யிடுகிறது. ஏனெனில், அந்நிய ஆண்களிடம் மென்மையாகவும், இச்சை யைத் தூண்டும் விதத்திலும், கொஞ்சிக் குழைந்தும் உரையாடுவது விலக்கப்பட்ட *(ஹராம்)* ஒன்றில் வீழ்வதற்கான வழியாகும். எனவே, தவறு செய்வதற்கான வழியும் தடைசெய்யப்பட்டுள்ளது.

உள்ளபடியே, மனைவியின் மென்மையாலும் பெண்மைசார்ந்த நடத்தைகளாலும்தான் கணவன் வெகுவாக அவள்பால் ஈர்க்கப் படுவான்.

மேற்கூறிய வழிகாட்டுதல் எல்லா நேரங்களுக்கும் பொருந்தும் என்றபோதிலும், தம்பதியர் உடலுறவில் ஈடுபட எண்ணும்போது இது இன்னும் அதிகமாகப் பொருந்தும். மனோநிலையையும் காதல் சூழலை யும் உருவாக்குவதற்கு, மனைவி பல்வேறு வழிகள், உத்திகளைப் பயன்படுத்தி கணவனை வசீகரிக்கவேண்டும். தன் கணவனின் உடலுறவு ஆசையைக் கிளப்புவதற்காக அவள் கொஞ்சலாம், பேசலாம் மோக வலை வீசலாம். அதேவேளை கசப்பு உணர்வு அல்லது 'ஆசை கெடுக்கும்' எதனையும் அவள் தவிர்க்க வேண்டும். இவ்வாறு செய்தால், கணவன்-மனைவி இணைதலுக்கான ஓர் உணர்ச்சிததும்பிய இன்பச் சூழல் உருவாகும், *இன்ஷா அல்லாஹ்.*

**கணவன் தயாராதல்**

மேலே மனைவியின் உள, உடல்ரீதியான தயார்நிலைபற்றி கூறப் பட்டது கணவனுக்கும் பொருந்தும். இதில் மனைவிக்கென்றே கூறப்பட்டிருந்த விஷயங்கள் மட்டும், இயல்பாக, கணவனுக்குப் பொருந்தாது. எனவே, மேற்கூறப்பட்ட பொதுவான வழிகாட்டுதலைக் கணவனும் கவனத்தில்கொள்வது அவசியம்.

இறைவன் கூறுகிறான்:

وَلَهُنَّ مِثْلُ الَّذِي عَلَيْهِنَّ بِالْمَعْرُوف

*பெண்கள் மீது (ஆண்களுக்கு) உள்ள உரிமைகள் போன்றே பெண்களுக்கும் உரிமைகள் உண்டு. (குர்ஆன் 2:228)*

எவ்வாறாயினும், கணவனின் கண்ணோட்டத்திலிருந்து சில குறிப்பிட்ட விஷயங்களை விளக்கவும் பரிசீலிக்கவும் தேவை உள்ளது.

**1. சுத்தமும் தற்சுகாதாரமும்**

கணவன், தான் எப்படியிருந்தாலும் – அழுக்காக, அலங்கோலமாக, வாய்நாற்றத்தோடும் உடல் நாற்றத்தோடும் இருந்தாலும் – மனைவி தன்பால் ஈர்க்கப்படுவாள் என எண்ணிக்கொள்வது பெருந்தவறாகும். பெண் ஆணைவிட மிக நளினமான, நயமான உணர்வுகளும் பதிவு நுட்பத்திறமும் உடைய பிறவியாவாள். சில நேரங்களில், அவள் கூச்சவுணர்வு காரணமாக மட்டுமே தன் உணர்வுகளைக் கணவனிடம் வெளிப்படுத்தாமல் இருப்பாள். எனவே, கணவன் தன்னைச் சுத்தமாகவும் சுகாதாரமாகவும் வைத்துக்கொள்வதில் கவனம் செலுத்தவேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) மக்களிலேயே மிகத் தூய்மையானவர்கள். தூய்மையின்றி இருப்பதன் விபரீத விளைவுகள் குறித்து நபியவர்கள் (ஸல்) கணவன்மார்களை எச்சரித்துள்ளார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அலீ இப்னு அபீதாலிப் (ரழி) அறிவிக்கிறார்.

اغسلوا ثيابكم وخذوا من شعوركم واستاكوا وتزينوا وتنظفوا فان بني إسرائيل لم يكونوا يفعلون كذلك فزنت نساؤهم

*உங்கள் ஆடைகளை சலவைசெய்து கொள்ளுங்கள். உங்கள் தலைமுடியைப் பராமரித்துக் கொள்ளுங்கள். பல்துலக்கியைப் (சிவாக்) பயன்படுத்துங்கள். உங்களை அலங்கரித்துத் தூய்மையாக இருங்கள். பனீ இஸ்ரவேலர்கள் இதைச் செய்யாததனால், அவர்களுடைய பெண்கள் விபசாரத்தில் ஈடுபட்டனர். (கன்ஸ் அல்-உம்மால் ஃபீ சுனன் அல்-அக்வால் வ அல்-அஃப்ஆல் 17175)*

மேலும், அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் கூறுகிறார்: 'எனக்காக என் மனைவி அலங்கரித்துக் கொள்ளவேண்டும் என நான் விரும்புமளவுக்கு அவளுக்காகவும் நான் அலங்கரித்துக்கொள்ள விரும்புகிறேன்.' *(ஸைத் அல்-ஃகாதிர் ப.142)*

மனிதனின் தூய்மையான, இயற்கையான, இயல்பான பத்து விஷயங்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) குறிப்பிட்டார்கள். இயற்கையான வழிமுறைகள் *(ஃபித்ரா)* என்றழைக்கப்படும் இவை, அல்லாஹ்வின் நபிமார்களுடைய – குறிப்பாக, இப்ராஹீமுடைய – வழியைச் சார்ந்தவை. மனித இயல்பு இயற்கையாகவே இவற்றை உறுதியாக

விரும்புகிறது. இவை குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:

عَشْرٌ مِنَ الْفِطْرَةِ : قَصُّ الشَّارِبِ ، وَإِعْفَاءُ اللِّحْيَةِ ، وَالسِّوَاكُ ، وَاسْتِنْشَاقُ الْمَاءِ ، وَقَصُّ الْأَظْفَارِ ، وَغَسْلُ الْبَرَاجِمِ ، وَنَتْفُ الْإِبِطِ ، وَحَلْقُ الْعَانَةِ ، وَانْتِقَاصُ الْمَاءِ . قَالَ زَكَرِيَّاءُ : قَالَ مُصْعَبٌ : وَنَسِيتُ الْعَاشِرَةَ إِلَّا أَنْ تَكُونَ الْمَضْمَضَةَ

*'பத்து விஷயங்கள் இயல்பானவை (ஃபித்ரா): மீசையை வெட்டிக் குறைத்தல், தாடியை வளரவிடுதல், பல்துலக்கியைப் பயன்படுத்துதல், மூக்கைச் சுத்தம் செய்தல், நகங்களை வெட்டுதல், மூட்டுகளைக் கழுவுதல், அக்குளில் உள்ள முடியை அகற்றுதல், பருவ முடிகளை மழித்தல், பாலுறுப்புகளைத் தண்ணீரால் கழுவிச் சுத்தம் செய்தல் (இஸ்தின்ஜா).' அறிவிப்பாளர் (மேலும்) கூறினார், நான் பத்தாவது விஷயத்தை மறந்துவிட்டேன்; அது வாய் கொப்பளிப்பதாக இருந்திருக்கலாம். (சஹீஹ் முஸ்லிம் 261, சுனன் அபூ தாவூத் 53, சுனன் அல்-திர்மிதீ 2757, சுனன் அல்-நஸாயி 9286 மற்றும் சுனன் இப்னு மாஜா 293)*

எனவே, தற்சுகாதாரம் தொடர்பாக, கணவன் பின்வரும் விஷயங்களை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்:

**அ. தூய்மையாக இருத்தல்.** அழுக்கு, அசுத்தம், துர்நாற்றம் ஆகியவற்றைத் தவிர்த்து சுத்தமாக இருப்பதில் கணவன் கவனமாக இருக்கவேண்டும். மலஜலம் கழித்தபின் அவர், ஆணுறுப்புப் பகுதியைச் சரியாக தண்ணீர் கொண்டு கழுவ வேண்டும் (இஸ்தின்ஜா). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இஸ்தின்ஜாவை, இயல்பான செயலில் அடங்கும் (ஃபித்ரா) பத்து விஷயங்களுள் ஒன்றாகச் சேர்த்துள்ளார்கள். இது மேலே கூறப்பட்டுள்ளது.

அன்னை ஆயிஷா (ரழி) முஸ்லிம் பெண்களை நோக்கி இவ்வாறு அறிவுறுத்தினார்:

مُرْنَ أَزْوَاجَكُنَّ أَنْ يَسْتَطِيبُوا بِالْمَاءِ فَإِنِّي أَسْتَحْيِيهِمْ فَإِنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يَفْعَلُهُ

*தங்கள் ஆணுறுப்பைத் தண்ணீர்கொண்டு கழுவுமாறு உங்கள் கணவர்களிடம் கூறுங்கள். நானே அவர்களிடம் அதைச் சொல்ல வெட்கம் என்னைத் தடுக்கிறது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அதைச் செய்வார்கள். (சுனன் அல்-திர்மிதீ 19)*

ஒருவர் மலஜலம் கழித்தபின் தன் கைகளைச் சுத்தமாக, அசுத்தத்தின் (நஜாஸா) சுவடுகள் எதுவுமின்றிக் கழுவவேண்டும். சோப் பயன்

படுத்துவது சிறந்தது. ஒருவர் சிறுநீர்க் கழித்தபின், தன் சிறுநீர்க் குழாயிலிருந்து *(இஸ்திப்ரா)* சிறுநீர்த் துளிகள் முற்றிலுமாக வடிந்து விடுவதை உறுதிசெய்தல் வேண்டும்.

**ஆ. உடல் நாற்றம்.** கணவன், தன் மனைவிக்குக் கசப்புணர்வோ ‘ஆசை கெடுப்போ’ ஏற்படுத்தும் எந்தவொன்றையும் தவிர்ப்பதில் கவனமாக இருக்க வேண்டும். அவர் சிறப்புக் கவனமெடுத்து, வாய்நாற்றமோ உடல் நாற்றமோ இல்லாது பார்த்துக்கொள்ள வேண்டும்.

கணவன், தன் உடல் நாற்றத்தை அகற்ற நாள்தோறும் குளிப்பது நல்லது. குறிப்பாக, தன் மனைவியுடன் உடலுறவுகொள்ள நாடும் போது இது முக்கியம். நறுமணம் *(இத்ர்)* பூசிக்கொள்வது அல்லாஹ்வின் அன்புத் தூதருடைய வழிமுறையாகும். அதை அலட்சியமாக விட்டு விடக்கூடாது. *மஸ்க், அம்பர், ஊத்* போன்ற பல இயற்கை நறுமணப் பொருள்களைப் பயன்படுத்தலாம். ‘*மஸ்க்* தான் மிக இதமான நறுமணப் பொருள்’ என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கப் படுகிறது. (*ஸஹீஹ் முஸ்லிம்* 2252) பொதுவாக சந்தையில் கிடைக்கும் வாடைபோக்கிகளையும் *(டியோடிரண்ட்)* உடல் வாசனைத் தெளிப்பான் களையும் *(ஸ்ப்ரே)* பயன்படுத்தலாம். ஒரே நிபந்தனை: அவை மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டதாக *(ஹலாலாக)* இருக்கவேண்டும்.

அதேபோல், கணவன் தன் வாய்நாற்றத்தை அகற்ற தன் வாயையும் பற்களையும் நன்றாகத் துலக்கவேண்டும். வாய் கொப்பளிப்பது *(மழ்மழா)*, இயற்கைச் செயலின் *(ஃபித்ரா)* பத்து விஷயங்களுள் ஒன்று. பற்களில் ஒட்டிக்கொண்டிருக்கும் உணவுத் துணுக்குகள் அனைத்தை யும் நீக்கும் பொருட்டு வாயை நன்றாகக் கழுவவேண்டும். இதற்கு வாய்க்கழுவிகளை *(மவுத்வாஷ்)* பயன்படுத்தலாம். மீண்டும் ஒரே நிபந்தனை, அதில் *ஹராமான* உட்பொருள்கள் இருக்கக்கூடாது. பல்துலக்கியைப் *(சிவாக்)* பயன்படுத்துவதும் *ஃபித்ராவின்* பத்து விஷயங்களுள் ஒன்று.

*ஹுதைஃபா அறிவிக்கிறார்:*

كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِذَا قَامَ لِيَتَهَجَّدَ يَشُوصُ فَاهُ بِالسِّوَاكِ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இரவில் (தொழுகைக்காக) எழுந்திருக்கும் போதெல்லாம், பல்துலக்கியைப் (சிவாக்கைப்) பயன்படுத்தித் தம் வாயை நன்கு அலசிக் கழுவுவார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 255)*

இமாம் நவவி, *ஸஹீஹ் முஸ்லிமிற்கான* தம் விரிவுரையில் பின்வரும் கருத்தைக் கூறுகிறார். வாயையும் பற்களையும் துலக்குவதற்கு *சிவாக்*

பயன்படுத்துவது பொதுவாக எல்லா நேரங்களிலும் – குறிப்பாக, வாய்நாற்றம் அடிக்கும் பொழுது – விரும்பத்தக்கது. வாய் நாற்றத் துக்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் சில: உண்ணுதல், பருகுதலில் இருந்து தவிர்ந்திருப்பது, வாடை அடிக்கும் ஒன்றை உட்கொள்வது, நீண்ட நேரம் மௌனமாயிருப்பது மற்றும் மிகுதியாகப் பேசுவது. *(அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் ப. 334)*

தம்பதியர் உடலுறவுகொள்ள எண்ணும்போது, வாயை சுத்தமாக வும் புத்துணர்வுடனும் வைத்திருப்பதில் கவனமாக இருப்பது மிக, மிக முக்கியம். கணவன் சரியாகத் தன் வாயைக் கழுவாமலும் பற்களைத் துலக்காமலும் தன் மனைவியை உணர்ச்சிப்பூர்வமாக முத்தமிடுவது நிச்சயமாகத் தவறு. புகைபிடிப்பவர்களும் சுவைகெடுக்கும் பொருள் களை உட்கொள்ளும் பழக்கமுடையவர்களும் கூடுதல் எச்சரிக்கை யுடன் இருப்பது அவசியம். தவறினால், அது துணைவியின் அடங்கா உணர்ச்சியையும் ஆசையையும் கொன்றுவிடும்.

**இ. தோற்றமும் உடையும்.** கணவன் தன் உடையிலும் வெளித்தோற்றத் திலும் கவனம் செலுத்த வேண்டும். அவர் பாங்காக உடையணிய வேண்டும். சுத்தமான, இஸ்திரிசெய்த ஆடைகளை உடுத்தவேண்டும். ஆம், அல்லாஹ் அழகானவன்; அழகை விரும்புபவன். கணவன் வழக்க மாக உடை மாற்றிக்கொள்ளவேண்டும். அவற்றைப் பாங்காகவும் துப்புரவாகவும் வைத்துக்கொள்ளவேண்டும். அழுக்கான, சலவை செய்யாத ஆடைகளை உடுத்திக்கொண்டு உலா வருவது நிச்சயமாகத் தவறானது. சில கணவர்கள் இதற்குரிய முக்கியத்துவம் அளிக்கத் தவறி, பணி-ஆடைகளை அணிந்த நிலையிலேயே மனைவியுடன் உடலுறவில் ஈடுபடுகின்றனர்! இது மனைவிக்கு 'ஆசை கெடுக்கும்' விஷயம் மட்டு மல்ல; கணவனின் சுயநலத்தைப் பிரதிபலிக்கும் ஒரு செயலும்கூட.

ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்:

وَرَأَى رَجُلًا آخَرَ وَعَلَيْهِ ثِيَابٌ وَسِخَةٌ فَقَالَ: أَمَا كَانَ هَذَا يَجِدُ مَا يَغْسِلُ بِهِ ثَوْبَهُ؟

...அவர் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்)), இன்னொரு மனிதர் அழுக்கான உடை அணிந்திருப்பதைக் கண்டு, 'இந்த மனிதர் தன் ஆடைகளைச் சலவை செய்வதற்கு ஏதாவது தேடிக்கொள்ளக்கூடாதா?' என்று கூறினார்கள். *(சுனன் அபூ தாவூர் 4059)*

இமாம் அபூதாவூத் தம் நூலில் பதிவுசெய்யும் ஒரு நீண்ட நபிமொழியில் அபூதர்தா (ரழி) சஹ்ல் இப்னு அல்-ஹன்ஸலிய்யா விடம் கூறினார், '...எங்களுக்குப் பலன் தரக்கூடிய, தங்களுக்கு பாதிப்பு

ஏற்படுத்தாத ஒரு சொல்லை (எங்களுக்குக் கூறும்).' அதற்கு அவர் கூறினார், நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இவ்வாறு கூறுவதைக் கேட்டேன்:

إِنَّكُمْ قَادِمُونَ عَلَى إِخْوَانِكُمْ ، فَأَصْلِحُوا رِحَالَكُمْ وَأَصْلِحُوا لِبَاسَكُمْ حَتَّى تَكُونُوا كَأَنَّكُمْ شَامَةٌ فِي النَّاسِ ، فَإِنَّ اللَّهَ لَا يُحِبُّ الْفُحْشَ وَلَا التَّفَحُّشَ

*நீங்கள் உங்கள் சகோதரர்களைச் சந்திக்கச் செல்கிறீர்கள். எனவே, உங்கள் சேணங்களை சரிசெய்து, உடையை அழகாக்கிக்கொள்ளுங்கள். இதன் மூலம், நீங்கள் (ஓர் அழகான முகத்தில் உள்ள) அழகுக்குறி போல மக்கள் மத்தியில் எடுப்பாகத் தோன்றவேண்டும். முரட்டுத்தனத்தையும் முரட்டு நடத்தையையும் அல்லாஹ் விரும்புவதில்லை. (சுனன் அபூதாவூத் 4086 முஸ்னத் அஹ்மத் 4:180)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கிறார்:

لَا يَدْخُلُ الْجَنَّةَ مَنْ كَانَ فِي قَلْبِهِ مِثْقَالُ ذَرَّةٍ مِنْ كِبْرٍ ، قَالَ رَجُلٌ : إِنَّ الرَّجُلَ يُحِبُّ أَنْ يَكُونَ ثَوْبُهُ حَسَنًا وَنَعْلُهُ حَسَنَةً ، قَالَ : إِنَّ اللَّهَ جَمِيلٌ يُحِبُّ الْجَمَالَ ، الْكِبْرُ بَطَرُ الْحَقِّ وَغَمْطُ النَّاسِ

*'எவர் உள்ளத்தில் கடுகளவு தற்பெருமை உள்ளதோ அவர் சுவர்க்கத்தில் நுழையமாட்டார்.' அப்போது ஒரு மனிதர் வினவினார், 'ஒருவர், தன் ஆடை நன்றாக இருக்கவேண்டும்; தன் காலணிகள் நன்றாக இருக்கவேண்டும் என விரும்பலாம் அல்லவா?' அதற்கு நபியவர்கள் (ஸல்) கூறினார்கள்: 'நிச்சயமாக அல்லாஹ் அழகானவன். அழகை விரும்புபவன். தற்பெருமை என்பது (கர்வத்தால்) உண்மையை மறுப்பதும் மக்களை இழிவாகப் பார்ப்பதும் தான்.' (ஸஹீஹ் முஸ்லிம் 91)*

ஆகவே, தூய்மையாக இருப்பதும் பாங்கான உடை அணிவதும் மணம் கமழ்வதும் நபிவழியாகும். ஒரு மனிதர் தன் நண்பர்கள் மற்றும் உறவினர்களின் முன்னிலையில்கூட பாங்காக உடையணிந்து இருக்க வேண்டும். அவருடைய ஆடை தூய்மையாகவும் அழகாகவும் இருக்க வேண்டும்; அசிங்கமாகவும் பார்க்க சகிக்காத விதத்திலும் இருக்கக் கூடாது. அவர் தூய்மையான உடையில் நன்றாகத் தோன்றுவார் எனில், அவரைப் பார்க்க இதமாக இருக்கும்; அவரோடு இருப்பதில் மக்கள் இன்புறுவார்கள். ஆனால், அவர் இதற்கு மாறாக இருப்பின், மக்கள் அவரைத் தாழ்வாகப் பார்த்து, அவருக்கு எந்தவொரு முக்கியத்துவமும் அளிக்கமாட்டார்கள். இது, கணவன்-மனைவி உறவு விஷயத்தில் மேலுமதிகமாக முக்கியத்துவம் பெறுகிறது.

கணவன் அசுத்தமாக இருப்பது, அவனை மனைவி விரும்பாமல் போவதற்குக் காரணமாகிவிடும் என இமாம் இப்னு அல்-ஜவ்ஸி தம் *ஸைத் அல்-ஃகாதிரில்* கூறுகிறார். அவள் அதைத் தன் கணவனிடம் சொல்வதற்கு சங்கடப்படலாம். எனினும், அதன் விளைவாக அவன் மீது அவளுக்கு ஆர்வம் குன்றிவிடும். கணவன் தூய்மையாகவும் நேர்த்தியாகவும் இருந்தால், அவன்மீது மனைவிக்கு ஈர்ப்பு ஏற்படும். பெண்கள் ஆண்களின் மறுபாதியே - *ஷகாயிக்*. கணவனுக்கு அவள் குறித்து சில விஷயங்கள் பிடிக்காமல் இருக்கலாம் என்பது போலவே, அவளுக்கும் அவர் குறித்து சில விஷயங்கள் பிடிக்காமல் போகலாம். (*ஸைத் அல்-ஃகாதிர்* ப.141142)

**ஈ. தலையும் தாடியும்.** தலையையும் தாடி முடியையும் சுத்தமாகவும் பாங்காகவும் வைத்திருப்பது முக்கியம். கணவன் தன் முடிக்கு எண்ணெய் பூசி, சீவி வாரிக்கொள்வது அவசியம். அவன் தன் தலை முடியை சரிவரப் பராமரிக்க இயலாவிட்டால், அதைச் சிறியதாக வெட்டிக்கொள்ள வேண்டும் அல்லது மொட்டை அடித்துக்கொள்ள வேண்டும். தாடியை சீவிவிட்டு பாங்காக வைத்திருக்கவேண்டும். இயலுமெனில், எண்ணெயும் தடவலாம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

مَنْ كَانَ لَهُ شَعْرٌ فَلْيُكْرِمْهُ

*முடிவைத்துக்கொள்பவர் அதைப் பராமரிப்பது அவசியம். (சுனன் அபூ தாவூத் 4160)*

ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கிறார்:

أَتَانَا رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ، فَرَأَى رَجُلًا شَعِثًا قَدْ تَفَرَّقَ شَعْرُهُ فَقَالَ: أَمَا كَانَ هَذَا يَجِدُ مَا يُسَكِّنُ بِهِ شَعْرَهُ؟

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) எங்களிடம் வந்தபோது, அலங்கோலமான ஒரு மனிதரைக் கண்டார்கள். அவருடைய தலைமுடி கலைந்துபோய் இருந்தது. அப்போது, 'இந்த மனிதர் தன் தலைமுடியை சீர்செய்துகொள்வதற்கு ஏதாவது தேடிக்கொள்ளக்கூடாதா?' என்றார்கள். (சுனன் அபூ தாவூத் 4059)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் தலையையும் தாடி முடியையும் நன்கு பராமரித்துக்கொள்வார்கள். அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கிறார்:

كَانَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يُكْثِرُ دَهْنَ رَأْسِهِ وَتَسْرِيحَ لِحْيَتِهِ ، وَيُكْثِرُ الْقِنَاعَ حَتَّى كَأَنَّ ثَوْبَهُ ثَوْبُ زَيَّاتٍ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அடிக்கடி எண்ணெய் பூசுவார்கள், தம் தாடியை சீவிவிடுவார்கள் மற்றும் கினாவை (எண்ணெயைத் துடைத்து உறிஞ்சு வதற்காக தலைமீது வைக்கப்படும் துணி) பயன்படுத்துவார்கள். எந்த அளவிற் கெனில், அவருடைய துணி எண்ணெய்க்காரரின் துணியைப் போலாகி விடும். (ஷமாயில் அல்-திர்மிதீ 33)*

ஒருவர் தம் தலைக்கும் தாடி முடிக்கும் சாயம் பூசுவது அனுமதிக்கப் பட்டது மட்டுமின்றி, அது பரிந்துரைக்கவும் படுகிறது. ஒரே நிபந்தனை, முடிச் சாயத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள உட்பொருள்கள் *ஹலாலாக* இருக்கவேண்டும். தலைக்கோ தாடிக்கோ பூசப்படும் மிகச்சிறந்த சாயம், மருதாணிதான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூதர் (ரழி) அறிவிக்கிறார்:

إِنَّ أَحْسَنَ مَا غُيِّرَ بِهِ الشَّيْبُ الْحِنَّاءُ وَالْكَتَمُ

*(ஒருவரின்) முதுமையை (நரைமுடியை) மாற்றுவதற்கான மிகச்சிறந்த சாயம், மருதாணி மற்றும் கத்ம் (ஒருவகை புல்). (சுனன் அல்-திர்மிதீ 1753 மற்றும் பிற நூல்கள்)*

எனினும், *முற்றிலும்* கருப்புச் சாயம் பயன்படுத்துவதற்கு அனுமதி யில்லை; அல்லது, குறைந்தபட்சம், ஹனஃபி மற்றும் ஷாஃபி சட்ட வியலாளர்கள் பலரின் கருத்துப்படி, விரும்பத்தகாதது - அது ஒருவர் தம் மனைவிக்காக அலங்கரிப்பதாய் இருந்தாலும்சரி. *(ரத் அல்-முஹ்தாரி மற்றும் அல்-மஜ்மூஃ)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்:

وَاجْتَنِبُوا السَّوَادَ

*...கருப்புச் சாயம் பூசுவதைத் தவிர்க்கவும். (சஹீஹ் முஸ்லிம் 202)*

கன்னத்திலோ தொண்டையின் வெளிப்பகுதியிலோ வளரும் முடி தாடியின் ஒருபகுதியாகக் கருதப்படாது. ஏனெனில், தாடையில் வளருவதற்குப் பெயரே தாடி. எனவே, ஒருவர் தம் கன்னத்தில் வளரும் முடியை மழித்தோ வெட்டியோ நீக்கிவிடலாம். *(ரத் அல்-முஹ்தார் 6:407 மற்றும் அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா 5358)*

கணவன் தன் மீசையை மழிப்பதில் அல்லது குறைப்பதில் கவனம் செலுத்த வேண்டும். மேலே, ஃபித்ராவின் பத்து விஷயங்கள் பற்றி

கூறப்பட்ட ஹதீஸில் மீசை குறைத்தலும் அடங்கியுள்ளது. ஆக, மீசையைச் சிறிதாக்குவது கருத்தொற்றுமையுள்ள நபிவழியாகும். மேல் உதட்டின் மேல்பகுதியை மூடும் அளவுக்கு மீசையை நீளமாக வளர்ப்பது தவறு. அது சுகாதாரக் கேடும்கூட. ஏனெனில், உணவும் இதர விரும்பத்தகாத பொருள்களும் மீசையில் ஒட்டிக்கொள்ளும் சாத்தியம் உண்டு. கணவன் இதில் கவனம் செலுத்தவேண்டும். ஏனெனில் - குறைந்தபட்சம் - தம்பதியர் ஒருவரையொருவர் முத்த மிடும்பொழுது நீளமான மீசை தொல்லை ஏற்படுத்தலாம்.

ஒருவர் தம் மீசையைச் சிறிதாக்கவேண்டும் என்பதில் அறிஞர்கள் கருத்தொற்றுமை கொண்டிருக்கும் அதேவேளை, மீசையை எவ்வளவு குறைக்கவேண்டும் என்பதில் கருத்துவேறுபாடு கொண்டுள்ளனர். மீசையை முற்றிலுமாக அகற்றிவிடவேண்டுமா, அல்லது மேல் உதட்டின் மேல்பகுதியை மீசை மூடாத அளவிற்கு அதைக் குறைக்க வேண்டுமா? இந்தக் கருத்துவேறுபாட்டிற்கான மூலகாரணம், அல்லாஹ்வின் தூதருடைய ஹதீஸ்கள் இரண்டு விதமாகக் கூறுகின்றன. சில நபிமொழிகள் ‘மீசையைச் சிறிதாக்குமாறும் வேறு சில நபிமொழிகள் மீசையை அகற்றுமாறும்’ கூறுகின்றன.

ஹனஃபி சிந்தனாவழியில், இமாம் அபூஜாஃபர் அத்-தஹாவி தம் *ஷரஹ் மஆனி அல்-ஆஸாரில்* இதை விளக்குகிறார். மீசையை முற்றிலுமாக மழிப்பது விரும்பத்தக்கது *(முஸ்தஹப்)*. இது, அதைச் சிறிதாக்குவதை விடச் சிறந்தது. இதுவே, அபூஹனீஃபா மற்றும் அவரின் இரு முதன்மை மாணவர்களின் நிலைப்பாடாகும் என அவர் உரைத்தார். மேலும், இதுவே மாபெரும் நபித்தோழர்களின் (அவர் களில் அப்துல்லாஹ் இப்னு உமர், அபூ ஹுரைரா, அபூ சயீத் அல்-குத்ரி, அபூ உஸைத் அஸ்-ஸயீதி, ராஃபி இப்னு காதிஜ், ஜாபிர் இப்னு அப்துல்லாஹ், அனஸ் இப்னு மாலிக் முதலானோர் அடங்குவர்) பழக்கமாகவும் இருந்தது என நம்பகமான அறிவிப்புத் தொடர்களுடன் அறிவிக்கிறார். *(ஷரஹ் மஆனி அல்-ஆஸார்* **4:230-231***)*

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) தம் மீசையை மிகச் சிறியதாக வெட்டுவதால் அவருடைய தோலின் வெண்ணிறம்கூட தெரியும் என இமாம் புஹாரி அறிவிக்கிறார். *(ஸஹீஹ் அல்-புஹாரி* **5:2208***)*

இமாம் மாலிக்கின் கருத்துப்படி, மீசையை முற்றிலுமாக மழிப்பது வெறுக்கத்தக்கது; மாறாக, மேல் உதட்டின் மேல்பகுதியை மீசை மூடாமல் இருக்குமளவிற்கு வெட்டுவதே நபிவழியாகும்.

ஷாஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் நவவியின் கூற்றுப்படி, மேல் உதட்டுக்கு மேல்பகுதியில் மீசையை வெட்டி, அதை முற்றிலு

மாக மழிக்காமல் இருப்பதே நபிவழியாகும். (*அல்-மஜ்மூஃ ஷரஹ் அல்-முஹத்தப்* **1:159**)

ஹம்பலி சிந்தனாவழியில், மீசையை முற்றிலுமாக மழிப்பதும் அதைக் குறைப்பதும் - இரண்டுமே நபிவழிதான். எனவே, ஒருவர் தம் மீசையை முற்றிலுமாக மழிப்பதையோ, மழிக்காமல் குறைப்பதையோ தெரிந்தெடுத்துக்கொள்ளலாம். (இப்னு அல்-கையூம் *ஸாத் அல்-மஆத்* **1:173**)

பல்வேறு சட்டவியலாளர்களுக்கு (*ஃபுகஹா*) இடையிலான இந்த சிறிய கருத்துவேறுபாடு ஒருபுறமிருக்க, அவர்கள் ஒரு விஷயத்தில் கருத்து உடன்பட்டுள்ளனர். ஒருவரின் மேல் உதட்டை மூடுமளவிற்கு மீசையை நீளமாக வைக்க அனுமதியில்லை . இதற்குக் காரணம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக ஸைத் இப்னு அர்கம் (ரழி) அறிவிக்கிறார்:

مَنْ لَمْ يَأْخُذْ مِنْ شَارِبِهِ فَلَيْسَ مِنَّا

எவர் தம் மீசையைக் குறைப்பதில்லையோ அவர் எம்மைச் சார்ந்தவரல்லர். (*சுனன் அல்-திர்மிதீ* **2671** மற்றும் *முஸ்னத் அஹ்மத்*. இது மிகவும் நம்பகமான ஹதீஸ் என்று இமாம் திர்மிதி கூறியுள்ளார்.)

நீளமாக மீசை வைக்கும் பழக்கமுடையவர்கள் இந்த எச்சரிக்கையை மனத்தில் வைப்பது அவசியம். மீசையை நீளமாக, அடர்த்தியாக வளரவிடுவது தவறு. ஏனெனில், இதுபற்றி நபிமொழி கடுமையாக எச்சரிக்கிறது. மீசையை வெட்டுவது நபிமார்களின் வழி மட்டுமல்ல. அது ஒருவரின் அழகையும் எழிலையும் பராமரிக்கவும் உதவுகிறது.

கடைசியாக, மீசையின் நீட்சிப் பகுதி - அதாவது, மீசைக்கும் தாடிக்கும் இடைப்பட்ட முடி - மீசையின் பகுதியாகவே கருதப் படுவதால், அதை அகற்றுவதற்கு அனுமதியுண்டு. அதை வெட்டாமல் விடுவதிலும் தவறில்லை. (*அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* **5:358**)

**உ. பருவமுடிகளை அகற்றுதல்.** கணவன் தன் மறைவிடத்திலும் அக்குளிலும் உள்ள முடியை வழக்கமாக அகற்றுவதிலும் கவனம் செலுத்தவேண்டும். மறைவிடத்திலும் அக்குள்களிலும் மழிக்காமல் விடப்படும் முடியில் அழுக்கும் வேர்வையும் சேர்ந்துவிடுவதால், அது உடல் நாற்றத்துக்கான ஒரு காரணியாக அமையும். மேலும், அக்குள் முடியை அகற்றுவது, பருவ முடிகளை மழிப்பது இரண்டுமே ஃபித்ராவின் பத்து விஷயங்களுள் அடங்கும். எனவே, இப்பகுதிகளில் உள்ள முடியை வளரவிடுவது விரும்பத்தகாதது.

அக்குள் மற்றும் பாலுறுப்புப் பகுதியிலிருக்கும் பருவ முடிகளை வாரம் ஒருமுறை - வெள்ளிக்கிழமை மிகப்பொருத்தமாக இருக்கும் - அகற்றுவது விரும்பத்தக்கது. இதை இரண்டு வாரங்களுக்கு தள்ளிப் போடுவது விரும்பத்தகாதது அல்ல. எனினும், அதையும் தாண்டிச் செல்வது தவறானது. நாற்பது நாள்களுக்கும் மேல் செல்வது பாவமானது. *(அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* **5:357-358)**

இதேபோல், கணவன் தன் நகங்களை வெகுநீளமாக வளரவிடக் கூடாது. ஏனெனில், நகங்களில் மிக எளிதாக அழுக்கு சேர்ந்துவிடும். நகங்களை வெட்டுவதும் ஃபித்ராவின் விஷயங்களுள் ஒன்று. எனவே, இரண்டு வாரங்களுக்கும் மேலாக நகங்களை வெட்டாமல் விடுவது தவறாகும். நாற்பது நாட்களைத் தாண்டுவது பாவமாகும். (மேலது)

அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கிறார்:

وُقِّتَ لَنَا فِي قَصِّ الشَّارِبِ وَتَقْلِيمِ الأَظْفَارِ وَنَتْفِ الإِبِطِ وَحَلْقِ الْعَانَةِ أَنْ لاَ نَتْرُكَ أَكْثَرَ مِنْ أَرْبَعِينَ لَيْلَةً

*நாங்கள் மீசையைச் சிறிதாக்குவதற்கும் நகங்களை வெட்டுவதற்கும் அக்குள் முடியை அகற்றுவதற்கும் பருவ முடிகளை மழிப்பதற்கும் (அல்லாஹ்வின் தூதரால்) எங்களுக்குக் கால வரையறை விதிக்கப்பட்டிருந்தது, அவற்றை நாற்பது நாள்களுக்கு மேலாக வளரவிடக்கூடாது என்று. (ஸஹீஹ் முஸ்லிம் 258)*

**2. நன்னடத்தையும் வசீகரமும்**

கணவனின் உளவியல் தயார்நிலையின் முக்கியமானதொரு கூறு, உடலுறவுக்குமுன் மனைவியை நல்ல விதமாக நடத்துதல், அன்பாகப் பேசுதல், விளையாடுதல், பாசம் காட்டுதல் போன்றவை. கணவன் தன் மனைவியை - உடலுறவு நாடும் வேளையில் மட்டுமல்லாது - எல்லா நேரங்களிலும் கண்ணியமாக நடத்தவேண்டும் எனப் பொதுவாக இஸ்லாம் கட்டளையிடுகிறது. அல்லாஹ் கூறுகிறான்:

وَعَاشِرُوهُنَّ بِالْمَعْرُوفِ فَإِن كَرِهْتُمُوهُنَّ فَعَسَى أَن تَكْرَهُواْ شَيْئًا وَيَجْعَلَ اللّهُ فِيهِ خَيْرًا كَثِيرًا

*அவர்களோடு நல்லமுறையில் வாழ்க்கை நடத்துங்கள். அவர்களுடன் சேர்ந்து வாழ நீங்கள் விரும்பாவிட்டாலும் பொறுமையைக் கைக் கொள்ளுங்கள். ஏனெனில் ஒரு விஷயம் உங்களுக்குப் பிடிக்காமல் போகலாம். ஆனால் அல்லாஹ் அதில் பல நன்மைகளை வைத்திருக்கக்கூடும். (குர்ஆன் 4:19)*

ஒருவர் தம் மனைவியை சொல்லிலும் செயலிலும் பரிவோடு நடத்தவேண்டியதன் முக்கியத்துவத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) வலியுறுத்தியுள்ளார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூ ஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

أَكْمَلُ الْمُؤْمِنِينَ إِيمَانًا أَحْسَنُهُمْ خُلُقًا وَخِيَارُكُمْ خِيَارُكُمْ لِنِسَائِهِمْ خُلُقًا

*மிகச் சிறந்த நற்குணம் கொண்டவர்களே மிகச் சிறந்த இறைநம்பிக்கை யாளர்கள் ஆவர். மேலும், உங்கள் பெண்களிடம் மிகச்சிறந்த முறையில் நடந்துகொள்பவர்களே உங்களில் மிகச் சிறந்தவர்கள். (சுனன் அல்-திர்மிதீ 1162. இது மிகவும் நம்பகமான அறிவிப்புத் தொடரைக் கொண்டுள்ளது)*

ஒரு கணவர் தன் மனைவியை எப்படி நடத்தவேண்டும் என்பதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) நடைமுறை எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்தார்கள். அவர்கள் தம் மனைவியர் மீது மிகுந்த பண்பும் பரிவும் கொண்டு, அவர்களை நட்புடன் நடத்தினார்கள். அவர்களிடம் பாசமாகவும் நகைச்சுவையாகவும் தாராளமாகவும் இருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் மனைவியருடன் சிறந்த முறையில் நடந்துகொண்டதற்கான பல எடுத்துக்காட்டுகள் நபிமொழித் தொகுப்புகளில் காணப்படுகின்றன.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:

خَيْرُكُمْ خَيْرُكُمْ لِأَهْلِهِ وَأَنَا خَيْرُكُمْ لِأَهْلِي

*உங்களில் மிகச் சிறந்தவர், உங்கள் குடும்பத்தாரிடம் மிகச் சிறந்த முறையில் நடப்பவரே. நான் என் குடும்பத்தாரிடம் மிகச் சிறந்த முறையில் நடந்து கொள்கிறேன். (சுனன் இப்னு மாஜா 1977)*

எனவே, மனைவியை அன்போடு நடத்துவது இஸ்லாத்தின் பொது விதி. ஒருவர் உடலுறவுகொள்ள நாடும்பொழுது இது மிகவும் தேவை யாகிறது. படுக்கை அறைக்கு வெளியில் தம்பதியர் நடந்துகொள்ளும் விதம், படுக்கைஅறைச் செயல்பாடுகளில் நேரடித் தாக்கத்தை ஏற்படுத்தும்.

உறவுக்குத் தேவையான சூழலை உருவாக்குவதற்கு, கணவன் பண்பாகவும் பாசமாகவும் இருந்து, அவள் மயங்கும் வகையில் தன் காதலை வெளிப்படுத்த வேண்டும். பெண்கள் தங்களிடம் கூறப்படும் சொற்களாலும் அதில் பொதிந்துள்ள பொருளாலும் ‘உறவுக்குத் தூண்டப்படுகின்றனர்’ என்பதை அவர் மறந்துவிடக்கூடாது. அதாவது,

அவருடைய சொற்கள் அவளுக்கு எத்தகைய உணர்வை ஏற்படுத்துகின்றன என்பதே முக்கியம். அது முழுவதும் ஒரு செயல்தொகுப்பு. அதில் ஒவ்வொரு சிறிய விஷயமும் முக்கியமானது; திடமான உடலுறவு அனுபவத்துக்கு வழிவகுக்கக் கூடியது.

இதுபற்றி குர்ஆனில் மறைமுகமான சுட்டுதல் உள்ளது. அல்லாஹ் கூறுகிறான்:

نِسَآؤُكُمْ حَرْثٌ لَّكُمْ فَأْتُوا۟ حَرْثَكُمْ أَنَّىٰ شِئْتُمْ وَقَدِّمُوا۟ لِأَنفُسِكُمْ وَٱتَّقُوا۟ ٱللَّهَ

*உங்கள் மனைவிகள் உங்களுக்கு விளைநிலங்களாவர். எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள். எனினும், முன்னதாக உங்களுக்கென சில நற்செயல்கள் செய்துகொள்ளுங்கள்; மேலும் அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். (குர்ஆன் 2:223)*

குர்ஆன் விரிவுரையாளர்களில் சிலர், 'எனினும், முன்னதாக உங்களுக்கென சில நற்செயல்கள் செய்துகொள்ளுங்கள்' எனும் சொற்றொடர், உடலுறவுக்கு முன் நிகழும் விஷயங்களின் முக்கியத்துவம் பற்றியே சுட்டுவதாகக் கூறுகின்றனர். இதில் சரியான எண்ணம் கொள்ளுதல், பொருத்தமாக துஆ ஓதுதல், ஆசையை அதிகரிக்க முன்விளையாட்டில் ஈடுபடுதல், காரியத்தை எளிதாக்குதல் போன்றவை அடங்கும். (*தஃப்சீர் அபூஅல்-சஊத்* **1:223** மற்றும் *தஃப்சீர் அல்-கஷ்ஷாஃப்* **1:294**)

ஒருவர் தம் மனைவியைக் கொடுமையாக நடத்துவது, பிறகு அவளுடன் உடலுறவிலும் ஈடுபடுவது எந்தஅளவிற்கு ஈனத்தனமான செயல் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ஒரு ஹதீஸில் சித்திரிக்கின்றார்கள்:

يَعْمِدُ أَحَدُكُمْ يَجْلِدُ امْرَأَتَهُ جَلْدَ الْعَبْدِ ، فَلَعَلَّهُ يُضَاجِعُهَا مِنْ آخِرِ يَوْمِهِ

*...உங்களில் ஒருவர் தம் மனைவியை அடிமையை அடிப்பதுபோல் அடித்துவிட்டு, பின்னர் மாலையில் அவளுடன் உடலுறவிலும் ஈடுபடுவதா! (ஸஹீஹ் அல்-புஹாரி **4658** மற்றும் ஸஹீஹ் முஸ்லிம் **855**, இங்கு புஹாரியின் சொற்களே இடம்பெற்றுள்ளன )*

இங்கே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) திகைப்பை வெளிப்படுத்துகிறார்கள். ஒருவர் தம் மனைவியைக் கொடுமைப்படுத்திவிட்டு, பின்னர் அவளுடன் உடலுறவில் ஈடுபடுவதற்கும் துணிச்சல் வந்துவிட்டதோ என வியக்கிறார்கள். இதனால்தான் நபியவர்கள் (ஸல்) இன்னொரு ஹதீஸில் கூறினார்கள்:

لَمْ يَضْرِبُ أَحَدُكُمُ امْرَأَتَهُ ضَرْبَ الْفَحْلِ ثُمَّ لَعَلَّهُ يُعَانِقُهَا

*'உங்களில் ஒருவர் தம் மனைவியை பொலிக்குதிரையை அடிப்பதுபோல் அடித்துவிட்டு, பின்னர் எப்படி அவளுடன் படுத்துறவாட இயலும்?' (சஹீஹ் அல்-புஹாரி* **5695***)* வேறு வார்த்தைகளில் கூறவேண்டுமெனில், *ஒருவர் தம் மனைவியைக் கடுமையாக நடத்தி அக்கிரமம் புரிந்துவிட்டு, பிறகு தன் பாலுறவு எத்தனிப்புகளால் அவள் தூண்டுதல் அடையவேண்டும் என எப்படி எதிர் பார்க்க முடியும்?*

முஸ்லிம் கணவர்கள் இந்த எச்சரிக்கையைக் கவனத்தில்கொள்வது அவசியம். சில ஆண்கள், படுக்கை அறைக்கு வெளியே தங்கள் மனைவியரைப் பரிவோடும் பாசத்தோடும் நெருக்கத்தோடும் நடத்தத் தவறிவிடுகின்றனர். ஆனால், உடலுறவு வேளையில் திடீரென அன்பு, பாசம், கருணை எல்லாவற்றையும் கொட்டுகின்றனர். இது சுயநலம் மட்டுமல்ல; மனைவியை அவர் எத்தகைய அந்தஸ்தில் வைத்துள்ளார் என்பதையும் காட்டுகிறது.

உடலுறவுக்குமுன் நளினமும் பாசமும் காட்டுதல் நபிவழியாகும். கணவன் தன் மனைவியை மயக்குவதற்குத் தன்னுடைய சொல், செயல்மூலம் பொருத்தமான உத்திகளைக் கையாளவேண்டும். இதன் மூலம், அவருடைய பாலுறவு எத்தனிப்புகளை மனைவியும் மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்பாள்.

# 6

# முன்விளையாட்டு

தம்பதியர் உள, உடல்ரீதியாகத் தயாராகி, உடலுறவுக்கான மனோ நிலை வந்ததும், முன்விளையாட்டுகளில் (பாலுணர்வூட்டல்-foreplay) ஈடுபடவேண்டும். இதில், புணர்ச்சிக்குமுன் நிகழும் அனைத்துப் பாலுறவுச் செயல்பாடுகளும் அடங்கும். இதில் தம்பதியர் ஒருவருக் கொருவர் பரிமாறிக்கொள்ளும் அன்பு, ஆசை வார்த்தைகள் எல்லாம் அடங்கும். எனினும், இந்த இயலில் முன்விளையாட்டின் உடல் ரீதியான கூறு மட்டுமே பரிசீலிக்கப்படுகிறது.

## முன்விளையாட்டின் முக்கியத்துவம்

முன்விளையாட்டில் ஈடுபடுவது மகிழ்ச்சியான மணவாழ்வுக்கு மிகத் தேவையானதாகும் – அதன் பிரிக்கமுடியாத ஓர் அங்கமாகவும் விளங்குகிறது. எனவே, அதை ஒருபோதும் அலட்சியப்படுத்தக் கூடாது. தம்பதியர் இருவரும் ஒருவரையொருவர் பாலுணர்வூட்டும் உத்தி களைக் கையாளவேண்டும். இது மகிழ்வுடன் கூடுதலான பரவச நிலையை அடைய உதவும்.

தம்பதியர் இருவருக்கும் முன்விளையாட்டு முக்கியமானது என்ற போதிலும், கணவன் உடலுறவுக்குமுன் தன் மனைவிக்குக் கிளர்ச்சி யூட்டுவது அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. பெண்கள் பொதுவாகப் பாலியல் கிளர்ச்சி அடைவதற்குக் கூடுதல் நேரம் பிடிக்கும் என்பதால், அவள் தயார்நிலையில் இல்லாதபோது கணவன் உடலுறவு கொள் வானெனில், அவனுடைய தேவை நிறைவடையலாம். ஆனால், அவள் நிறைவடையமாட்டாள். இதன் விளைவாக, மனைவிக்கு அதிருப்தியும் ஏமாற்றமும் ஏற்பட்டு, மணவாழ்விற்கே குந்தகம் ஏற்படலாம்.

கணவன் தன் மனைவிக்குக் கிளர்ச்சியூட்ட சிறிது நேரம் செலவழிக்க வேண்டும். அவள் ஆயத்தமாகவும் தயார்நிலையிலும் மோகம்

கொண்டும் இருப்பதை அவர் காணும்பொழுதுதான் அவளுடன் உடலுறவில் ஈடுபடவேண்டும். கணவன் தன் பாலியல் தேவையைப் பூர்த்திசெய்துகொண்டு, மனைவியை அதிருப்தியிலும் நிறைவின்மை யிலும் விட்டுவிடுவது, அவனுடைய தன்னலத்தையும் ஆணவத்தையும் காட்டுகிறது. இதுபோன்ற கணவர்கள் உண்மையில் தங்கள் மனைவி களை நேசிப்பதில்லை. தங்களின் இச்சையைத் தீர்த்துக்கொள்வதி லேயே அக்கறையாய் உள்ளனர்.

அல்லாஹ்வின் தூதரும் தம்பதியரின் முன்விளையாட்டை ஊக்கு வித்துள்ளார்கள். ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் அறிவிக்கிறார்:

كُنْتُ مَعَ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي غَزَاةٍ... قَالَ: تَزَوَّجْتَ؟ قُلْتُ: نَعَمْ ، قَالَ: بِكْرًا أَمْ ثَيِّبًا؟ قُلْتُ: بَلْ ثَيِّبًا ، قَالَ: أَفَلَا جَارِيَةً تُلَاعِبُهَا وَتُلَاعِبُكَ....

*நான் ஒரு போரில் அல்லாஹ்வின் தூதருடன் இருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) என்னிடம் வினவினார்கள், 'உமக்குத் திருமணமாகிவிட்டதா?' அதற்கு நான் 'ஆம்' என்றேன். '(அவள்) கன்னிப்பெண்ணா ஏற்கனவே மணமானவளா?' எனக் கேட்டார்கள். 'ஏற்கனவே மணமானவள்' என்றேன். 'ஏன், கன்னிப்பெண்ணை மணம்முடித்திருக்கக் கூடாதா? அப்போது நீ அவளுடன் விளையாடலாம், அவள் உன்னுடன் விளையாடலாம், அல்லவா?' எனக் கூறினார்கள்... (சஹீஹ் அல்-புஹாரி **1991**)*[5]

இமாம் திர்மிதி - அல்லாஹ்வின் தூதர் (ஸல்) வரை செல்லும் ஒரு சுய அறிவிப்புத் தொடர் மூலம், நபியவர்கள் கூறியதாக அறிவிக்கிறார்:

كُلُّ مَا يَلْهُو بِهِ الرَّجُلُ الْمُسْلِمُ بَاطِلٌ إِلاَّ رَمْيَهُ بِقَوْسِهِ وَتَأْدِيبَهُ فَرَسَهُ وَمُلاَعَبَتَهُ أَهْلَهُ فَإِنَّهُنَّ مِنَ الْحَقِّ

[5] ஒருவர், ஏற்கனவே மணமான பெண்களைத் திருமணம் செய்யக்கூடாது என இந்த ஹதீஸ் எந்த வகையிலும் தீர்ப்பளிப்பதில்லை. அல்லாஹ்வின் தூதரே, ஏற்கனவே மணமான பெண்களைத் திருமணம் செய்தார்கள். அவருடைய அன்பான முதல் மனைவி கதீஜா (ரழி) ஏற்கனவே மணமான பெண் மட்டுமின்றி, அவர் அண்ணலைவிட வயதில் மிகவும் மூத்தவர். ஆக, இஸ்லாத்தின்படி, ஏற்கனவே மணமான பெண்களையோ விதவைகளையோ திருமணம்செய்வது எந்த வகையிலும் தவறில்லை. இந்த ஹதீஸில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இவ்விஷயத்தை வேறு கோணத்தில் பார்க்கிறார்கள். எனவேதான், *சஹீஹ் முஸ்லிமில்* உள்ள அறிவிப்பில் (715), அல்லாஹ்வின் தூதரிடம் ஜாபிர் (ரழி) இப்படிக் கூறுகிறார்: 'எனக்கு சகோதரிகள் இருக்கின்றனர். எனவே, அவள் (அதாவது நான் திருமணம் செய்யவிருக்கும் பெண் ஏற்கெனவே மணமானவள்) எனக்கும் சகோதரிகளுக்கும் இடையூறாக வந்துவிடுவாளோ என அஞ்சுகிறேன்.' இதற்கு அண்ணலார் (ஸல்) கூறினார்கள், 'அப்படியென்றால், அது நல்லதுதான். ஒரு பெண் தன் மார்க்கப் பற்றுக்காகவும் செல்வத்துக்காகவும் அழகுக்காகவும் திருமணம் செய்யப் படுகிறாள். எனவே, நீங்கள் மார்க்கப்பற்று உடையவளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் நன்மை அடைவீர்கள்.'

...ஒரு முஸ்லிம் விளையாடும் எல்லா விளையாட்டுகளும் வீணானவையே *(பாத்தில்)* – அம்பெய்தல், தன் குதிரைக்குப் பயிற்சியளித்தல் மற்றும் தன் மனைவியுடன் விளையாடுதலைத் தவிர. இவை (யாவும்) போற்றுதலுக்குரிய செயல்கள். (*சுனன் அல்-திர்மிதி* **1637**, *சுனன் இப்னு மாஜா* **2811** மற்றும் *முஸ்னத் அஹ்மத்* **17433**, இங்கு திர்மிதியின் சொற்களே இடம்பெற்றுள்ளன)

இமாம் கஸ்ஸாலி தம் *இஹ்யா உலூம் அல்-தீன்* என்னும் நூலிலும் இமாம் தய்லமி தம் *முஸ்னத் அல்-ஃபிர்தவ்ஸி*லும், அனஸ் இப்னு மாலிக்கிடமிருந்து ஓர் அறிவிப்பைப் பதிவுசெய்துள்ளார்கள். அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இவ்வாறு கூறியதாக அறிவிக்கப்படுகிறது: 'உங்களில் எவரும் ஒரு மிருகத்தைப் போன்று தன் மனைவியை அணுகக்கூடாது. அவர்களுக்கு இடையில் தூது அனுப்புதல் வேண்டும். "அல்லாஹ்வின் நபியே, (இங்கே) தூது என்பது யாது? என வினவப் பட்டது." அதற்கு அவர்கள், "முத்தமும் இன்சொற்களும் (கொண்ட முன்விளையாட்டு)" என பதிலளித்தார்கள்.' (*இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* **6:175**, இதன் அறிவிப்புத் தொடர் பலவீனமானது)

ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் கூறியதாக அறிவிக்கப்படுவதை இமாம் இப்னு அல்-கையூம் அல்-ஜவ்ஸிய்யா கூறுகிறார்: 'முன்விளையாட்டுக்கு முன் புணர்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தடுத் துள்ளார்கள்.' (*அல்-திப் அல்-நபவி* ப.**181**, இதன் அறிவிப்புத் தொடர் பலவீனமானது)

புகழ்பெற்ற ஹம்பலி சட்டவியலாளரான இமாம் இப்னு குதாமா குறிப்பிடும் ஒரு வாசகத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இவ்வாறு கூறியதாக அறிவிக்கப்படுகிறது: 'நீர் அனுபவிக்கும் ஆசையை அவளும் அனுபவிக்கும்வரை புணர்ச்சியைத் தொடங்காதீர். ஏனெனில், அவளுடைய ஆசை நிறைவேறுமுன் உம்முடைய ஆசை நிறைவேறி விடக்கூடும்.' (*அல்-முக்னி* **8:136**)

மேற்கூறிய சில அறிவிப்புகள், தம்பதியருக்கு இடையில் நிகழும் முன்விளையாட்டின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துகிறது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) முன்விளையாட்டை ஊக்குவித்தது மட்டுமின்றி, தம் மனைவிகளுடன் அதில் ஈடுபடவும் செய்தார்கள். பின்னால் வரும் சில அறிவிப்புகளில் இது தெளிவாகப் புலப்படுகிறது.

புணர்ச்சிக்குமுன் மனைவியுடன் முன்விளையாட்டில் - முத்த மிடுதல், அவளுடைய நாக்கை சூப்புதல் போன்றவற்றில் - ஈடுபட வேண்டும் என இமாம் இப்னு அல்-கையூம் உரைக்கிறார். அல்லாஹ்வின் தூதரும்கூட தம் மனைவியுடன் முன்விளையாட்டில் ஈடுபட்டு அவரை முத்தமிடுவார்கள். (*அல்-திப் அல்-நபவி* ப.**180**)

இமாம் முனவி உரைக்கிறார்: 'புணர்ச்சிக்குமுன் முன்விளையாட்டும் அழுத்தமான காதல் முத்தங்களும் வலியுறுத்தப்பட்ட நபிவழியாகும் *(சுன்னா முஆக்கதா)*. அதற்கு மாற்றமாக நடப்பது விரும்பத்தகாததாகும் *(மக்ரூஹ்)*.' *(ஃபைழ் அல்-காதிர் ஷரஹ் அல்-ஜாமிஃ அல்-ஸகீர்* **5:115***)*

முன்விளையாட்டு தொடர்பான பழக்கங்களை, சரியானவை யன்று, மார்க்க ஒழுங்குக்கு முரணானவை என சிலர் கருதுகின்றனர். அவர்கள், இச்செயல்களைத் துறப்பது இறைபக்தி என எண்ணு கின்றனர். ஆனால், இது முழுக்கமுழுக்கப் பிழையானதாகும். ஏனெனில், அல்லாஹ்வின் தூதரைவிட இறைபக்தியும் தூய்மையும் இறையச்சமும் கொண்டவர் உண்டோ! ஆயினும், நபியவர்கள் (ஸல்) முன்விளையாட்டை ஊக்குவித்தது மட்டுமின்றி, தம் மனைவியருடன் அதில் ஈடுபடவும் செய்தார். இதுபோன்ற செயல்பாடுகளைத் துறப்பது இறைபக்தியின் அடையாளமல்ல. ஆம், இஸ்லாத்தில் துறவறம் *(ரஹ்பானிய்யா)* இல்லை. இஸ்லாம் ஒரு நடைமுறை மார்க்கம். அது, தன்னைப் பின்பற்றுவோர் தங்களின் பாலியல் தேவைகளை நியாய மான முறையில் நிறைவுசெய்துகொள்ள அனுமதிக்கிறது.

முன்விளையாட்டு பல வடிவங்கள் எடுக்கலாம். ஒவ்வொரு தம்பதியரும் வேறுபட்டவர்கள் என்பதால், தங்களுக்கு எவை கிளர்ச்சி யூட்டும் விதமாக உள்ளன என்பதை தம்பதியரே கண்டறிந்துகொள்ள விட்டுவிடுவது மிகச்சிறந்ததாகும். எனினும், தடைசெய்யப்பட்ட செயல்களை தவிர்த்தல்வேண்டும். எவ்வாறாயினும், சில பொதுவான வழிகாட்டுதல்களை இங்கே வழங்குகிறோம்:

### 1. முத்தமிடுதல்

**அ. முன்விளையாட்டும் முத்தமிடுவதும்.** ஒருவர் தம் துணைவரை முத்த மிடுவது முன்விளையாட்டின் மிகவும் அவசியமானதும், அல்லாஹ் வுடைய தூதரின் வழியும் ஆகும். அன்னை ஆயிஷா அறிவிக்கிறார்:

أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَبَّلَ بَعْضَ نِسَائِهِ ثُمَّ خَرَجَ إِلَى الصَّلَاةِ وَلَمْ يَتَوَضَّأْ قَالَ
قُلْتُ مَنْ هِيَ إِلَّا أَنْتِ قَالَ فَضَحِكَتْ

*'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் மனைவியர்களில் ஒருவரை முத்தமிட்டுவிட்டு, ஒளுசெய்யாமலே தொழுகைக்குச் சென்றார்கள்.' (ஆயிஷாவிடமிருந்து அறிவிக்கும்) உர்வா கூறுகிறார், 'நான் ஆயிஷாவிடம் ''அது நீங்களாகத் தான் இருக்கும்?'' என்றேன். அதற்கு அவர் புன்னகைத்தார்.' (சுனன் அல்-திர்மிதீ* **86**, *சுனன் அபூ தாவூத்* **181**, *சுனன் அல்-நஸாயி* **170***)*

இந்த ஹதீஸிலிருந்து, ஒருவர் தம் துணைவரை முத்தமிடுவது விரும்பத்தக்கது என விளங்குகிறது. மேலும் அது, ஒருவர் தம் வீட்டிற்கு வரும்போதும் வெளியே போகும்போதும் தம் மனைவியை முத்த மிடுவதன் முக்கியத்துவத்தைக் காட்டுகிறது. இது அல்லாஹ்வின் அன்புத் தூதருடைய வழிமுறையாகும். எனவே, ஒருவர் தம் மனைவியை முத்தமிட்டுப் பாசமாக விடைபெறாமல் வீட்டைவிட்டுப் போவது சரியானதன்று. அதேபோல், வீட்டிற்குத் திரும்பிவந்ததும் முதல் வேலை யாக, உணவு தயாரா, எவராவது தொலைப்பேசியில் அழைத்தாரா என்பன போல் கேள்விகேட்பதும் சரியல்ல!

உணர்ச்சிப்பூர்வமாக முத்தமிடுவதும் (அல்லது, பிரெஞ்சு முத்தம்) அல்லாஹ்வுடைய தூதரின் வழியாகும். அன்னை ஆயிஷா (ரழி) கூறுகிறார்:

أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يُقَبِّلُهَا وَهُوَ صَائِمٌ وَيَمُصُّ لِسَانَهَا

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) நோன்பு நோற்றிருக்கும்பொழுது அவளை முத்தமிடுவார்கள். மற்றும், அவளுடைய நாக்கை சூப்புவார்கள். *(சுனன் அபூ தாவூத் 2378)*[6]

இவ்வாறு, தம்பதியர் முன்விளையாட்டின் போது ஒருவரை யொருவர் உணர்ச்சிப்பூர்வமாக முத்தமிடவேண்டும். அதில் எச்சிலை பரிமாறிக்கொண்டால் தவறில்லை. ஒருவருக்கொருவர் நாவை சுவைப்பதும் சூப்புவதும் அனுமதிக்கப்பட்டது மட்டுமின்றி, அது நபிவழியும்கூட. ஒருவர் தம் துணைவரின் மேல் அல்லது கீழ் உதட்டை

[6] ஹனஃபி மற்றும் ஏனைய பிற சட்டவியலாளர்களின் கருத்துப்படி, எச்சில் பரிமாறிக் கொள்ளும் அளவிற்கு ஒருவர் தம் துணைவரை உணர்ச்சிப்பூர்வமாக முத்தமிடுவது அவரின் நோன்பை முறித்துவிடும்; அதற்கு ஈடுகட்டும் நோன்பும் *(கழா)* பரிகாரமும் *(கஃப்பாரா)* அவசியம் என்பது கவனிக்கத்தக்கது. *(மராகி அல்-ஃபலாஹ் ப.667)*

இந்த நபிமொழியைப் பொறுத்தவரை, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) நோன்பு நோற்றிருந்தபோது தம் மனைவியை உணர்ச்சிப்பூர்வமாக முத்தமிட்டார்கள் என்று கூறப்பட்டுள்ளதால், இதற்கு அறிஞர்கள் பின்வரும் விளக்கத்தை அளித்துள்ளனர். முதலாவதாக, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) துணைவியின் எச்சிலை விழுங்காமல் பார்த்துக்கொள்வார்கள். நாக்கை சூப்புதல் மிகுந்த கட்டுப்பாட்டுடன் செய்யப்பட்டது. எச்சில் பரிமாறி, விழுங்கும் அளவுக்கு அது செல்லவில்லை. இரண்டாவதாக, நாக்கை சூப்புதல் நோன்பு நோற்பதுடன் இணைந்து ஏற்படவில்லை என்ற ரீதியிலும் இதற்கு விளக்கமளிக்க இயலும். அப்படியென்றால், இந்த நபிமொழியின் பொருள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) நோன்பு நோற்றிருக்கும் வேளையில் ஆயிஷாவை முத்த மிடுவார்கள். எனினும், சாதாரண வேளையில் முத்தமிடும்பொழுது அதை உணர்ச்சிப் பூர்வமாக செய்து, துணைவியின் நாக்கை சூப்புவார்கள் (எனினும், நோன்பு நோற்றுள்ள போது இதைச் செய்தார்கள் என எண்ணுவதற்கு அவசியமில்லை).(காண்க. இப்னு ஹஜர் அல்-அஸ்கலானி, *ஃபத்ஹ் அல்-பாரி* **4:95** மற்றும் கலீல் அஹ்மது சஹரன்பூரி, *பத்ல் அல்-மஜ்ஹூத் ஃபீ ஹால் அபூ தாவூத்* **11:202-203**)

யும் சூப்பலாம். உதட்டை லேசாகக் கடிப்பதற்கும் அனுமதியுண்டு. ஆனால், புண்படுத்தாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

**ஆ. முத்தமிடக்கூடிய இடங்கள்.** முத்தமிடுதல் என்பது வாய் மற்றும் உதடுகளுக்கு மட்டுமல்ல. ஒருவர் உடலின் பிற பகுதிகளையும் முத்த மிடலாம். கன்னங்கள், நெற்றி, மூக்கு முனை, காதின் பின்புறம் - அல்லது, காது சுனையை சூப்புதல் - கண் இமை, கழுத்தின் பின்புறம், உள்ளங்கை, கைவிரல்கள், மணிக்கட்டு, முன்கை, இடுப்பு, வயிறு, தொப்புள், நெஞ்சு, மார்பகம், முதுகுத்தண்டு, முழங்கால் பின்புறம், தொடைகள், கால்கள் என எல்லா இடங்களிலும் முத்தத்தைப் பொழியலாம். இந்த உறுப்புகளை முத்தமிடுவது போலவே, இவற்றை நாவால் சுவைப்பதற்கும் அனுமதியுண்டு. பாலுறுப்புப் பகுதியைப் பொறுத்தவரை, ஒருவர் தம் வாயில் அசுத்தம் படாமல் இருப்பதில் கவனமாக இருக்கவேண்டும். ஏனெனில், அந்த அசுத்தப் பொருள்களை உட்கொள்வது தெளிவாகத் தடைசெய்யப்பட்டுள்ளது. பாலுறுப்புக்கு மிக நெருக்கமாக வாயைக் கொண்டுசெல்வதைத் தவிர்ப்பது மிகச் சிறந்தது. இதுபற்றி, வாய்வழி உறவு குறித்த பகுதியில் விரிவாகப் பார்க்கலாம், *இன்ஷா அல்லாஹ்*.

**இ. நாவால் துழாவுதல், சூப்புதல், கடித்தல்.** துணைவரின் உடலைக் கடிப்பது, நாவால் துழாவுவது அல்லது சூப்புவதால் - குறிப்பாகக் கழுத்தில் - அச்சுகள், அன்புக் கடிகள் பதிந்துவிடக்கூடும். இந்தச் சிராய்ப்புகள், தோலின் அடியில் உள்ள இரத்தநாள வெடிப்பின் விளைவாக ஏற்பட்டு, ஒருவரின் உடல்வாகைப் பொறுத்து, 4 முதல் 5 நாள்கள்வரை நீடித்திருக்கும்.

இஸ்லாமிய நோக்கில், பாசத்தைப் பொதுக்காட்சிப் படுத்துவதற்கு அனுமதியில்லை. அதேபோல், உடலுறவு சேர்க்கைக்குத் தடங்கலாக விளங்கும் எந்த ஒன்றையும் ஒதுக்கிவிடவேண்டும். இஸ்லாம் நாணத்தை யும் கண்ணியத்தையும் வலியுறுத்துகிறது. ஒழுக்கக்கேட்டுக்கு வழிவகுக்கும் செயல்களைத் தடைசெய்கிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ஒரு *அன்சாரியைக்* (மதினாவில் வசிக்கும் நபித்தோழர்) கடந்து சென்றபோது, அவர் தம் சகோதரனை வெட்கம், நாணம் *(ஹயா)* குறித்து கண்டித்துக் கொண்டிருந்தார் என்பதாக அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கிறார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்:

دَعْهُ فَإِنَّ الْحَيَاءَ مِنَ الْإِيمَانِ

*அவரை விட்டுவிடுங்கள். நாணம் என்பது இறைநம்பிக்கையைச் (ஈமான்) சார்ந்தது. (ஸஹீஹ் அல்-புஹாரி 24)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூ சயீத் அல்-குத்ரி (ரழி) அறிவிக்கிறார்:

إِنَّ مِنْ أَشَرِّ النَّاسِ عِنْدَ اللَّهِ مَنْزِلَةً يَوْمَ الْقِيَامَةِ ، الرَّجُلَ يُفْضِي إِلَى امْرَأَتِهِ وَتُفْضِي إِلَيْهِ ، ثُمَّ يَنْشُرُ سِرَّهَا

*தீர்ப்பு நாளன்று அல்லாஹ்வின் பார்வையில் மனிதர்களிலேயே மிகக் கொடியவர் யாரெனில், அந்த மனிதர் தம் மனைவியுடன் உடலுறவு கொண்டு அவளும் அவருடன் உடலுறவுகொண்டுவிட்ட பின் அவளின் இரகசியத்தை வெளிப்படுத்துபவர். (ஸஹீஹ் முஸ்லிம் 1437)*

இதனடிப்படையில், வயிறு அல்லது பின்பகுதி போன்ற வழக்கமாக மறைக்கப்படும் உடல் உறுப்பில் 'அன்புக் கடி' பதிப்பதற்கு அனுமதி யுண்டு. எனினும், வெளியில் தெரியும் பகுதி மீது அச்சுப் பதித்து, அதன் மூலம் தம்பதியருக்கு இடையில் என்ன நடந்தது என்பதை மக்கள் விளங்கிக்கொள்ளும்படி விடுவதற்கு அனுமதியில்லை.

கழுத்தில் ஓர் அச்சு விடப்பட்டால், அது மறையும்வரை அதை கவனமாக மறைப்பது அவசியம். தன் துணைவர் தன் உடலில் அச்சுப் பதித்து விட்டுள்ளார் என்பதைப் பெருமையாகக் காட்டிக்கொள்வது இஸ்லாத்திற்குப் புறம்பானது. இது விலக்கப்பட்ட செயல்.

**ஈ. மார்புகள் மூலம் கிளர்ச்சியூட்டுதல்.** மனைவியின் மார்பகங்களை முத்தமிடுவது, நாவால் துழாவுவது, சூப்புவது மற்றும் பொதுவாகப் பிசைவது அனுமதிக்கப்பட்டது மட்டுமின்றி, அவளுக்குப் பாலியல் ரீதியாகக் கிளர்ச்சி ஏற்படுத்துவதற்கும் மிகத் திறனுள்ளதொரு வழி. எனவே, கணவன் இதை அலட்சியமாக விட்டுவிடக்கூடாது.

எனினும், ஹனஃபி சிந்தனாவழியின்படி - வேறு சில சிந்தனாவழி களுக்கு மாற்றமாக - ஒருவர் தம் மனைவியின் பாலைக் குடிப்பதற்கு அனுமதியில்லை. அதுவும், வேண்டுமென்றே செய்வது பாவச்செயலாகும். இமாம் ஹஸ்கஃபி கூறுகிறார், 'அது (பால்) மனித உடலின் ஒரு பகுதி என்பதால், அவசியத் தேவையின்றி அதைப் பயன்படுத்துவது விலக்கப் பட்டது.' *(ரத் அல்-முஹ்தார் 3:211)*

ஆக, மனித உடலின் ஒரு பகுதியிலிருந்து உண்மையான தேவை யின்றி எவ்விதத்திலும் பயன் எடுப்பது விலக்கப்பட்டது என்பது இதிலிருந்து புலப்படுகிறது. குழந்தை தாய்ப்பால் குடிப்பது இதற்கு விதிவிலக்கு. அதற்கு உண்மையான தேவை *(ழரூரா)* இருக்கிறது; மேலும் ஆதாரமாக, புனித வேதத்திலும் அனுமதி உள்ளது.

எனவே, மனைவியின் மார்பகங்களில் பால் திரண்டிருந்து, அது வாய்க்குள் நுழைந்துவிடும் என அஞ்சினால், கணவன் அவற்றை சூப்புவதைத் தவிர்க்கவேண்டும். சூப்பும்போது ஒருவேளை பால் வாய்க்குள் நுழைந்துவிடுமாயின், அதை உடனே துப்பிவிடுவது அவசியம்.

ஒருவர் தம் மனைவியின் பாலை வேண்டுமென்றே குடிப்பது விலக்கப்பட்டுள்ள அதேவேளை, அதனால் அவரின் திருமணம் பாதிக்காது. சிலர் தவறுதலாக, மனைவியின் பாலைக் குடிப்பது திருமணத்தை முறித்துவிடும் என நம்புகின்றனர். ஒரு பெண் பாலூட்டும் தாயாக இருக்கும் நிலையில் உள்ள பாலூட்டு *(ரழாஆ)* விதிகள், அதற்கெனக் குறிக்கப்பட்ட சமயத்தில் பாலூட்டப்படும் குழந்தைகளுக்கு மட்டுமே பொருந்தும். அதற்குப் பிறகு இதற்கு முக்கியத்துவம் இல்லை.

ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:

دَخَلَ عَلَيَّ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَعِنْدِي رَجُلٌ ، قَالَ: يَا عَائِشَةُ مَنْ هَذَا؟ قُلْتُ: أَخِي مِنَ الرَّضَاعَةِ ، قَالَ: يَا عَائِشَةُ ، انْظُرْنَ مَنْ إِخْوَانُكُنَّ ، فَإِنَّمَا الرَّضَاعَةُ مِنَ الْمَجَاعَةِ

*ஒருமுறை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) என் வீட்டிற்குள் நுழைந்தபொழுது, அங்கே என்னுடன் ஒரு மனிதர் இருந்தார். 'ஆயிஷா! இது யார்?' என வினவினார்கள். 'என்னுடைய பாலூட்டுச் சகோதரன்' என நான் பதிலளித்தேன். அதற்கு அவர்கள், 'ஆயிஷா! உன்னுடைய பாலூட்டுச் சகோதரனை நிர்ணயிப்பதில் கவனமாக இருக்கவும்; ஏனெனில், பாலூட்டுக் காலத்தில் நிகழ்ந்தால் மட்டுமே பாலூட்டுக்குத் தகுதியுள்ளது' என்றார்கள். (ஸஹீஹ் அல்-புஹாரி 2504 ஸஹீஹ் முஸ்லிம் 1455, இங்கு புஹாரியின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

இந்த ஹதீஸின் அடிப்படையில், ஒரு வளர்ந்த மனிதருக்குப் பாலூட்டுவதிலும் பால் கொடுப்பதிலும் எவ்வொரு விளைவும் இல்லை; அதனால் ஒன்றும் நிறுவப்படுவதில்லை என்பதில் இஸ்லாமியச் சட்ட சிந்தனா வழிகள் நான்கும் ஒருமித்த கருத்துகொண்டுள்ளன. (*அல்-முக்னி* 9:201-202)

இறுதியாக, மனைவியும் தன் கணவனின் நெஞ்சு மற்றும் முலைக் காம்புகளை முத்தமிடவும் சூப்பவும் செய்யலாம். இதற்கு ஷரீஆவில் எந்தவொரு தடையும் இல்லை.

**உ. உணவுப் பொருட்களைக்கொண்டு கிளர்ச்சியூட்டுதல்.** ஒருவர் தன் துணையாளின் உடல் மீதுள்ள உணவுப் பொருட்களை உண்ணுவது அல்லது நாக்கால் சுவைப்பது குறித்து அடிக்கடி கேட்கப்படுகிறது.

சந்தேகமின்றி, இப்பழக்கம் இஸ்லாமிய ஒழுங்குக்கும் ஒழுக்கநெறிக்கும் மார்க்கப் பேணுதலுக்கும் புறம்பானது. உணவை நேரடியாக வாயால் கவ்வி உண்பது கூடாது. அதைக் கையால் எடுத்து உண்ணவேண்டும். மேலும், உண்ணுதல் தொடர்பான பல ஒழுங்குகளும் நபிவழிகளும் இங்கே நிறைவேறாமல் போகின்றன. உணவு அல்லாஹ்வுடைய அருட் கொடை *(நிஃமா)*. அதை உண்பதற்கு இஸ்லாமியச் சட்டம் *(ஷரீஆ)* பல ஒழுங்குகளை விதித்துள்ளது: அல்லாஹ்வின் பெயரைக்கொண்டு துவங்குதல், முடித்ததும் அல்லாஹ்விற்கு நன்றிசெலுத்துதல், முன்னால் இருப்பதை எடுத்து உண்ணுதல், வலக் கையால் உண்ணுதல், ஒன்றின்மீது சாய்ந்த நிலையில் உண்ணாதிருத்தல் எனப் பல விதிமுறைகள் உள்ளன.

எனவே, எவ்விதத்திலும் உணவுக்கு அவமரியாதை செய்வது – உடல் மீது, அதுவும் அசுத்தமான பாகங்களுக்கு நெருக்கமாக வைப்பது இதில் அடங்கும் – இஸ்லாமியப் போதனைகளுக்குப் புறம்பானது. இப்பழக்கம் முற்றிலும் தவிர்க்கப்பட வேண்டும். ஏனெனில், இவை யின்றி, இஸ்லாமிய ஒழுங்குக்கும் உன்னத முறைகளுக்கும் ஏற்ப முன்விளையாட்டுக்கு வேறு பல இன்பமான வழிகள் உள்ளன.

### 2. உடலைப் பிடித்துவிடுதலும் தடவுதலும்

**அ. பிசைதலும் வருடுதலும்.** முன்விளையாட்டின் ஒரு பகுதியாக, தம்பதியர் இருவரும் ஒருவருக்கொருவர் உடல்களை மென்மையாகப் பிடித்துவிடுதலும் பிசைதலும் தடவி, நீவி வருடுதலும் அவசியம். இது பாலியல் கிளர்ச்சியூட்டுவதற்குத் திறன்மிக்கதொரு வழியாகும். ஒருவர் கைகள், தோள்பட்டைகள், முதுகு, வயிறு, தொடைகள், கால்கள், பாதங்கள் உட்பட உடலின் எல்லாப் பகுதிகளையும் தடவிக் கோதி, இச்சையைத் தூண்டும் வகையில் பிடித்துவிடலாம். எண்ணெய் அல்லது நறுமணப் பொடிகள் *(பவுடர்)* போன்ற மசகு பொருளைப் பயன்படுத்தி இதைச் செய்யலாம்.

ஷெய்கு அலீ அல்-முத்தகீ அல்-ஹிந்தி தம் *கன்ஸ் அல்-உம்மாலில்* பதிவுசெய்துள்ள ஹதீஸில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இவ்வாறு கூறியதாக அறிவிக்கப்படுகிறது:

إن الرَجل إذَا نَظَرَ إلى امرأته وَنَظَرَت إلَيه نَظَرَ الله تَعَالى اليهمَا نَظرَة رَحمَة ، فَإذَا أَخَذَ بكَفهَا تَسَاقطَت ذنوبهمَا من خلَال أَصَابعهمَا

*ஒருவர் தம் மனைவியை சாடையாய்ப் பார்த்து அவளும் அவரை (அன்பு மற்றும் பாசத்துடன்) சாடையாய்ப் பார்க்கும்பொழுது, அவர்களை அல்லாஹ்*

கருணையோடு பார்க்கிறான். அவர் அவளின் கையைப் (அன்பு மற்றும் பாசத்துடன்) பற்றும்பொழுது, அவர்களுடைய பாவங்கள் அவர்களின் விரல்களுக்கு இடையிலிருந்து உதிர்ந்துவிடுகின்றன. (*கன்ஸ் அல்-உம்மால் ஃபீ சுனன் அல்-அக்வால் வ அல்-அஃப்ஆல்* **44437**. இதன் அறிவிப்புத் தொடர் பலவீனமானது)

தம்பதியர் இருவரும் ஒருவருக்கொருவர் 'கிளர்ச்சி மண்டலங் களை' - உடலில் உச்ச பாலுணர்வைக் கிளப்பக்கூடிய பகுதிகளை — தேடியறியவேண்டும். இந்தப் பகுதிகள் ஒருவரின் உடல்வாகைப் பொறுத்து வேறுபடும். இவை உடலின் எந்தப் பகுதியாக வேண்டு மானாலும் இருக்கலாம். எனினும், பெரும்பாலான மக்களுக்கு பொதுவான சில 'கிளர்ச்சி மண்டலங்கள்' இருக்கின்றன. எடுத்துக் காட்டாக ஆண்குறி, கிளைடோரிஸ் (கந்து/மதனபீடம்) இரண்டும் நுண்ணுணர்வுள்ள மண்டலங்களாகும்.

அதிக நுண்ணுணர்வு பகுதிகளுள் காதுகள், பிடரி, மார்பகங்கள், மற்றும் முலைக்காம்புகள், தொடைகளின் உட்பகுதி, முழங்கால் பின்பகுதி, பிட்டம், உள்ளங்கால், கால்விரல்கள், இயல்பாகவே ஆண்குறி மற்றும் பெண்குறி ஆகியன அடங்கும். இந்தப் பகுதிகளை மென்மையாகப் பிடித்துவிடுவதும் நீவிக்கொடுப்பதும் துணைவருக்குப் பாலுணர்வுக் கிளர்ச்சியூட்ட உதவும். ஒருவர் தம் துணைவருக்கு இன்பம் தருவது, *இன்ஷா அல்லாஹ்* நற்கூலிக்குரிய ஒரு நற்செயல் என்பதை மனத்தில் வைத்துக்கொள்ளுங்கள்.

**ஆ. பாலுறுப்புக்களைத் தொடுவதும் கொஞ்சுவதும்.** துணைவரின் பாலுறுப்பைத் தொட்டு, நீவி, கொஞ்சுவதில் தவறேதுமில்லை. உண்மை யில், முன்விளையாட்டின் ஒரு பகுதியாக தம்பதியர் ஒருவருக்கொருவர் பாலுறுப்புகளை நீவி விளையாடுவது ஊக்குவிக்கப்பட்டுள்ளது. மனைவி கணவனின் ஆணுறுப்பைப் பிடித்து நீவலாம், கணவன் அவள் பெண்குறியைத் தொட்டு வருடலாம். இவை, துணைவரை உடலுறவுக்கு ஆயத்தமாக்கு வதற்கு திறனுள்ளதொரு வழியாகும். இது விஷயமாகப் பெண்ணின் கந்துவை (கிளைடோரிஸ்) கிளர்ச்சியூட்டுவது முக்கியம். அது பெண்ணுடைய பிறப்புறுப்பில் பெண்குறியின் முன்பாகத்தில் உள்ள சிறிய நுண்ணுணர்வுமிக்க, நிமிர்வுபெறக்கூடிய ஒரு பகுதி. இதனால், ஆழ்ந்த பாலியல் இசைவு ஏற்படும்.

புகழ்பெற்ற ஹனஃபி ஃபிக்ஹு குறிப்பு நூலான *அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யாவில்* அபூயூசுஃப் பின்வருமாறு கூறியதாக உரைக்கப் படுகிறது: ஒரு மனிதர் தம் மனைவியின் பெண்குறியைத் தடவி நீவுவதும் அவள் அவர் நிமிர்வுபெறுவதற்காக அவரின் ஆண்குறியை

பிடித்து நீவுவதும் பற்றி நான் இமாம் அபூ ஹனீஃபாவிடம் கேட்டேன், 'அதில் ஏதும் தவறு உள்ளதாக உங்களுக்குத் தோன்றுகிறதா?' என்று. அதற்கு அவர், 'இல்லை. மாறாக, அதற்காக அவர்களுக்கு நற்கூலி கிடைக்கும் என்பதில் எனக்கு உறுதியான நம்பிக்கையுள்ளது' என்று கூறினார். (*அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* **5:328**. இதே அறிவிப்பை ஷாஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் ஃகாதிப் அஷ்-ஷிர்பீனியும் தம் *முக்னி அல்-முஹ்தாஜ்* **3:181** எனும் நூலில் பதிவுசெய்துள்ளார்)

**இ. கைகொண்டு பரவசநிலை அடையச்செய்தல்.** கணவன் தன் கைகளை யும் கைவிரல்களையும் பயன்படுத்தி மனைவியைப் பரவசநிலை அடையச்செய்வதற்கு அனுமதியுண்டு. அதேபோல், மனைவியும் தன் கைகளால் கணவனைப் பரவசநிலை அடையச் செய்யலாம். குறிப்பாக, கணவன் இதை மனைவிக்குச் செய்துவிடுவது ஊக்குவிக்கப்பட்டுள்ளது. ஏனெனில், பெண்களுக்குப் பரவசநிலையை அடைய கூடுதல் நேரம் பிடிக்கும்.

புகழ்பெற்ற ஹனஃபி சட்டவியலாளர், இமாம் இப்னு ஆபிதீன் தம்முடைய *ரத் அல்-முஹ்தாரில்*, தம்பதியருக்கிடையில் ஒருவருக் கொருவர் கைகளைக்கொண்டு பரவசநிலை அடைந்துகொள்வதற் கான அனுமதியைத் தெளிவுற உரைக்கிறார். அதில் அவர் *மிஃராஜ் அல்-திராயாவை* மேற்கோள் காட்டுகிறார்: 'மனைவியின் கைகளால் பரவசநிலை அடைவதற்கு அனுமதியுண்டு.' (*ரத் அல்-முஹ்தார் அலா அல்-துர் அல்-முஃக்தார்* **2:399**)

இதற்கும் ஒருவர் தம் சொந்தக் கைகளால் செய்யும் தற்புணர்ச்சிக்கும் இடையிலுள்ள வேறுபாட்டை இமாம் இப்னு ஆபிதீன் விரிவாக விளக்குகிறார். பின்னது தெளிவாகத் தடை செய்யப்பட்டுள்ளது. முன்னதில், ஒருவர் திருப்திபெற அனுமதிக்கப்பட்ட ஒரு பொருளி லிருந்து - தன் துணைவரின் உடல் பாகத்திலிருந்து - தன்னைத் திருப்திப் படுத்திக் கொள்கிறார். ஆம், அவளின் முழு உடலிலிருந்தும் அவர் பாலியல் திருப்திபெறுவதற்கு உரிமையுண்டு. ஆனால் பின்னதிலோ, இவ்வாறு நடப்பதில்லை. ஒருவர் தம் கைகளால் செய்யும் தற்புணர்ச்சிக் கான தடை பிறவற்றுக்கும் அவர் தன் சொந்தத் தொடைகள், சுவர் அல்லது வேறொரு பொருளால் தற்புணர்ச்சி செய்வதற்கும் பொருந்தும். (காண்க: மேற்கூறப்பட்ட நூல்)

*அல்-துர் அல்-முஃக்தார்* என்னும் நூலின் ஆசிரியர், அதில் சட்ட ரீதியான தண்டனைகள் (*கிதாப் அல்-ஹுதூத்*) தொடர்பான பாடத்தில் கூறுகிறார்: 'ஒரு மனிதர் தம் ஆண்குறியைப் பிடித்து நீவ தம் மனைவியை

அனுமதித்து விந்து வெளியாகிவிட்டால், அது விரும்பத்தகாதது. எனினும், அவர் மீது பாவம் எதுவும் இல்லை.' இதற்குக் கருத்துரை அளிக்கும் இமாம் இப்னு ஆபிதீன் இவ்வாறு விளக்கமளிக்கிறார்: இங்கு விரும்பத்தகாதது என்றால் 'லேசாக விரும்பத்தகாதது *(கராஹ தன்ஸீஹ்)*' எனப் பொருள். அதில் பாவமில்லை. இதையடுத்து, அவர் - நாம் மேலே கலந்துரையாடிய - ஒருவர் தம் மனைவியின் கைகளால் பரவசநிலை அடைந்துகொள்வதற்கு அனுமதியுண்டு என நோன்பு பற்றிய பாடத்தில் உள்ளதை அவர் சுட்டுகிறார். *(ரத் அல்-முஹ்தார்* **4:27)**

ஒருவர் தம் மனைவியின் கைகளால் பரவசநிலை அடைந்துகொள் வதன் அனுமதி குறித்த இந்தப் பகுப்பாய்வின் அடிப்படையிலும் மேற்கூறிய தெளிவான, வெளிப்படையான புனித உரையின் அடிப் படையிலும் இதன் மறுநிலையும் அனுமதிக்கப்பட்டது. அதாவது கணவனின் கைகளால் மனைவியைப் பரவசநிலை அடையச் செய்தல் எனும் முடிவுக்கு வரலாம்.

ஷாஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் கஸ்ஸாலியும், கணவன் தன் மனைவியின் கைகளால் பரவசநிலை அடைந்துகொள்வதை அனுமதித்துள்ளார். (காண்க: *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* **6:179)**

**ஈ. பாலுறுப்புகளைப் பார்த்தல்.** தம்பதியர் ஒருவர் மற்றவரின் பாலுறுப்பைப் பார்க்கும் விஷயத்திலும், பெரும்பாலும் எல்லா சிந்தனாவழிகளும் அனுமதி அளிக்கின்றன. என்றாலும், தவிர்ப்பது மேன்மையானது. திருமண இணைவு மூலம் கணவன், மனைவி இருவரும் ஒருவரையொருவர் உடலின் பாலுறுப்புகள் உட்பட எந்தப் பகுதியை வேண்டுமானாலும் பார்ப்பதற்கு ஷரீஆ அனுமதிக்கிறது.

பஹ்ஸ் இப்னு ஹகீம் (ரழி), தம் பாட்டனாரிடமிருந்து (முஆவியா இப்னு ஹய்தா) தம் தந்தை தம்மிடம் அறிவித்ததாகக் கூறுகிறார். நான் (முஆவியா) கேட்டேன், 'அல்லாஹ்வின் தூதரே! எங்களின் மறைவு பாகங்களில் எவற்றை வெளிக்காட்டலாம், எவற்றைக் குறித்து எச்சரிக்கையாக இருக்கவேண்டும்?' இதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்),

احْفَظْ عَوْرَتَكَ إِلَّا مِنْ زَوْجَتِكَ أَوْ مما مَلَكَتْ يَمِينُكَ...

உங்கள் மறைவு பாகங்களை *(அவ்ரா)* காத்துக்கொள்ளுங்கள், உங்களின் மனைவி அல்லது அடிமைப் பெண்களைத் தவிர... என்று கூறினார்கள். *(சுனன் அல்-திர்மிதீ* **2769** மற்றும் *சுனன் இப்னு மாஜா* **1920)**

இமாம் அப்துர் ரஸ்ஸாக் அல்-சனஆனி தம் *அல்-முஸன்னஃ*பிலும் இமாம் தபரானி தம் *அல்-முஃஜம் அல்-கபீரிலும்*, சஅத் இப்னு மஸ்ஊத் அல்-கிந்தி (ரழி) அறிவித்த ஹதீஸைப் பதிவுசெய்துள்ளனர்:

أَتَى عُثْمَانُ بنُ مَظْعُونٍ رَسُوْلَ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ : يَارَسُوْلَ اللهِ ! إِنِّي لَأَسْتَحْيِي أَنْ تَرَى أَهْلِي عَوْرَتِي ، قَالَ :وَ لِمَ وَقَدْ جَعَلَكَ اللهُ لَهُمْ لِبَاسًا ، وَجَعَلَهُمْ لَكَ لِبَاسًا

உஸ்மான் இப்னு மஃஸூன் (ரழி) அல்லாஹ்வின் தூதரிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! என் மனைவி என் மறைவு பாகங்களை *(அவ்ரா)* பார்ப்பது எனக்கு வெட்கமாக இருக்கிறது' என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: 'ஏன் அப்படியிருக்க (வெட்கப்பட) வேண்டும்? அல்லாஹ் தான் உங்களை அவர்களுக்கு ஆடையாகவும் அவர்களை உங்களுக்கு ஆடையாகவும் ஆக்கியுள்ளானே...' *(அல்-முசன்னஃப்* **6:85** *அல்-முஃஜம் அல்-கபீர்* **9:37**)

ஹனஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் புர்ஹானுத்தீன் அல்-மர்கினானி தம்முடைய ஆக்கமான *அல்-ஹிதாயாவில்* இவ்வாறு கூறுகிறார். ஒருவர் தம் மனைவியின் மறைவுப் பாகங்களைப் பார்க்கலாம். ஏனெனில், அவர் அவளுடைய முழு உடலையும் இச்சையுடனோ *(ஷஹ்வா)* இச்சையின்றியோ பார்ப்பதற்கு அனுமதியுண்டு. இந்தச் சட்டத் தீர்ப்புக்கு ஆதாரமாக அவர் பின்வரும் ஹதீஸைக் குறிப்பிடுகிறார்: அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறுகிறார்கள்: 'உங்கள் பார்வையைத் தாழ்த்திக்கொள்ளுங்கள், உங்கள் அடிமைப்பெண் அல்லது மனைவியைத் தவிர.' மேலும், மனைவியின் மறைவுப் பாகங்களைத் தொடுதல், உடலுறவுகொள்ளுதல் இரண்டும் அனுமதிக்கப்பட்டிருக்க, வெறுமனே அதைப் பார்ப்பதற்கு இன்னும் கூடுதல் அனுமதியுண்டு எனும் அடிப்படையையும் அவர் முன்வைக்கிறார். எனினும், தம்பதியர் இருவரும் ஒருவருக்கொருவர் பாலுறுப்புகளைப் பார்ப்பதைத் தவிர்த்தல் மேன்மையானது என அவர் கூறுகிறார். (*அல்-ஹிதாயா* **4:461**)

*அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யாவில்* அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) இவ்வாறு கூறுவதுண்டு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது: 'உடலுறவின் போது கணவன் தன் மனைவியின் பாலுறுப்புகளைப் பார்ப்பது சிறந்தது. ஏனெனில், அதனால் முழு இன்பமும் நிறைவும் கிடைக்கும்' (*அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* **5:328**. இதை அறிவித்தவர் இப்னு உமர்தான் என்பது உறுதியாக நிறுவப்படவில்லை என இமாம் அய்னி கூறுகிறார். காண்க: *ரத் அல்-முஹ்தார் அலா அல்-துர் அல்-முஃக்தாரி* **6:367**)

ஷாஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் காதிப் அஷ்-ஷிர்பீனியும், ஒருவர் தம் துணைவரின் பாலுறுப்புகளைப் பார்ப்பதற்கான அனுமதியைக் கூறிவிட்டு, அதை தேவையின்றி செய்வது விரும்பத்தகாதது என்கிறார். இதற்கு அவர் அன்னை ஆயிஷாவின் கூற்றை மேற்கோள் காட்டுகிறார்: 'நான் ஒருபோதும் அல்லாஹ்வுடைய தூதரின் பாலுறுப்புகளைப் பார்த்ததில்லை. அவரும் என்னுடையதைப் பார்த்ததில்லை.' (இதை இப்னு மாஜா தம் *சுனனிலும்* (1922) இமாம் அஹ்மது தம் *முஸ்னதிலும்* மற்றவர்களும் பதிவுசெய்துள்ளனர்)

அவர் மேலுமொரு விஷயத்தையும் கூறுகிறார்: 'மறைவுப் பாகங்களைப் பார்ப்பதால் கண்கள் குருடாகிவிடும்' எனும் ஹதீஸ் பலவீனமானது *(ழயீஃப்)* அல்லது புனையப்பட்டது *(மவ்ழூஃ)* என இமாம் இப்னு ஹிப்பான், இமாம் இப்னு அல்-ஜவ்ஸி போன்ற ஹதீஸ் அறிஞர்கள் கருதியுள்ளனர். (*முக்னி அல்-முஹ்தாஜ்* 3181)

துணைவரின் பாலுறுப்புகளைப் பார்ப்பதன் அனுமதி குறித்து ஹனஃபி மற்றும் ஷாஃபி நிலைப்பாட்டுடன் மாலிக்கி மற்றும் ஹம்பலி சிந்தனாவழிகளும் உடன்படுகின்றன. (*அல்-முக்னி* 7:458 - ஹம்பலி சிந்தனாவழி; *ஹாஷியா அல்-தசூக்கி அலா அல்-ஷரஹ் அல்-கபீர்* 2:341 மாலிக்கி சிந்தனாவழி)

**உ. ஆடையின்றி இருத்தல்.** தம்பதியர் இருவரும் முழு அம்மணமாக இருப்பதற்கும் அனுமதியுண்டு. சமகால அறிஞர், ஷெய்கு முஹம்மது கன்ஆன் தம்முடைய நூல், *அல்-முஆஷரா அல்-ஸவ்ஜிய்யாவில்* எழுதுகிறார்: 'இருவரும் உடையணிந்த கோலத்திலேயே கணவன் தன் மனைவியுடன் உடலுறவுகொள்வது சரியல்ல. மாறாக, உடலுறவுக்கு முன் தம்பதியர் இருவரும் – முற்றிலும்கூட அம்மணமாக இருப்பது சிறந்தது. ஏனெனில், இது அவர்களுக்குச் சிறந்த விஷயம்...' (ப.64)

ஹனஃபி அறிஞர்களை மேற்கோள்காட்டி *அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யாவிலும்* இதுபற்றிக் கூறப்படுகிறது. உடலுறவின்போது தம்பதியர் அம்மணமாக இருப்பதற்கு அனுமதியுண்டு. ஒரே நிபந்தனை, அவர்கள் அறைக்குள் இருக்கவேண்டும் (வேறு எவரும் அவர்களைப் பார்க்கக்கூடாது). (*அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* 5:328)

எனினும், தம்பதியர் தங்களின் ஆடையற்ற உடல்களை (ஒன்றாக) மறைப்போ போர்வையோ கொண்டு மூடவேண்டும் என அறிஞர்கள் கூறுகின்றனர். இமாம் கஸ்ஸாலி கூறுகின்றார்: 'கணவன் தன்னையும் தன் மனைவியையும் (சேர்த்து) ஒரு போர்வையால் மூடிக்கொள்வது

*அவசியம்' (காண்க: இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன் **6:174**)*

இதற்கு ஆதாரம், இப்னு மாஜா தம் சுனனில் பதிவுசெய்துள்ள நபிமொழி. அதில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக உத்பா இப்னு அப்துஸ் ஸுலமி (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا أَتَى أَحَدُكُمْ أَهْلَهُ فَلْيَسْتَتِرْ وَلَا يَتَجَرَّدْ تَجَرُّدَ الْعَيْرَيْنِ

ஒருவர் தன் துணைவருடன் உடலுறவு கொள்ளும்பொழுது அவர் தம்மை மறைத்துக்கொள்ளட்டும். காட்டுக் கழுதைகள் பொதுவிடத்தில் அம்மணமாய் இருப்பதுபோல் முற்றிலும் அம்மணமாய் இருக்கக்கூடாது. *(சுனன் இப்னு மாஜா **1921**)*

மாபெரும் ஹதீஸ் அறிஞர் *(ஹாஃபிழ்)*, ஸைனுத்தீன் அல்-இராகியின் கூற்றில், இந்த ஹதீஸின் அறிவிப்புத் தொடர் *(இஸ்னாத்)* பலவீனமானதும் நம்பகத்தன்மையற்றுதுமாகும் *(ழயீஃப்)*. (காண்க: *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* **6:175**)

இன்னொரு ஹதீஸ் அறிஞரான இமாம் முனவி கூறுகிறார்: 'இந்த ஹதீஸில் மறைப்பிற்கான உத்தரவு பரிந்துரைக்கப்பட்டது' *(இஸ்திஹ்பாப்)*. ஏனெனில், மறைப்பது மூலம் ஒருவர் அல்லாஹ்வுக்கும் வானவர்களுக்கும் மரியாதை காட்டுகிறார்.

எனினும், ஒருவர் அம்மணமாய் இருப்பது விலக்கப்பட்டதல்ல; சற்று விரும்பத்தகாததே *(மக்ரூஹ் தன்ஸீஹ்)*. *(ஃபைழ் அல்-காதிர் ஷரஹ் அல்-ஜாமிஃ அல்-சகீர் **1:308**)*

முடிவாக, தம்பதியர் தங்களைப் போர்வையால் மறைக்காமலே முழு அம்மணமாக இருப்பது சற்று விரும்பத்தகாதது என்றபோதிலும், அது அனுமதிக்கப்பட்டதே. எனினும், அவர்கள் தங்களை ஒரு போர்வையால் மூடிக்கொண்டால், அவர்கள் எல்லா ஆடைகளையும் கழற்றிவிட்டாலும்கூட அதில் எவ்விதத் தவறுமில்லை.

### 3. உடல்கள் தொடுதல்

முன்விளையாட்டின் ஒருபகுதியாக, முழுமையான உடலுடன் உடல் சேர்தலுக்கு அனுமதியுண்டு. அதாவது, ஒருவர் தம் துணைவரின் உடலைத் தம் உடலோடு முழுமையாக இணைக்கலாம். இதில் கட்டியணைத்தல், மோகமாகப் பிடித்து நீவுதல், கொஞ்சுதல், ஒருவர் மீது ஒருவர் உருளுதல், துணையாளைத் தம் கைகளுக்குள் வைத்தல்,

துணைவரின் உடலோடு தன் உடலைத் தேய்த்தல், முற்றிலும் துணைவர் மீது ஏறிப் படுப்பது ஆகிய எல்லாம் அடங்கும். இவற்றை ஆடையுடனோ ஆடையின்றியோ செய்வதற்கு அனுமதியுண்டு.

இங்கே மற்றுமொரு கேள்வி எழுகிறது. கணவன் தன் மனைவியின் தொடைகள், வயிறு மற்றும் இன்ன பிற உடலுறுப்புகள் மீது ஆண்குறியைத் தேய்த்து விந்தை வெளியாக்குவது; அதேபோல், மனைவி தன் கணவனின் ஓர் உடலுறுப்பு மீது பெண்குறியைத் தேய்த்துப் பரவச நிலை அடைவது அனுமதிக்கப்பட்டதா?

இந்த நூலில் ஏற்கனவே நாம் ஒருவருக்கொருவர் கையால் பரவச நிலை பற்றி விவாதித்ததன் அடிப்படையில், இந்தச் செயல் தம்பதியர் இருவருக்கும் அனுமதிக்கப்பட்டது என்பது தெளிவாகிறது. இமாம் இப்னு ஆபிதீன் தம் *ரத் அல்-முஹ்தாரில்* இதுபற்றி விளக்குகிறார். கணவன் தன் மனைவியின் தொடைகள் *(தஃப்ஃகீத்)* அல்லது வயிறு *(தப்தீன்)* மீது ஆண்குறியை தேய்த்து விந்து வெளியாக்குவதற்கு அனுமதியுண்டு. எனினும், இது சற்று விரும்பத்தகாதது *(கராஹா தன்ஸீஹிய்யா)*. ஏனெனில், இங்கு விந்து வீணாகிறது. (*ரத் அல்-முஹ்தார்* **2:399** மற்றும் **4:27**)

இந்தியத் துணைக்கண்டத்தின் புகழ்பெற்ற சட்டவியலாளர், ஷெய்கு முஃப்தி முஹம்மது ஷாஃபி உஸ்மானி கூறுகிறார்: 'ஒருவர், தேவையின் காரணமாக, தம் மனைவியின் கைகள் மற்றும் பிற உறுப்புகள் மீது தேய்த்து விந்து வெளிப்படுத்துவதற்கு (முழு) அனுமதியுண்டு. அது விரும்பத்தகாததுகூட அல்ல. மனைவி மாதவிடாயோ பேறுகால இரத்தப்போக்கோ கொண்டிருக்கும் சமயத்தில் கணவன் தன் பாலியல் இச்சைகளை நிறைவேற்றவேண்டிய அவசியம் ஏற்படுதல் முதலியன தேவை, சந்தர்ப்பங்களைப் பொறுத்தவை. அது தேவை இன்றி செய்யப்பட்டால் (கூட அதற்கு அனுமதியுண்டு. எனினும்) சற்று விரும்பத்தகாதது.' (*இம்தாத் அல்-முஃப்தீன்* **2:585**)

ஆக, திருமணம் மூலம் ஒன்றுசேர்வதன் வாயிலாக தம்பதியர் ஒருவருக்கொருவர் இன்பம் பெற்றுக்கொள்வதற்கு அனுமதியுண்டு எனும் கோட்பாட்டை இங்கே மீண்டும் வலியுறுத்துகிறோம். எனவே, தம்பதியர் இருவரும் தங்கள் பாலுறுப்புகளை ஒருவர் மற்றவரின் உடல் மீது தேய்த்து பரவசநிலை அடைந்துகொள்ள அனுமதியுண்டு. எனினும், அதற்கான தேவை இல்லாதிருப்பின், அதைத் தவிர்ப்பது மேன்மையானது. மேலும், கிளர்ச்சியூட்டுதலுக்கான ஊடகம் ஒருவருடைய துணைவரின் உடலாக இருத்தல்வேண்டும். சுய கிளர்ச்சியூட்டலாக இருப்பின் அது விலக்கப்பட்ட 'தற்புணர்ச்சியாகக்' கருதப்படும்.

### பிற சமகால முன்விளையாட்டு வடிவங்கள்

நாம் முன்விளையாட்டு குறித்து பொதுவான இஸ்லாமிய வழிகாட்டுதல் பற்றி கலந்துரையாடினோம். எனினும், இன்று புதிய முன்விளையாட்டு மற்றும் பாலுணர்வூட்டும் முறைகள் தோன்றியுள்ளன. அவற்றை இஸ்லாமியக் கண்ணோட்டத்தில் விளங்கிக்கொள்வது முக்கியம்.

### 1. பாலியல் துணைக் கருவிகளும் சாதனங்களும்

பாலியல் துணைக்கருவிகள் என்பது, தம்பதிகள் சாதனங்களைக் கொண்டு பரவசநிலையோ இதர பாலியல் செயல்பாடுகளில் தூண்டுதலுக்காக அல்லது பாலியல் கிளர்ச்சியை மேம்படுத்துவதற்காக அல்லது பரவசநிலை அடைவதற்காகவோ பயன்படுத்தப்படும் ஒரு பொருள். மிக அதிகமாக வழக்கில் உள்ள சில துணைக்கருவிகள்: டில்டோ, அதிர்விகள் (vibrators), கந்து கிளர்ச்சியூட்டிகள் (clitoris stimulators), நீட்சி ஆணுறைகள் (extension condoms), பெண்குறி பந்துக்கள் (vaginal balls) மற்றும் பல்வேறு பசைகள், களிம்புகள்.

இன்று முஸ்லிம் தம்பதிகள் மத்தியில், உடலுறவுச் செயல்திறனை மேம்படுத்துவதற்காகப் பாலியல் துணைக்கருவிகளைப் பயன்படுத்தும் வழக்கம் அதிகரித்துவருகிறது. ஆனால், இதுகுறித்து இஸ்லாமியரீதியாக சில விஷயங்களைக் கருத்தில்கொள்ள வேண்டியுள்ளது.

**அ. ஒருவருக்கு சிரமத்தை ஏற்படுத்தினால் என்ன செய்வது?** ஒருவர் சுயதீங்கு விளைவித்துக்கொள்வதை ஷரீஆ அனுமதிப்பதில்லை. எனவே, பாலியல் துணைக்கருவிகள் தம்பதியர் இருவருள் ஒருவரை பாதித்தால் கூட அதற்கு அனுமதியில்லை. தம்பதியர் இருவருக்கும் அது எவ்விதத் தீங்கும் விளைவிக்காமல் இருப்பது அவசியம்.

**ஆ. உயிரினங்களின் உருவத்தில் இருக்கலாமா?** சில பாலியல் துணைக் கருவிகள் உயிரினங்களின் உருவத்தில் இருக்கலாம். அவற்றுக்கு அனுமதி யில்லை. ஏனெனில், உருவங்கள் செய்வது *(தஸ்வீர்)* விலக்கப்பட்டது.

**இ. மசகுப் பொருட்களைப் பயன்படுத்தலாமா?** மசகுப் பொருள்கள் (lubricants), களிம்புகள் (lotions), ஜெல்கள், கிரீம்கள் ஆகியவற்றுக்கு அனுமதியுண்டு. அவை விரும்பத்தகாதவைகூட அல்ல. எனினும், அவை எவ்விதத் தீங்கும் ஏற்படுத்தக்கூடாது.

**ஈ. அதிர்விகளைக் கிளர்ச்சியூட்டுவதற்குப் பயன்படுத்தலாமா?** அதிர்விகள் (vibrators) போன்ற சாதனத்தைப் பயன்படுத்தி பாலுறுப்புகளைத் தவிர

உடலின் பிற பகுதிகளையோ மனைவியுடைய கந்து உள்பட பெண் குறியின் புறப் பகுதியையோ கிளர்ச்சியூட்டுவதற்கு அனுமதியுண்டு. இதற்கு நிபந்தனை, அதை அவருடைய துணைவர் செய்துவிடவேண்டும்; ஒருவர் சுயமாக செய்தல் கூடாது. ஒருவர் தம் தனிமையின் துன்பத்தைப் போக்கிக்கொள்ள இந்தச் சாதனங்களை சுயமாகப் பயன்படுத்துவது பாவம். அது தற்புணர்ச்சியின் ஒரு வடிவமாகக் கருதப்படும். மேலும், துணைவரைக் கொண்டு சாதனங்களைப் பயன்படுத்துவதால் அது ஒருவர் தனியாக இருக்கும்பொழுதும் பயன்படுத்த வழிவகுக்கும் என அஞ்சினால், அவற்றைத் தவிர்த்தல் வேண்டும்.

***உ. பரவசநிலை அடைவதற்குப் பயன்படுத்தலாமா?*** மனைவியுடைய பெண்குறியின் உட்பகுதிக்குள் ஓர் அதிர்வியை அல்லது டில்டோவை விட்டு அவளுக்குப் பரவசநிலை ஏற்படுத்துவதற்கு அனுமதியில்லை, அதைக் கணவன் செய்துவிட்டாலும்கூட. அதேபோல், கணவனும் பாலியல் துணைக்கருவிகள் அல்லது செயற்கைப் பெண்குறிகள் போன்ற சாதனங்களைப் பயன்படுத்தி விந்துவெளிப்படுத்துவதற்கு அனுமதியில்லை – அப்போது உடன் மனைவி இருந்தாலும் சரியே. தம்பதியர் ஒருவர் மற்றவருடைய உடலின் எந்தப் பகுதியிலிருந்தும் இன்பம் பெறுவதற்கு ஷரீஆ அனுமதிக்கிறது என்பதை நாம் முன்பு விளக்கியிருந்தோம். எனினும், ஒருவருடன் ஒருவர் இருக்கையில் இன்னொரு கருவியைப் பயன்படுத்தி தற்புணர்ச்சி செய்வதற்கு அனுமதியில்லை. இது, பெண்ணே தன் கணவனுக்காக ஒரு கருவியைப் பிடித்துக்கொண்டு கணவன் தற்புணர்ச்சிசெய்து விந்துவெளியாக்கிக் கொள்வதற்குச் சமம் என்பதால், தெளிவாக இதற்கு அனுமதியில்லை.

பாலியல் சாதனங்களைப் பயன்படுத்துவது உறவில் பாதிப்புகள் ஏற்படுத்தலாம். ஆண் சோம்பேறித்தனம் அடைந்துவிடலாம். கணவன் - மனைவி இடையே இயற்கையான உடலுறவில் ஏற்படும் இன்ப உறவை அது தடுக்கலாம். மனைவி, தன் கணவன் இயற்கையாகத் தன்னைத் திருப்திப்படுத்த தகுதியற்றவன் எனக் கருதி அவர்மீது மரியாதை இழக்கலாம். ஆக, பாலியல் கருவிகளை மொத்தமாகத் தவிர்ப்பது மிகச் சிறந்தது – அது உறவுகளை மெருகூட்டும் நோக்கில் செய்யப்பட்டாலும் கூட அல்லது வேறுவழியில்லாத நிலையில் செய்யப்பட்டாலும்கூட.

### ***2. கட்டிப்போடுதலும் கசையடியும்***

கட்டிப்போடுதல் என்பது தம்பதியர் ஒருவரை உடல்ரீதியாக நகர விடாது கட்டுப்படுத்துதல் அல்லது கட்டிப்போடுதல் மூலம் ‘பாலுறவு இன்பம்’ அடையும் ஓர் உடலுறவுப் பழக்கமாகும். இது, தம்பதியருக்கு

இடையில் பாலியல் முனைப்பு மற்றும் மந்தப் பாத்திரங்களை வரையறுப்பதற்கான வழியாக இருக்கலாம். கட்டுப்படுத்தலில் கைவிலங்குகள், கயிறுகள், சங்கிலிகள், பெல்டுகள், விலங்குகள், கண் கட்டுகள், கழுத்துவார்கள் போன்றவை அடங்கும். கசையடி என்பது சாட்டையால் அடித்தல், பிட்டத்தில் அறைதல், மற்றும் பாலியல் கிளர்ச்சியூட்டுவதற்காக துணைவர் மீது பொதுவாக வலி ஏற்படுத்துதல்.

இஸ்லாமிய ரீதியாக, இவை நிச்சயமாக மனித இயல்புக்குப் *(ஃபித்ரா)* புறம்பாக உள்ளதால் இவற்றைத் தவிர்த்தல்வேண்டும். கணவன் தன் மனைவியிடம் மிகுந்த பண்பாக, மென்மையாக இருக்க வேண்டுமென இஸ்லாம் பணிக்கிறது எனும்பொழுது, மனைவிக்கு வலி ஏற்படுத்துவது பற்றிய பேச்சுக்கே இடமில்லை. ஈருலகிற்கும் அருட்கொடையாக வந்த அண்ணல் நபி(ஸல்), ஆண்கள் தங்கள் மனைவிகளைக் கொடூரமாக நடத்துவதையும் புண்படுத்துவதையும் தடைசெய்திருக்கிறார்கள்: 'உங்களில் ஒருவர் தம் மனைவியை அடிமையை அடிப்பதுபோல் அடித்துவிட்டு, பின்னர் மாலையில் அவளுடன் உடலுறவும் கொள்வதா!' *(ஸஹீஹ் அல்-புஹாரி* **4658** மற்றும் *ஸஹீஹ் முஸ்லிம்* **2855**)

மேலும் ஒரு விஷயம், தாம்பத்திய உறவின் அடிப்படையே அது 'நல்வழியில்' *(பில்-மஃரூஃப்)* அமையவேண்டும் என்பதுதான். இதை அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறியிருக்கிறான். தம்பதியர் ஒருவருக் கொருவர் உரிமைகளை அளிக்க முனைவார்கள். இதில் பாலியல் தேவைகளின் நிறைவேற்றமும் அடங்கும். எனினும், 'நல்வழி' எனக் கருதப்படும் எல்லைகளுக்கு உட்பட்டு இது செய்யப்படவேண்டும்.

### 3. சேர்ந்து நீராடுதல்

கணவனும் மனைவியும் நெருக்கம் பெறுவதற்காகவும் முன்விளை யாட்டுக்காகவும் ஒன்றுசேர்ந்து குளிப்பதும் நீராடுவதும் அனுமதிக்கப் பட்டது. ஏனெனில் – மேலே விவரித்ததுபோல தம்பதியர் ஒருவரை யொருவர் அம்மணமாகப் பார்த்துக்கொள்ளலாம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் மனைவியருடன் குளித்தார்கள் என்பது நிறுவப்பட்ட விஷயம். அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:

كُنْتُ أَغْتَسِلُ أَنَا وَالنَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مِنْ إِنَاءٍ وَاحِدٍ ، تَخْتَلِفُ أَيْدِينَا فِيهِ

அல்லாஹ்வின் தூதரும் நானும் ஒரே பானையிலுள்ள தண்ணீரிலிருந்து குளிப்பதுண்டு. எங்கள் கைகள் மாறி, மாறிப் பானைக்குள் செல்லும். *(ஸஹீஹ் அல்-புஹாரி* **258**)

மேலும், மைமூனாவுடனும் உம்மு சலமாவுடனும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) குளித்துள்ளதாக அறிவிப்பு உள்ளது. ஹனஃபி சிந்தனாவழி அறிஞர் இமாம் தஹாவி, மாலிகி சிந்தனாவழி அறிஞர் இமாம் குர்துபி, ஷாஃபி சிந்தனாவழி அறிஞர் இமாம் நவவி ஆகிய மூவருமே ஒரே பாத்திரத்தில் நீர் மொண்டு சேர்ந்து குளிக்க அனுமதி உண்டு என்பதில் அறிஞர்கள் ஒருமித்த கருத்து கொண்டுள்ளதைக் குறிப்பிடுகின்றனர். *(அல்-தஃலீக் அல்- முமஜ்ஜத் அலா முவத்தா முஹம்மத்* **1:142-244)**

**4. பாலியல் கிளர்ச்சியூட்டக்கூடிய நடனமும் இசையும்**

இசையுடன் கூடிய நடனம் – அது பாலியல் உசுப்பேற்றக்கூடியதோ இல்லையோ – விலக்கப்பட்ட, பாவமான செயல் என்பது பொதுவான விதி. இசை கேட்பது இஸ்லாமியச் சட்டத்தின் முதன்மையான நான்கு சிந்தனைப் பிரிவுகளிலும் திட்டவட்டமாகத் தடைசெய்யப்பட்டது. அது பல சுய, சமூகக் கோளாறுகளை விளைவிக்கும்.

பிரத்யேகமாக களிப்புக்கும் நடனத்துக்கும், மற்றும் கேட்போரைக் கவர்ந்திழுக்கக்கூடிய வகையில் வடிவமைக்கப்பட்டுள்ள இசைக் கருவிகள் தடைசெய்யப்பட்டவையாகும், அவற்றுடன் மனிதகுரல் இல்லாவிட்டாலும் சரி. அதாவது கொட்டு, வீணை, ஆறு நரம்பு யாழ், பிடில், புல்லாங்குழல், லூட், மன்டோலின், ஆர்மோனியம், பியானோ ஆகிய அனைத்தையும் பயன்படுத்துவதும் கேட்பதும் தவறு. இதற்கான ஒரே விதிவிலக்கு *தஃப்* (பறை போன்றது) மட்டுமே. இது 'சலசல' மணிகள் இல்லாத ஒரு சாதாரணத் தம்போரின். இதுகுறித்து நபித் தோழர்கள் *(சஹாபா)*, அவர்களைப் பின்பற்றியவர்கள் *(தாபியீன்)*, சட்டவியலாளர்கள் *(ஃபுகஹா)* அறிஞர்கள் ஆகியோரின் காலகட்டம் தொட்டு ஒருமித்த கருத்து உள்ளது. (*பதாயி அல்-சனாயி* **6:269** *முக்னீ அல்-முஹ்தாஜ்* **4:429 அல்-முக்னீ 12:39)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இவ்வாறு கூறுவதைத் தாம் செவியுற்றதாக அபூமாலிக் அல்-அஷ்அரி (ரழி) அறிவிக்கிறார்:

...لَيَكُونَنَّ مِنْ أُمَّتِي أَقْوَامٌ يَسْتَحِلُّونَ الْحِرَ وَالْحَرِيرَ وَالْخَمْرَ وَالْمَعَازِفَ

விபச்சாரத்தையும் பட்டுத் துணியையும் மதுவையும் இசைக் கருவிகளையும் ஆகுமானதாகக் கருதும் மக்கள் என் *உம்மத்தில்* தோன்றுவார்கள். *(சஹீஹ் அல்-புஹாரி* **5268)**

இசையின் தடை பற்றி ஏராளமான நபிமொழிகள் (ஹதீஸ்கள்) உள்ளன. ஷாஃபி சிந்தனாவழி இமாமான இப்னு ஹஜர் அல்-ஹய்தமி (அல்லாஹ் அவர்மீது கருணை புரியட்டும்) இந்த ஹதீஸ்கள்

அனைத்தையும் (சுமார் நாற்பது) தம்முடைய அருஞ்சிறப்பான நூலில் (கஃப் அல்-ராஅ அன் முஹர்ரமத் அல்-லஹ்வ் வ அல்-சமா) திரட்டி, இதுபற்றிக் கூறுகிறார்: 'எல்லாவகை இசைக்கருவிகளும் விலக்கப் பட்டவை என்பதற்கு இவையனைத்தும் தெளிவான, வெளிப்படை யான, வலுவான புனித உரை ஆதாரங்களாகும்.' (2:270)

ஆக, மனைவி எவ்விதத்திலும் 'இசை' நடனம் ஆடுவது பாவம். ஏனெனில், இசைகேட்பதே தடைசெய்யப்பட்டுள்ளது. இதை அவள் தன் கணவனுக்காகத் தங்களின் சொந்த அறையில் தனியாக இருக்கும் பொழுது செய்தாலும் அது விலக்கப்பட்டதே.

எனினும், இசையின்றி தன் துணைவரின்முன் நடனம் ஆடுவதற்கு அனுமதியுண்டு. எனினும், அது கபடமற்றதாகவும் ஒழுக்க நாகரிக முடையதாகவும் இருக்கவேண்டும். (இச்சையைத் தூண்டுவதாகவும் உசுப்பேற்றுவதாகவும் இருப்பதில் தவறில்லை.) மேலும் மடி-ஆட்டம் (lap-dancing), குச்சி-ஆட்டம் (pole-dancing), தொப்புள்-ஆட்டம் (belly-dancing) போன்ற சீரழிந்த, ஒழுக்கக்கேடான பழக்கங்களுடன் சம்பந்தப் பட்டிருக்கக் கூடாது. சீரழிந்தவர்கள், ஒழுக்கக்கேடானவர்கள் மற்றும் நாணங்கெட்டவர்களுக்கே உரிய செயல்களை ஓர் இறைநம்பிக்கை யாளர் தவிர்ப்பது அவசியம். (காண்க: முக்னி அல்-முஹ்தாஜ் 4:573 ரத் அல்-முஹ்தார் 4:259-260 அல்-ஃபதாவா அல்-ஹாதிஸிய்யா ப.298)

கணவன், மனைவி சேர்ந்து ஆடுவதற்கும் இதே சட்டதீர்ப்பு பொருந்தும். அதாவது இசையுடன்கூடிய நடனம் கூடாது. இசை யில்லாத நடனம் அனுமதிக்கப்பட்டது. அதற்கான நிபந்தனை, சீரழிந்தவர்கள் மற்றும் ஒழுக்கக்கேடானவர்களின் காமவெறியைத் தூண்டும் செயல்களைப் பின்பற்றுவது தவிர்க்கப்படவேண்டும்.

**5. ஆபாசப் படம்**

தம்பதியர் புணர்ச்சிக்குமுன் பாலியல் கிளர்ச்சியூட்டுவதற்காக ஆபாசப் படம் பார்ப்பதற்கு அனுமதியுண்டா? திட்டவட்டமாக, அழுத்தம் திருத்தமாக 'இல்லை' என்பதே இந்தக் கேள்விக்கான பதில்.

ஆபாசப் படம் – அது ஒளிக்காட்சிப் படங்கள், திரைப்படங்கள், புதினங்கள், நாடகங்கள், படங்கள், புகைப்படங்கள் ஆகிய எதுவா யினும் விலக்கப்பட்டது, வெட்கக்கேடானது, பாவமானது என்பதில் சந்தேகமேயில்லை. அம்மணக் கோலத்தைப் பார்ப்பதோ பிறர் உடலுறவுகொள்வதைக் கண்ணுறுவதோ இஸ்லாத்தில் தெளிவாகத் தடைசெய்யப்பட்டுள்ளது. அல்லாஹ் கூறுகிறான்:

قُلْ لِلْمُؤْمِنِينَ يَغُضُّوا مِنْ أَبْصَارِهِمْ وَيَحْفَظُوا فُرُوجَهُمْ ذَلِكَ أَزْكَى لَهُمْ إِنَّ اللَّهَ خَبِيرٌ بِمَا يَصْنَعُونَ وَقُلْ لِلْمُؤْمِنَاتِ يَغْضُضْنَ مِنْ أَبْصَارِهِنَّ وَيَحْفَظْنَ فُرُوجَهُنَّ

*இறைநம்பிக்கையுள்ள ஆண்களிடம் கூறுங்கள், அவர்கள் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக்கொள்ளட்டும் மற்றும் பாலுறுப்புகளைக் காத்துக் கொள்ளட்டும் என்று. இது அவர்களின் ஒழுக்கத்துக்கு அதிக உகந்ததாகும். நிச்சயமாக அவர்கள் செய்வது குறித்து அவன் சகலவற்றையும் அறிந்தவனாக இருக்கின்றான். மேலும், இறைநம்பிக்கையுள்ள பெண்களிடம் கூறுங்கள், அவர்கள் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக்கொள்ளட்டும் மற்றும் பாலுறுப்புகளைக் காத்துக்கொள்ளட்டும் [...] (குர்ஆன் 24:30-31)*

இவ்வசனங்களில் ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக்கொள்ளுமாறும் பிறரின் மறைவான பகுதிகளைப் பார்ப்பதைத் தவிர்க்குமாறும் கட்டளையிடப்பட்டுள்ளது. ஒருவரின் பார்வை நாட்டமின்றி, தன்னிச்சையாக இன்னொருவரின் மறைவான பகுதிகள்மீது பட்டுவிட்டால், அவர் சட்டெனத் தன் பார்வையைத் திருப்பிக்கொள்ள வேண்டும். ஜரீர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கிறார்:

سَأَلْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْ نَظْرَةِ الْفَجْأَةِ فَأَمَرَنِي أَنْ أَصْرِفَ بَصَرِي

*தன்னிச்சையான பார்வை குறித்து நான் அல்லாஹ்வின் தூதரிடம் வினவினேன். அவர்கள் என்னிடம் பார்வையைத் திருப்பிக்கொள்ளுமாறு கட்டளையிட்டார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் சுனன் 2159 அல்-திர்மிதீ 2776, இங்கு திர்மிதியின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

இந்த நபிமொழிக்கான தம் கருத்துரையில் இமாம் நவவி கூறுகிறார்: 'தன்னிச்சையான பார்வை' என்பதன் பொருள், ஒருவரின் பார்வை நாட்டமின்றி மஹ்ரம்-அல்லாத பெண் ஒருத்தி மீது பட்டுவிடுவதாகும். முதல் பார்வை பாவம் இல்லை. எனினும், அவர் உடனடியாகத் தம் பார்வையைத் திருப்பிக்கொள்ள வேண்டும். அவர் தம் பார்வையை உடனடியாகத் திருப்பிக்கொள்வார் எனில், அவர்மீது பாவம் இல்லை. எனினும், அவர் தொடர்ந்து பார்வை செலுத்திக்கொண்டிருந்தால், இந்த ஹதீஸின்படி அவர் பாவச் செயலைச் செய்கிறார். ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் தோழரிடம் பார்வையைத் திருப்பிக் கொள்ளுமாறு கட்டளையிட்டார்கள்; மற்றும், அல்லாஹ் கூறுகிறான்: 'இறைநம்பிக்கையுள்ள ஆண்களிடம் கூறுங்கள்: அவர்கள் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக்கொள்ளட்டும்; மேலும் பாலுறுப்புகளைக் காத்துக்கொள்ளட்டும் என்று' *(அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் ப.1618)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூசயீத் அல்-ஃகுத்ரி (ரழி) அறிவிக்கிறார்:

لَا يَنْظُرُ الرَّجُلُ إِلَى عَوْرَةِ الرَّجُلِ وَلَا تَنْظُرُ الْمَرْأَةُ إِلَى عَوْرَةِ الْمَرْأَةِ

ஓர் ஆண் இன்னொரு ஆணின் மறைவு பாகங்களைப் பார்க்கக்கூடாது. ஒரு பெண் இன்னொரு பெண்ணின் மறைவு பாகங்களைப் பார்க்கக்கூடாது... *(சுனன் அல்-திர்மிதி 2793)*

ஜர்ஹத் அல்-அஸ்லமியின் தொடை வெளியே தெரியும் நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவரைக் கடந்துசென்றதாக அவரே அறிவிக்கிறார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்:

غَطِّ فَخِذَكَ فَإِنَّهَا مِنْ الْعَوْرَةِ

உன் தொடையை மறைத்துக்கொள். அது மறைக்க வேண்டிய பாகங்களில் ஒன்று. *(சுனன் அல்-திர்மிதி 2798)*

ஆபாசப் படங்கள் தம்பதியரின் பாலியல் வாழ்விற்குத் துணை புரிவதில்லை. மாறாக, அதை அழித்துவிடுகிறது. ஆபாசப் படம் பார்த்தல், ஒருவரை மிகுதியாக அடிமைப்படுத்தக் கூடிய நோயாகும். அது சுய தீங்கிற்கும் தற்புணர்ச்சிக்கும் வழிவகுக்கும் என்பது நியதி. நிர்வாணப் படங்களைப் பார்ப்பதாலும் ரசிப்பதாலும் ஆணும் பெண்ணும் இயற்கை வழியில் ஒருவருக்கொருவர் கிளர்ச்சி அடைந்து கொள்ளும் திறனை இழந்துவிடுகின்றனர். அவர்கள் தங்கள் துணை யாள்களின் மூலம் உசுப்பேற சிரமப்படுகின்றனர். ஆனால், ஆபாசப் படம் மூலம் எளிதாக உசுப்பேறுகின்றனர். இதனால்தான், உலகில் உளவியல்ரீதியான மலட்டுத்தன்மைக்கு ஆபாசப் படம் மிகப் பொதுவான காரணமாக இருக்கிறது. ஆபாசப் படம் பார்க்கும் வழக்கமுள்ள முஸ்லிம் தம்பதிகள், அதன் காரணமாக நாளடைவில் தங்கள் பாலியல் வாழ்வில் பிரச்னைகள் ஏற்படும் என்பதை உணர வேண்டும். எனவே, அவர்கள் செழிப்பான தாம்பத்தியம் நடத்த நாடினால், இந்த இழிவான, வழிகெட்டுப்போன ஒழுக்கக்கேட்டை அவர்கள் உடனடியாக நிறுத்தவேண்டும்.

### 6. எதிர்பாலினரின் உடையணிதலும் 'டிரான்ஸ்வெஸ்டிஸமும்'

எதிர்பாலினரின் உடையணிதல் என்பது, மாற்று பாலர் தொடர்பான ஆடையை அல்லது உள்ளாடையை அணிதலாகும். அல்லது, சில வேளைகளில், அலங்காரம் செய்வதையும் அது குறிக்கும். இந்த மாற்று உடையணிதல் பாலியல் காரணங்களுக்காக இருப்பின் அது

'டிரான்ஸ்வெஸ்டிஸம்' எனப்படுகிறது. ஒரு டிரான்ஸ்வெஸ்டியர், மற்ற பாலரின் ஆடைகளை அணிந்துகொள்வதில் அல்லது பெருமையாக நடைபோடுவதில் பாலியல் இன்பம் பெறுகிறான்/ள். பெரும்பாலான சந்தர்ப்பங்களில் 'டிரான்ஸ்வெஸ்டிஸத்தின்' உள்நோக்கம் என்ன வெனில், மாற்று பாலரின் ஆடை, அணிகலன்கள் மீது ஒருவகையான மூடக் களியாட்டக் கவர்ச்சி கொள்வதாகும். சிலவேளைகளில், அது மாற்று பாலரின் செயல் பாத்திரம் மீதுள்ள கவர்ச்சியாகவும் இருக்கலாம். இதற்கு ஆடை ஓர் அடையாளச் சின்னமாக விளங்குகிறது. ஆக, தன் மனைவியின் உடைகளையோ கீழ் உள்ளாடைகளையோ அணியும் கணவனும், தன் கணவனின் உடைகளையோ கீழ் உள்ளாடைகளையோ அணியும் மனைவியும் 'டிரான்ஸ்வெஸ்டியர்' எனப்படுகின்றனர்.

இஸ்லாத்தில் மாற்று உடையணிதலுக்கோ டிரான்ஸ்வெஸ்டிஸத் திற்கோ இடமில்லை. மாற்றுப் பாலரின் பாத்திரத்தை வகிப்பது, அவர்களைப்போல் நடந்துகொள்வது, ஆடைகளை அணிவது ஆகியவை கடுமையாக வெறுக்கப்பட்டுள்ளன; சபிக்கப்பட்டுள்ளன.

*அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:*

لَعَنَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الْمُتَشَبِّهِينَ مِنْ الرِّجَالِ بِالنِّسَاءِ وَالْمُتَشَبِّهَاتِ مِنْ النِّسَاءِ بِالرِّجَالِ

*பெண்களைப் போல் நடந்துகொள்ளும் ஆண்களையும், ஆண்களைப் போல் நடந்துகொள்ளும் பெண்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சபித்தார்கள். (சஹீஹ் அல்-புஹாரி 5546)*

*அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:*

لَعَنَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الْمُخَنَّثِينَ مِنْ الرِّجَالِ وَالْمُتَرَجِّلَاتِ مِنْ النِّسَاءِ وَقَالَ: أَخْرِجُوهُمْ مِنْ بُيُوتِكُمْ ، قَالَ: فَأَخْرَجَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فُلَانًا وَأَخْرَجَ عُمَرُ فُلَانًا

*பெண்மையுடைய ஆண்களையும், ஆண்மையுடைய பெண்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சபித்து, 'அவர்களை உங்கள் வீடுகளைவிட்டு வெளியேற்றிவிடுங்கள்' எனக் கூறினார்கள். (மேலும்) இப்னு அப்பாஸ் கூறினார், 'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இன்ன, இன்ன ஆளை வெளி யேற்றினார்கள்' மற்றும் உமர் இன்ன, இன்ன ஆள்களை வெளியேற்றினார்கள். (சஹீஹ் அல்-புஹாரி 5547)*

*அபூ ஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:*

لَعَنَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الرَّجُلَ يَلْبَسُ لِبْسَةَ الْمَرْأَةِ وَالْمَرْأَةَ تَلْبَسُ لِبْسَةَ الرَّجُلِ

பெண்ணின் உடையை அணியும் ஆணையும், ஆணின் உடையை அணியும் பெண்ணையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சபித்தார்கள். *(சுனன் அபூ தாவூத் 4095)*

இமாம் இப்னு ஹஜர் அல்-அஸ்கலானி, *சஹீஹ் அல்-புஹாரிக்கான* தம் விரிவுரையில் இதுபற்றி விளக்குகிறார். ஆண்கள், பெண்களைப் போல் நடந்துகொள்வதும், அலங்காரம் செய்வதும், பேசுவதும் விலக்கப்பட்டுள்ளன. மறுபுறம் பெண்ணுக்கும் இது பொருந்தும். ஆடைகளைப் பொறுத்தவரை, இது ஒருவரின் நகர வழக்காற்றைச் சார்ந்துள்ளது என்கிறார். சில பண்பாடுகளில் ஆண், பெண் ஆடைகள் வேறுபாடின்றி இருக்கலாம்; வெறுமனே *ஹிஜாப்* மற்றும் மேலங்கியை வைத்தே பெண்கள் அடையாளப்படுத்தப்படலாம் (இதுபோன்ற இடங்களில் ஒருபாலர் உடையை அணிவதற்கு அனுமதியுண்டு). பேச்சு மற்றும் உடல் அசைவுகளின் பாவனை விஷயத்தில், வேண்டுமென்றே செய்பவர்மீது மட்டுமே குற்றம்சாரும். ஒருவர் அந்த இயல்பிலேயே படைக்கப்பட்டிருந்தால், அவரைக் குற்றம்சாட்ட இயலாது. எனினும், அவர் தம் நடத்தையைப் படிப்படியாக மாற்றிக்கொள்ள வேண்டும். அவர் முயற்சிசெய்து தம்மை மாற்றிக் கொள்ளாவிட்டால் – குறிப்பாக, அதுபோன்ற நடத்தையிலேயே மனநிறைவு கொண்டிருந்தால் – அவர் மீது குற்றம் உண்டு. ஆயினும், முயற்சிகளுக்குப் பின்பும், அவரால் தம்மை மாற்றிக்கொள்ள இயலாவிட்டால், அவர்மீது குற்றமில்லை. *(ஃபத்ஹ் அல்-பாரி ஷரஹ் சஹீஹ் அல்-புஹாரி 10:409)*

மேற்கூறியவற்றிலிருந்து, மாற்றுப் பாலரைப் போன்று உடையணிவதோ குணநலனைப் பாவிப்பதோ பாவச்செயல் என்பது தெளிவாகிறது. இந்த நடத்தையின் தீங்கு தனிமனிதரையும் மொத்த சமூகத்தையும் சேர்த்து பாதிக்கிறது. இது இயற்கை ஒழுங்குக்கு எதிரான கலகமாகும். ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக அவர்களுக்கேயுரிய பண்புகள் உள்ளன. எனவே, ஆண்கள் பெண்மை உடையவர்களாகவோ பெண்கள் ஆண்மை உடையவர்களாகவோ ஆகிவிட்டால், இயற்கை ஒழுங்கு தலைகீழாய் மாறி சிதறிவிடும்.

ஆகவே, உடலுறவின்போதும் முன்விளையாட்டின்போதும் கணவன் தன் மனைவியின் ஆடையையோ உள்ளாடையையோ அணிந்து, மனைவியின் பாத்திரத்தை வகிப்பது பாவமாகும். மறுபுறம் மனைவிக்கும் இது பொருந்தும். ஆண் ஆணாகத்தான் இருக்கவேண்டும்; ஆணின் பாத்திரத்தையே வகிக்கவேண்டும். பெண் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும்; பெண்ணின் பாத்திரத்தையே வகிக்கவேண்டும். பாலியல் முன்விளையாட்டின்போது பாத்திரங்களைத் தலைகீழாக மாற்றிக் கொள்வது பாவமும் தரக்குறைவான செயலும் மட்டுமின்றி, அது

படுக்கை அறைக்கு வெளியே தம்பதியரின் உறவில் நேரடி செல்வாக்குச் செலுத்தும்.

**7. சிறுநீர் விளையாட்டு**

சிறுநீர் விளையாட்டு என்பது ஒரு விநோதமான பாலியல் மூடக் களியாட்டமாகும். இதில் ஈடுபடுபவர்கள் மூத்திரத்திலிருந்தும் மூத்திரம் அடிப்பதிலிருந்தும் இன்பம் பெறுகின்றனர். இது தம்பதியரில் ஒருவர் மற்றவர் மீது 'பொன் மழை' பெய்யும் ஒருவகை பாலியல் முன்விளையாட்டு. சிலர் தம் துணைவரின் மூத்திரத்தைக் குடிக்கும் அளவிற்குச் செல்கின்றனர்!

சிறுநீர், மலம், அசிங்கம் போன்றவற்றிலிருந்து சுகம் பெறுவது, நல்ல இயல்பான நிலையில் உள்ள மனிதரால் கற்பனைகூட செய்து பார்க்கவியலாத ஓர் அபத்தமாகும். அது ஒரு நோய்; வழிகெட்டுப் போன ஒரு மூடக் களியாட்டம். அதற்கு ஒருபோதும் இஸ்லாத்தில் அனுமதியில்லை. தூய்மையும் பரிசுத்தமும் *(தஹாரா)* இஸ்லாத்தின் அடிப்படைகளாகும். நபிமொழி திரட்டுகளும் சட்ட *(ஃபிக்ஹு)* நூல்களும், அசிங்கத்தைத் தவிர்க்கும் விதிகள்கொண்ட பக்கங்களால் நிரம்பியுள்ளன. கிட்டத்தட்ட ஒவ்வொரு ஹதீஸ் நூலிலும் *ஃபிக்ஹு* நூலிலும் அலசப்படும் முதல் விஷயம், *தஹாராதான்*. தூய்மை இறை நம்பிக்கையின் பாதியாகும்; தொழுகையின் திறவுகோலாகும். இறை நம்பிக்கையாளர் தூய்மையாக இருந்து, தூய்மையை நேசித்து, அசுத்தத்தையும் அசிங்கத்தையும் தவிர்க்கவும் வெறுக்கவும் வேண்டும்.

எனவே, ஒருவர் தம் துணைவரின் மீது மூத்திரம் அடிப்பதை முன் விளையாட்டின் ஒரு பகுதியாகச் செய்வதற்கு அனுமதி இல்லை. அது பாவமானது என்பதில் எவ்விதச் சந்தேகமுமில்லை. சிறுநீர் தெறித்தலைத் தவிர்க்காமல் இருப்பது மண்ணறையின் தண்டனைக்கு ஒரு காரண மாகும்.

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:

مَرَّ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَلَى قَبْرَيْنِ فَقَالَ: إِنَّهُمَا لَيُعَذَّبَانِ وَمَا يُعَذَّبَانِ مِنْ كَبِيرٍ ، ثُمَّ قَالَ: بَلَى ، أَمَّا أَحَدُهُمَا فَكَانَ يَسْعَى بِالنَّمِيمَةِ ، وَأَمَّا أَحَدُهُمَا فَكَانَ لَا يَسْتَتِرُ مِنْ بَوْلِهِ ، قَالَ: ثُمَّ أَخَذَ عُودًا رَطْبًا فَكَسَرَهُ بِاثْنَتَيْنِ ثُمَّ غَرَزَ كُلَّ وَاحِدٍ مِنْهُمَا عَلَى قَبْرٍ ثُمَّ قَالَ: لَعَلَّهُ يُخَفَّفُ عَنْهُمَا مَا لَمْ يَيْبَسَا

*ஒருமுறை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இரண்டு மண்ணறைகளைக் கடந்து சென்றபோது, '(மண்ணறையில் உள்ள) இவர்கள் வேதனை செய்யப்படுவது, தவிர்க்கவேண்டிய பெரிய விஷயங்களுக்காக அல்ல' என்று கூறிவிட்டு, 'ஆம் (பெரிய பாவங்களுக்காகத்தான் வேதனை செய்யப்படுகிறார்கள்), ஒருவர் அவதூறு பேசிக்கொண்டு திரிபவர்; மற்றவர் சிறுநீர்த் துளிகள் தெரிப்பதிலிருந்து தன்னை ஒருபோதும் காத்துக்கொள்ளாதவர்' என்று சேர்த்துச் சொன்னார்கள். இப்னு அப்பாஸ் கூறுகிறார்: அடுத்து நபியவர்கள் (ஸல்) ஒரு ஈரமான பச்சை இலையை எடுத்து இரண்டு துண்டுகளாகக் கிழித்து, மண்ணறை ஒவ்வொன்றின் மீதும் ஒரு துண்டை வைத்துக் கூறினார்கள், 'இவ்விரு துண்டுகளும் உலரும்வரை அவர்களின் வேதனை குறையட்டுமாக.'*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:*

اسْتَنْزِهُوا مِنَ الْبَوْلِ فَإِنَّ عَامَّةَ عَذَابِ الْقَبْرِ مِنْهُ

*சிறுநீர்த் துளிகள் தெரிப்பதைத் தவிர்த்துக்கொள்ளுங்கள். ஏனெனில், பொதுவாக மண்ணறை வேதனை அதன் விளைவாகவே ஏற்படுகிறது. (சுனன் அல்-தாரகுத்னி 1:128)*

பல்வேறு சட்ட சிந்தனாவழிகளின் சட்டவியலாளர்களுடைய கருத்துப்படி, அசிங்கத்தைத் தவிர்ப்பது கட்டாயக் கடமையாகும். மலஜலம் கழித்தபின் ஒருவர் அசிங்கத்தை சுத்தம்செய்தல் போன்ற தேவைகள் மட்டுமே இதற்கு விதிவிலக்கு. மூத்திரம் விஷயத்தில், இது கூடுதல் முக்கியத்துவம் பெறுகிறது. ஏனெனில், அது திட்டவட்டமான அசிங்கமும் அசுத்தமும் ஆகும். ஒருவர், பொதுவாக அசிங்கத்தையும் குறிப்பாக மூத்திரத்தையும் அப்பிக்கொள்வதைத் தவிர்க்கவேண்டும். (ஹனஃபி: *தஹ்தாவி அலா மராகி அல்-ஃபலாஹ்* ப.152 மற்றும் *அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* 1:50, மாலிகி: *ஹாஷியா அல்-தசூக்கி அலா அல்-ஷரஹ் அல்-கபீர்* 1:110, ஷாஃபி: *முக்னி அல்-முஹ்தாஜ்* 1:127 மற்றும் ஹம்பலி *அல்-முக்னி* 1:141)

# 7

# புணர்ச்சி

தம்பதியர் முன்விளையாட்டில் போதிய நேரம் கழித்தபின் தாங்கள் தயாராகிவிட்டதாக உணர்ந்தால், அடுத்து அவர்கள் புணர்ச்சியில் ஈடுபடலாம். இது தொடர்பாக, பல விதிமுறைகளும் ஒழுங்குகளும் உள்ளன.

### *1. தனித்திருத்தல்* (privacy)

***அ. உடலுறவு கொள்வதை மற்றவர்கள் பார்க்கலாமா?***

தம்பதியர் உடலுறவில் ஈடுபடும்பொழுது தனித்திருத்தல் மிக, மிக முக்கியமான விஷயமாகும். இது, புணர்ச்சியின்போது மட்டுமின்றி முன்விளையாட்டின்போதும்கூட அவசியம். தாங்கள் குழந்தைகள் உட்பட பிறரின் பார்வைகளிலிருந்து விலகியிருப்பதை உறுதிசெய்து கொள்ள வேண்டும். அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) தம் மனைவி யுடன் உடலுறவுகொள்ள நாடும் பொழுது, பால்குடிக்கும் சிறிய குழந்தையைக்கூட அறையைவிட்டு வெளியேற்றிவிடுவார் என இப்னு அல்ஹாஜ் அல்-மாலிகி தம்முடைய *அல்-மத்ஃகலில்* குறிப்பிடுகிறார். அறிஞர்கள் சிலரின் கூற்றில், உடலுறவின்போது அந்த அறையில் ஒரு பூனை இருப்பதுகூட விரும்பத்தகாததாகும். (*உசூல் அல்-முஆஷரா அல்-ஸவ்ஜிய்யா* ப.67)

இந்த விஷயத்தில், தவறுதலாகக்கூட எவரும் தம்பதியர் கூடும் அறைக்குள் நுழையாமல் இருப்பதற்குக் கதவுகளை அடைத்துத் தாழிட்டுக் கொள்ளவேண்டும். தப்பித் தவறிக்கூட அக்கம்பக்கத்தார் உள்ளே பார்த்துவிடுவதைத் தவிர்க்க ஜன்னல்களை அடைத்துத் திரைகளால் சரிவர மறைத்தல்வேண்டும். வீடு, அடுக்கு மாடிக் கட்டிட வளாகத்திலோ, மக்கள் நெரிசல் உள்ள பகுதியிலோ அமைந்திருந்தால் இதற்குக் கூடுதல் முக்கியத்துவம் அளிக்கவேண்டும். இதற்கு உரிய முக்கியத்துவம் தராத தம்பதிகள், தாங்கள் உடலுறவில் ஈடுபடுவதைப் பிறர் பார்ப்பதற்கு வாய்ப்பளித்ததாக ஆகிவிடும். இது வெட்கங் கெட்ட, பாவமான, ஒருபோதும் அனுமதிக்கவியலாத செயலாகும்.

ஒருவரின் நிர்வாணக் கோலத்தை – குறிப்பாக, உடலுறவு வேளையில் – பிறர் முன் மறைப்பது ஷரீஆவின் முக்கியமானதொரு கடமையாகும்.

காட்சியளித்தல், மாற்றுப் பாலரின் உறுப்புகளைக் கண்டு ரசித்தல் ஆகியவற்றுக்கு இஸ்லாத்தில் இடமில்லை என்பது தெளிவான விஷயம். சிலர் தங்களின் உடல்களை அல்லது உடலுறவுச் செயல்களை வெளிக் காட்டுவதன் மூலம் இன்பம் பெறுகின்றனர். இதுபோன்ற வழிகெட்ட பாலியல் தணிப்புப் பழக்கங்களை இஸ்லாம் முற்றிலும் மறுத்துக் கண்டிக்கிறது. எனவே, பிறர் பார்க்கக்கூடிய பொது இடங்களில் – தோட்டங்கள், பொது பூங்காக்கள், கார்கள், கடற்கரைகள், அடுக்கு மாடிக் கட்டிடங்களின் வெளிப்புறத்திலுள்ள மாடி முகப்பு அல்லது உள்முற்றங்கள் – உடலுறவுகொள்வது திட்டவட்டமாக விலக்கப் பட்டதும் பாவமானதுமாகும். மேலும், பல நாடுகளில், பொது இடங் களில் உடலுறவுகொள்வது சட்டத்துக்குப் புறம்பானது. ஆக, அவர்கள் அல்லாஹ்வின் சட்டத்தை மீறுவது மட்டுமின்றி, தங்கள் நாட்டின் சட்டத்தையும் மீறி, இழிவுக்கு ஆளாகின்றனர்; மேலும், ஒழுக்க நாகரிகமற்ற செயலுக்காகக் கைது நடவடிக்கைக்கும் ஆளாகலாம்.

### ஆ. உடலுறவில் ஏற்படும் ஓசைகளை மற்றவர்கள் கேட்கலாமா?

தம்பதியர், தங்கள் உடலுறவுச் செயல்பாட்டைப் பிறர் காதில் விழாத வண்ணம் மறைப்பதில் கவனமாக இருக்கவேண்டும். இமாம் கஸ்ஸாலி தம் *இஹ்யா உலூம் அல்-தீனில்* இப்படி ஒரு ஹதீஸைப் பதிவு செய்துள்ளார்: ‘அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம் தலையை மறைத்துக் குரலைத் தாழ்த்தி, ‘‘அமைதி காக்கவும்’’ எனத் தம் மனைவியிடம் கூறுவார்கள்.’ இந்த ஹதீஸ் (நபிமொழிகள்), உம்மு சலமாவிடமிருந்து பலவீனமான தொரு அறிவிப்புத் தொடர் மூலம் காதிப் அல்-பக்தாதி வாயிலாக வந்துள்ளது என்று ஹாபிழ் ஸைனுத்தீன் அல்-இராக்கி கூறுகிறார். (காண்க: *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா* 6:174)

எனவே, உடலுறவின்போது பிறர் செவியுறும் அளவுக்கு சப்தம் போடுவதை கணவன், மனைவி இருவரும் தவிர்க்கவேண்டும். தம்பதியர் அளவுக்கதிகமாகப் பேசுவதிலிருந்தும் அதிக சப்தம் போடுவதிலிருந்தும் தவிர்ந்திருப்பது உடலுறவு ஒழுங்கின் ஒரு பகுதியாகும். அதுவும், அடுத்த அறையில் பெற்றோர்கள் போன்ற பிறர் இருக்கும் நிலையில் இது மென்மேலும் முக்கியத்துவம் பெறுகிறது. சில தம்பதியர், தங்கள் உடலுறவைத் தங்கள் குடும்பத்தினரோ அக்கம் பக்கத்தினரோ செவி யுறுவதுபற்றிக் கவலைப்படுவதில்லை. இது பாவச்செயல் மட்டுமின்றி, அவர்களின் கண்ணியக்குறைவான நடத்தையையும் காட்டுகிறது. உடலுறவின்போது முயன்றும் சப்தத்தைக் கட்டுப்படுத்தவியலாத

தம்பதியர், பிறர் அருகில் இருக்கும்போது உடலுறவில் ஈடுபடுவதைத் தவிர்ப்பது அவசியம். பிறர் செவியுறாத இடத்திற்குச் சென்று அதில் ஈடுபடுவதற்கான வழிதேடிக்கொள்ள வேண்டும். பார்வையற்ற ஒருவர் இருக்கும் இடத்தில் உடலுறவு கொள்வதுகூட விலக்கப்பட்டது; ஏனெனில், அதை அவரால் கேட்க முடியும் எனச் சட்டவியலாளர்கள் கூறுகின்றனர். (காண்க: *ரத் அல்-முஹ்தார்* 3:208 மற்றும் *அல்-முக்னி* 8:135)

### இ. ஒரே சமயத்தில் இரு மனைவிகளிடம் உடலுறவு கொள்ளுதல்

இரு மனைவி உடைய ஓர் ஆண், அவர்கள் இருவருடனும் ஒரே நேரத்தில் – அதாவது, முத்தரப்பாக – உடலுறவுகொள்வது அல்லது ஒரு மனைவியின் முன்னிலையில் மற்றவளுடன் உடலுறவுகொள்வது விலக்கப்பட்டது. இச்செயலுக்கு அவர்களிருவரும் ஒப்புதல் அளித்தாலும் கூட அனுமதியில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன;

**முதலாவதாக, ஒரு பெண் இன்னொருத்தியின் மறைவிடங்களைப் (அவ்ரா) பார்ப்பதற்கு அனுமதியில்லை.** அது அவளுடைய சகக் கிழத்தியாய் இருப்பினும் சரி. பிற முஸ்லிம் பெண்களின் முன்னிலையில் ஒரு முஸ்லிம் பெண் தன்னுடைய *அவ்ராவை*- அதாவது தொப்புள் முதல் முழங்கால் வரையுள்ள பகுதிகளை – மறைத்தாகவேண்டும். (*அல்-ஹிதாயா* 4:461) மேலே குறிப்பிட்ட ஹதீஸில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: '...ஒரு பெண் இன்னொரு பெண்ணின் மறைவான பகுதியைப் *(அவ்ரா)* பார்க்கக்கூடாது.' (*சுனன் அல்-திர்மிதி* 2793) இதில், சகக்கிழத்திக்கும் வேறொரு பெண்ணுக்கும் இடையில் நபியவர்கள் (ஸல்) வேறுபாடு காட்டவில்லை.

**இரண்டாவதாக, உடலுறவில் ஈடுபடும் இருவருக்குள் அது இரகசியமாக வைக்கப்படவேண்டும்.** கணவன், மனைவி தங்கள் உடலுறவுச் செயல்பாட்டின் விவரங்களைப் பிறருடன் கலந்துரையாடுவதை இஸ்லாம் தடுத்துள்ளது. இது தொடர்பாக ஏற்கனவே நாம் மேற்கோளிட்ட ஹதீஸில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) இவ்வாறு கூறுகிறார்கள்: 'தீர்ப்பு நாளன்று அல்லாஹ்வின் பார்வையில் மனிதர்களிலேயே மிகக் கொடியவர் யாரெனில், அந்த மனிதர் தம் மனைவியுடன் உடலுறவுகொண்டு அவளும் அவருடன் உடலுறவு கொண்டுவிட்ட பின் அவளின் இரகசியத்தை வெளிப்படுத்துபவர்.' (*சஹீஹ் முஸ்லிம்* 1437) ஒருவர் தம் உடலுறவுச் செயல்பாட்டின் விவரங்களை வெளிப்படுத்துவதைவிட, இன்னொருவர் இருக்கும் நிலையில் உடலுறவு கொள்வது நேரடியானதொரு விஷயம் என்பதால், அந்தச் செயல் விலக்கப்பட்டதும் பாவமானதுமாகும்.

இதனால்தான், ஹனஃபி சிந்தனாவழி நூலான *ஃபதாவா அல்-ஹிந்திய்யாவில்* பின்வருமாறு கூறப்படுகிறது: ‘ஒரு மனைவி உடன் இருக்கும் வேளையில் இன்னொரு மனைவியுடன் உடலுறவு கொள்வது தடுக்கப்பட்ட விதத்தில் விரும்பத்தகாதது ஆகும் (அதாவது, அனுமதிக்கப் படாதது). எந்தஅளவுக்கெனில், (மற்றவள் உடன் இருக்கும் நிலையில்) அவளைக் கணவன் தன்னுடன் உடலுறவு கொள்ளக் கோரினாலும், அவள் அவருக்குத் தன்னை வழங்கத் தேவையில்லை. இந்த மறுப்பினால் அவள் அடங்கமறுக்கும் மனைவியெனக் கருதப்படமாட்டாள்.’ (*அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* 1:341)

ஹம்பலி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் இப்னு குதாமா தம்முடைய *அல்-முக்னியில்* கூறுகிறார்: ‘இரு மனைவிகளுள் ஒருத்தி தன் கணவனுடன் உடலுறவுகொள்ள, மற்றவள் அதைப் பார்த்து இரசிப்பது என இருவரும் உடன்பாடு செய்துகொண்டாலும்கூட அதற்கு அனுமதியில்லை. ஏனெனில், அது ஒழுக்கங்கெட்ட, மடத்தன மான, மரியாதை உணர்வையே *(முரூஆ)* நீக்கிவிடக்கூடிய ஒரு செயல். எனவே, அவர்கள் இசைவு தெரிவித்தாலும்கூட இதற்கு அனுமதியில்லை.’ (*அல்-முக்னி* 8:137. மேலும் பார்க்க: *முக்னி அல்-முஹ்தாஜ்* 3:334 மற்றும் *ஷரஹ் அல்-ஃகுர்ஷீ அலா முஃக்தஸர் அல்-ஃகலீல்* 4:6)

### ஈ. குழந்தைகளின்முன் உடலுறவு கொள்ளுதல்

சிறு குழந்தைகளின் முன்னிலையில் உடலுறவுகொள்ளும் விஷயத்தில், குழந்தை விவரம் அறியும் பருவம் *(தம்யீஸ்)* எய்தி, தன் முன்னிலையில் நடப்பதை விளங்கிக்கொள்ளும் திறன் பெற்றுவிட்டால் – அந்தத் திறன் ஓரளவு இருந்தாலும்கூட – அதன் முன்னிலையில் தம்பதியர் உடலுறவுகொள்வது தடுக்கப்பட்ட விதத்தில் விரும்பத்தகாததும் பாவமும் ஆகும். (*ரத் அல்-முஃக்தார்* 3:208)

முஸ்லிம் தம்பதிகள் சிலர் இதில் மிகவும் கவனக்குறைவாக இருக்கின்றனர். தங்கள் பாலியல் செயல்களைத் தங்களின் சிறு குழந்தைகள் மற்றும் பிற குடும்ப உறுப்பினர்களின் முன்னிலையில் வெளிப்படையாகக் காட்டுகின்றனர். பொதுவிடத்தில் நெருக்கத்தை வெளிப்படுத்தும் விஷயம் குறித்து இஸ்லாம் தெளிவாகக் கருத்துரைத் துள்ளது. குழந்தைகள் உள்ளிட்ட பிறர் முன்னிலையில் முத்தமிடுதல், கட்டித்தழுவுதல், தடவிக் கொடுத்தல் ஆகியவற்றை அது தடை செய்கிறது.

அல்லாஹ் கூறுகிறான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لِيَسْتَأْذِنكُمُ الَّذِينَ مَلَكَتْ أَيْمَانُكُمْ وَالَّذِينَ لَمْ يَبْلُغُوا الْحُلُمَ مِنكُمْ ثَلَاثَ مَرَّاتٍ مِّن قَبْلِ صَلَاةِ الْفَجْرِ وَحِينَ تَضَعُونَ ثِيَابَكُم مِّنَ الظَّهِيرَةِ وَمِن بَعْدِ صَلَاةِ الْعِشَاءِ ثَلَاثُ عَوْرَاتٍ لَّكُمْ

*இறைநம்பிக்கை கொண்டவர்களே, உங்களுக்குச் சொந்தமான அடிமைகளும் உங்களுள் பருவம் அடைந்திராதவர்களும் (குழந்தைகள்) மூன்று சந்தர்ப்பங் களில் (உங்கள் முன்னிலையில் வருவதற்குமுன்) அனுமதி பெறவேண்டும்: ஃபஜ்ர் தொழுகைக்குமுன், நண்பகலில் நீங்கள் உங்கள் ஆடைகளைக் கழற்றும்போது மற்றும் இஷா தொழுகைக்குப் பின். இவையே உங்களின் மூன்று தனித்திருக்கும் நேரங்களாகும். (குர்ஆன் 24:58)*

அதே அத்தியாயம் *(சூரா)* வசனம் 27இல், ஒருவர் இன்னொருவரின் வீட்டிற்குள் அனுமதியின்றி நுழையக்கூடாது எனும் வரம்பை அல்லாஹ் விதித்திருக்கிறான். எனினும், அதே வீட்டில் வசிக்கும் குழந்தைகள் மற்றும் அடிமைகளுக்கு இந்த விதியிலிருந்து விலக்கு உண்டு என்பதால், அவர்கள் குறிப்பான அனுமதியின்றி வீடுகளுக்குள் நுழையலாம். இருப்பினும், இவர்களும்கூட மூன்று தனிமை வேளைகளில் அனுமதி கோரவேண்டும். இமாம் இப்னு கஸீர் கூறுகிறார்: ‘தனிமை நேரங் களில் பணியாட்களும் குழந்தைகளும் வீட்டின் பெரியவர்கள் உள்ள இடத்தில் நுழையவேண்டாம் என கட்டளையிடப்பட்டுள்ளது. ஏனெனில், (இந்நேரங்களில்) அவர் தம் மனைவியுடன் உடலுறவிலோ பிற பாலுறவு நெருக்கச் செயல்களிலோ ஈடுபட்டிருக்கலாம் என அஞ்சப்படுகிறது.’ (*தஃப்சீர் அல்-குர்ஆன் அல்-அழீம்* 3:404)

அறைக்குள் நுழையும்முன், குழந்தைகள் அனுமதி கோருமாறு இஸ்லாமியச் சட்டவியல் *(ஷரீஆ)* பணிக்கிறது என்பது இங்கு கவனிக்கத் தக்கது. ஏனெனில், தம்பதியருக்கு இடையில் நிகழும் எதையாவது அவர்கள் கண்டுவிடக் கூடும். ஆக, இவ்வாறு கட்டுப்பாடு இருக்கும் நிலையில், பிறர் முன்னிலையில் பாலுறவுச் செயல்களைத் தெரிந்தே வெளிப்படையாகச் செய்தல் எவ்வளவு அவமரியாதையானது?

அப்துல்லாஹ் இப்னு உமரிடமிருந்து நாஃபி அறிவிக்கிறார்: ‘அவருடைய (இப்னு உமர்) குழந்தை விவரம் அறியும் பருவத்தை எய்தியதும் அவனை (தன் அறையிலிருந்து) அகற்றி விடுவார். அதன் பிறகு, தன் அனுமதியின்றி அவன் (குழந்தை) உள்ளே நுழைய முடியாது.’ (இமாம் புஹாரியின் *அல்-அதப் அல்-முஃப்ரத்* 1058)

மூஸா இப்னு தல்ஹா கூறுகிறார்: ‘நான் என் தந்தையுடன் என் தாயின் அறைக்குள் நுழைய முயன்றேன். அவர் உள்ளே சென்றார்.

*நானும் அவரைப் பின்தொடர்ந்தேன். அப்போது அவர் திரும்பி தன் நெஞ்சால் என்னைத் தள்ளினார். நான் பின்புறமாகக் கீழே விழுந்தேன். ''அனுமதியின்றி உள்ளே நுழைகிறாயா?'' என அவர் கூறினார்.' (அல்-அதப் அல்-முஃப்ரத் **1061**)*

பாலியல் செயல்களைத் தங்கள் குழந்தைகள்முன் வெளிக்காட்டும் முஸ்லிம் பெற்றோர்கள் ஒரு மோசமான தவறைச் செய்கின்றனர் என்பதை உணரவேண்டும். இவர்கள் வெறும் சிறு குழந்தைகள்தாமே; இவர்களுக்கு இதுபோன்ற விஷயங்களைப் புரிந்துகொள்ளும் திறன் இல்லையே என அவர்கள் எண்ணுவது தவறு. உண்மையில், இச்செயல்பாடு குழந்தைகளின் வளர்ப்பில் மிகுந்த தீய பாதிப்பை ஏற்படுத்தக்கூடியது. குழந்தைகள் எல்லா விஷயத்திலும் தங்கள் பெற்றோர்களைப் போலவே நடக்கும் இயல்புடன் படைக்கப் பட்டுள்ளனர். எனவே,அவர்கள் தங்கள் பெற்றோர்களைப் பின்பற்ற முனைந்து – அது விளையாட்டுக்காக இருந்தாலும்கூட – பிற குழந்தை களுடன் இதைச் செய்யக்கூடும். இதன் அழிவுப்பூர்வமான விளைவு இன்று தெளிவாக உள்ளது.

மேலும், இதுபோன்ற விஷயங்களை வெளிப்படையாகச் செய்வது நாணத்துக்கும் ஒழுக்க நாகரிகத்துக்கும் புறம்பானது. இஸ்லாம், தன் வழி நடப்பவர்களுக்குக் கண்ணியத்தைப் போதிக்கிறது; ஒழுக்கக்கேடான சூழலுக்கு வழிவகுக்கும் எந்தவொரு செயலிலும் அவர்கள் ஈடுபடுவதைத் தடுக்கிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) வெட்கம், நாணம் ஆகிய பண்புகளுக்கு நடைமுறை முன்மாதிரியாக விளங்கினார்கள். அபூ சயீத் அல்-குத்ரி (ரழி) அறிவிக்கிறார்:

كَانَ رَسُولُ اللهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَشَدَّ حَيَاءً مِنَ الْعَذْرَاءِ فِي خِدْرِهَا ، وَكَانَ إِذَا كَرِهَ شَيْئًا عَرَفْنَاهُ فِي وَجْهِهِ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்), திரைமறைவிற்குப் பின்னுள்ள (அல்லது, தன் தனி அறையில் உள்ள) ஒரு கன்னிப்பெண்ணைக் காட்டிலும் அதிக நாணம் கொண்டவர்கள். அவர்கள் ஒரு விஷயத்தை விரும்பாவிட்டால், அதை அவருடைய முகத்திலிருந்தே நாங்கள் அறிந்துகொள்வோம். (சஹீஹ் முஸ்லிம் **2320**)*

எனவே, தம்பதியர் சிறு குழந்தைகளின் முன்னிலையில் புணர்வது அல்லது முத்தமிடுதல், கட்டியணைத்தல், தடவுதல், பிடித்து விளை யாடுதல் போன்ற பாலுறவுச் செயல்களில் ஈடுபடுவதைத் தவிர்த்தல்

வேண்டும். இன்னும், குழந்தை விவரம் அறியும் பருவத்தை எட்டி விட்டால், இவை பாவமான செயல்களாகும்.

பச்சைக்குழந்தை தூங்கும் அறையில் உடலுறவுகொள்வதைப் பொறுத்தவரை, இதுவும் இயன்றளவு தவிர்க்கப்படவேண்டும். ஏற்கனவே நாம் நம் முன்னோர்களை *(சலஃப்)* பற்றி கூறினோம். அதாவது அவர்கள், பாலூட்டும் வயதில் – இரண்டுக்கும் குறைவான வயதில் – உள்ள குழந்தையோ விலங்கோ இருக்கும் அறையில்கூட உடலுறவு கொள்வதைத் தவிர்ப்பார்கள். இவ்வாறிருக்க, அது போன்ற குழந்தை களின் முன்னிலையில் உடலுறவுகொள்வது சற்று விரும்பத்தகாதது. எனினும், அது விலக்கப்பட்டது *(ஹராம்)* எனக் கூறிவிடமுடியாது.

**உ. தம்பதியினர் தம் உடலுறவுச் செயல்பாட்டைப் படமெடுத்தல்**

*அண்மையில் இந்த நூலாசிரியரிடம் ஒரு கேள்வி கேட்கப்பட்டது. அது, தம்பதியர் ஒருவரையொருவர் உடலுறவுக் கோலத்தில் படம் பிடித்து அல்லது உடலுறவுகொள்வதைத் தாங்களே ஒளிப்பதிவு செய்து, பின்னர் அந்தப் புகைப்படத்தையோ ஒளிக்காட்சியையோ பார்த்து ரசிப்பது கூடுமா என்று கேட்கப்பட்டது.*

புகைப்படம் குறித்த சட்டத்தீர்ப்பு விஷயத்தில் சமகால இஸ்லாமிய அறிஞர்களிடையே நிலவும் கருத்து வேறுபாடு எதுவாயினும் புகைப் படம் எடுப்பது, உயிருள்ள ஜீவராசிகள் மற்றும் மனிதர்களைச் சித்திரம் தீட்டுதல் *(தஸ்வீர்)* என்னும் தலைப்புக்குக்கீழ் வரும் என்பது அறிஞர்கள் பலரின் நிலைப்பாடு. இது இருபதுக்கும் மேற்பட்ட மிக மிக நம்பக மான ஹதீஸ்களில் தெளிவாகத் தடைசெய்யப்பட்டுள்ளது. புகைப்படம் பற்றிய இஸ்லாமிய அறிஞர்களின் கருத்துவேறுபாடு ஒருபுறமிருக்க, ஒருவர் தம் துணையாளை நிர்வாணக் கோலத்தில் படம்பிடித்து அல்லது தங்கள் உடலுறவை ஒளிப்பதிவுசெய்து, அதைக் கண்டு ரசிப்பதை எவ்விதத்திலும் அனுமதிக்கப்பட்ட ஒன்றாகக் கருதமுடியாது.

இதற்கான காரணம் தெளிவாக உள்ளது. இதுபோன்ற ஆபாசப் படங்களைப் பிடிப்பது மூலம், ஒரு தம்பதியர் தங்கள் நிர்வாணக் கோலத்தைப் பிறர் காண்பதற்கான வாய்ப்பு அளிக்கும் சாத்தியம் உள்ளது. ஆகவே, இதற்கு அனுமதியில்லை. பாலியல் படங்களை இடம்மாற்றி வைப்பதற்கோ தொலைத்துவிடுவது மூலம் அந்நியரின் கைகளுக்குச் சென்றுவிடுவதற்கோ சாத்தியம் உண்டு. இந்தப் படங் களோ ஒளிப்பதிவுகளோ தம்பதியருடைய குழந்தைகளின் கைகளுக்கு எப்படியோ சென்றுவிட்டால் என்ன நடக்கும் என்பதை யோசித்துப் பாருங்கள்!

இந்தப் படங்களைப் பாதுகாத்து, ஒளித்து மறைத்து வைத்தாலும் கூட, அனைத்து முன்னெச்சரிக்கைகளையும் மீறி எவராவது பார்த்து விடக்கூடும் சாத்தியம் இருக்கவே செய்கிறது. வழக்கத்திற்கு மாறான ஒரு நிகழ்வு மூலம் மூன்றாவது ஆளின் கைகளுக்கு இந்தப் படங்கள் செல்லக்கூடும். ஒரு தீங்கு அசலில் நிகழுமுன் அதைத் தடுப்பது, இஸ்லாமியச் சட்டவியலின் நன்கு நிறுவப்பட்டதொரு கோட்பாடாகும்.

மேலும் இந்தச் செயல்கள், இஸ்லாம் கட்டளையிடும் நாணத்திற்கு முரணாக உள்ளன. தம்பதியர் ஒருவரையொருவர் நிர்வாணக் கோலத்தில் பார்க்கலாம் என்பது உடலுறவின்போது அதற்கான தேவை இருப்பதாலேயே அனுமதிக்கப்பட்டுள்ளது. அப்பொழுதும் கூட, அதைத் தவிர்ப்பது மேன்மையானது.

முடிவாக, தம்பதியர் தங்களின் நிர்வாணப் படங்களை எடுத்து வைத்துக் கொண்டு, பின்னர் அவற்றைக் கண்டு ரசிப்பதற்கு இஸ்லாமியச் சட்டத்தில் அனுமதி இல்லை. அத்துடன், புகைப்படத்திற்கு அனுமதியில்லை என்று கூறும் அறிஞர்களின் கருத்தை அலட்சியப்படுத்துவதாகவும் உள்ளது.

### 2. குர்ஆனை மறைத்தல்

உடலுறவு ஒழுங்குகளில், குர்ஆன் பிரதிகளையும் சுவரில் தொங்கும் குர்ஆனிய வசனங்களையும் மற்றும் ஹதீஸ் (நபிமொழி) திரட்டுகள், பிரார்த்தனைகள் (*துஆ* மற்றும் *அத்கார்*) அடங்கிய புத்தகங்கள் போன்ற இதர இஸ்லாமிய நூல்களையும் – சிரமம் இல்லை என்றால் – மறைத்து அல்லது விலக்கி வைக்கவேண்டும். எனினும், அவ்வாறு செய்யாததனால் பாவமில்லை.

இமாம் ஹஸ்கஃபி தம்முடைய *துர் அல்-முஹ்தாரில்* கூறுகிறார்: 'குர்ஆன் பிரதி உள்ள அறையில் உடலுறவுகொள்வதில் எந்தத் தவறுமில்லை. ஏனெனில், பொதுவாக அதைத் தவிர்ப்பது சிரமம்.'

எனினும், குர்ஆனை மறைப்பதே மேன்மை என இமாம் இப்னு ஆபிதீன் மேற்கூறிய நூலிற்கான தம் விரிவுரையில் கூறுகிறார். *(ரத் அல்-முஹ்தார் அலா அல்-துர் அல்-முஃக்தார்* **6:423***)*

### 3. ஓதுவதும் பிரார்த்தனைகளும் (துஆ)

உடலுறவின் குறிக்கோள்களில் ஒன்று, இறைபக்தியுடைய, நேரிய வாரிசை உருவாக்குதலாகும். எனவே, தம்பதியர் உடலுறவைத் தொடங்குமுன் அல்லாஹ்விடம் பிரார்த்திக்க வேண்டும். தங்களிடமிருந்தும் தங்களுக்கு வரப்போகும் குழந்தையிடமிருந்தும் ஷைத்தானை தூரவிலக்கி வைக்குமாறு இறைவனிடம் கேட்கவேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்:

لَوْ أَنَّ أَحَدَهُمْ إِذَا أَرَادَ أَنْ يَأْتِيَ أَهْلَهُ قَالَ : بِاسْمِ اللَّهِ اللَّهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ وَجَنِّبْ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا ، فَإِنَّهُ إِنْ يُقَدَّرْ بَيْنَهُمَا وَلَدٌ فِي ذَلِكَ ، لَمْ يَضُرَّهُ شَيْطَانٌ أَبَدًا

*ஒருவர் தம் துணைவரை அணுகும்பொழுது, 'அல்லாஹ்வின் பெயரால் (தொடங்குகிறேன்); யா அல்லாஹ்! எங்களை ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பாயாக; எங்களுக்கு நீ அளிக்கும் அருட்கொடையையும் (அதாவது, வரப் போகும் வாரிசு) ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பாயாக' என்று கூறுவாரெனில், பின்னர் அந்த உறவினால் அவர்களுக்குக் குழந்தை பெற நாடப் பட்டிருந்தால், அதற்கு ஒருபோதும் ஷைத்தான் தீங்கிழைக்கமாட்டான். (ஸஹீஹ் அல்-புஹாரி* ***141*** *ஸஹீஹ் முஸ்லிம்* ***1434,*** *இங்கு முஸ்லிமின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

எனவே, புணர்ச்சிக்குமுன் தம்பதியர் இருவரும் பின்வருமாறு முதலில் அல்லாஹ்வின் பெயரைக் கூறும்படி பரிந்துரைக்கப்பட்டுள்ளது.

بِسْمِ اللَّهِ

ஒலிபெயர்ப்பு:
*பிஸ்மில்லாஹ்*

மொழிபெயர்ப்பு:
அல்லாஹ்வின் திருப்பெயரால்

அல்லது

بِسمِ اللهِ الرَّحمَنِ الرَّحِيمِ

ஒலிபெயர்ப்பு:
*பிஸ்மில்லாஹ் அர்-ரஹ்மான் அர்-ரஹீம்*

மொழிபெயர்ப்பு:
அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்.

அதன்பின், பின்வரும் பிரார்த்தனையைச் (துஆவை) செய்யவும்:

اللَّهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ وَجَنِّبْ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا

ஒலிபெயர்ப்பு:
*அல்லாஹும்ம ஜன்னிப்னஷ்-ஷைத்தான், வ ஜன்னிபிஷ்-ஷைத்தான மா ரஸக்தனா*

*மொழிபெயர்ப்பு:*
*யா அல்லாஹ்! எங்களை ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பாயாக! எங்களுக்கு நீ அளிக்கும் அருட்கொடையையும் ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பாயாக!*

மேற்கூறிய துஆவை ஓதுவது முக்கியமானது. ஏனெனில், முதலாவதாக, இது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) நமக்கு அளித்த வழிகாட்டுதலாகும். இரண்டாவதாக, இந்த துஆவை அலட்சியமாக விட்டுவிடுவதால் ஒருவருக்கு வரப்போகும் வாரிசு ஷைத்தானின் தீங்கிலிருந்து பாதுகாப்புப் பெறாமல் போகலாம்.

### 4. கிப்லாவை முன்னோக்காமல் இருத்தல்

கிப்லா திசையை முன்னோக்குவதிலிருந்து தவிர்ந்திருப்பது, உடலுறவு ஒழுங்குகளில் ஒன்றாகும். ஏனெனில், அந்த நிலையில் பொதுவாக ஒருவரின் நிர்வாணக் கோலம் வெளிப்படுகிறது. ஹனஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் இப்னு ஆபிதீன், ஷாஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் கஸ்ஸாலி, ஹம்பலி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் இப்னு குதாமா ஆகிய எல்லோரும், உடலுறவின்போது கிப்லாவை முன்னோக்குவது சற்று விரும்பத்தகாதது *(மக்ரூஹ் தன்ஸீஹ்)* எனக் கூறுகின்றனர் (எனினும், அது பாவமில்லை).

இமாம் இப்னு குதாமா கூறுகிறார்: ‘உடலுறவின்போது ஒருவர் கிப்லாவை முன்னோக்கக் கூடாது. இதை அம்ர் இப்னு ஹஸம், அதா ஆகிய இருவரும் விரும்பவில்லை.’ *(அல்-முக்னி* 8136, மேலும் பார்க்க: *ரத் அல்-முஹ்தார்* 1:341 மற்றும் *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* 6:174)

### 5. உடலுறவின்போது பேசுதல்

முன்விளையாட்டின்போது பேசுதல் அனுமதிக்கப்பட்டது மட்டுமின்றி அது ஊக்குவிக்கவும்படுகிறது என்பதை நாம் ஏற்கனவே கூறியிருந்தோம். தம்பதியர், ஒருவர் மற்றவர் மீதுள்ள தங்கள் அன்பையும் ஏக்கத்தையும் ஆசையையும் வெளிப்படுத்தும் பண்பான சொற்களைப் பரிமாறிக்கொள்வது சிறந்தது. முன்விளையாட்டின்போது, இருவரும் பாலியல் கிளர்ச்சியூட்டும் மொழியில் பேசுவது தவறில்லை. ஒரு நிபந்தனை: அவர்களின் உரையாடலில் இயல்பிலேயே குறிப்பான தவறோ பாவமோ எதுவும் இருக்கக்கூடாது. மேலும், ஏற்கனவே நாம் கலந்துரையாடியது போல, அது பிறர் காதில் விழாத வண்ணம் அமையவேண்டும்.

எனினும், புணர்ச்சியின் போது, அளவுக்கதிகமான பேச்சு விரும்பத் தகாதது *(மக்ரூஹ்)* என செவ்விய அறிஞர்கள் கூறுகின்றனர். ஏனெனில்,

அ. உடலுறவு அடிப்படையிலேயே மறைவான விஷயம்;

ஆ. உடலுறவின்போது சரியான ஒழுங்கை அனுசரிக்கவேண்டு மென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கட்டளையிட்டுள்ளார்கள். இதில் அளவுக்கதிகமான பேச்சு, சரியான ஒழுங்குக்குப் புறம்பானது.

இ. இது கழிப்பறையிலோ குளியலறையிலோ இருக்கும் நிலைக்கு ஒப்பானது. அதாவது, இங்கும் ஒருவர் நிர்வாண நிலையில் இருப்பதால், பேசுவது விரும்பத்தகாதது *(மக்ரூஹ்)*. (காண்க: *ரத் அல்-முஹ்தார்* **6:148** *அல்-முக்னி* **8:136)**

மேலே கூறியது போக, பிறர் அருகில் இருக்கும் நிலையில் தம்பதியர் உடலுறவுகொள்ளும்போது பேசுவது விரும்பத்தகாதது; ஆனால், அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்வதில் தவறேதுமில்லை என (இந்திய) துணைக்கண்டத்திலுள்ள புகழ்பெற்ற தற்கால ஹனஃபி சட்டவியலாளர், ஷெய்கு முஃப்தி முஹம்மது ஷாஃபி (அல்லாஹ் அவர் மீது கருணை புரியட்டும்) கூறுகிறார். *(இம்தாத் அல்-முஃப்தீன்* **ப.1032)**

### 6. புணரும் நிலைகள் (உடலுறவு நிலைகள்)

உடலுறவுக்கான பொருத்தமான நிலையைத் தெரிந்தெடுக்கும் விஷயத்தில், தம்பதியர் ஒருவருக்கொருவர் உடன்படும் எந்தவொரு நிலையையும் தெரிந்தெடுக்க இஸ்லாம் பொதுவான அனுமதி வழங்கு கிறது. எனினும், அது ஆசனவாயில் அல்லாது, பெண்குறியில் இருக்க வேண்டும். ஆசனவாய்ப் புணர்ச்சி திட்டவட்டமாகத் தடை செய்யப் பட்டுள்ளது. இதைப் பின்னர் விரிவாகப் பார்ப்போம். ஒரு தம்பதி யினருக்கு குறிப்பிட்ட உடலுறவு முறை கூடுதல் வசதியாகவும் சுகமாகவும் இருக்கலாம். இன்னொரு தம்பதியினருக்கு முற்றிலும் வேறுவிதமான நிலை இன்ப உணர்வு அளிக்கலாம். எனவே, அவர் களுக்குரிய மிகப் பொருத்தமான வழியை அவர்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். உடல் வசதி, திருப்தி, இன்பக்களிப்பு ஆகியவற்றைக் கருதி இதை அமைத்துக் கொள்ளலாம்.

*அல்லாஹ் கூறுகிறான்:*

نِسَآؤُكُمْ حَرْثٌ لَّكُمْ فَأْتُوا۟ حَرْثَكُمْ أَنَّىٰ شِئْتُمْ وَقَدِّمُوا۟ لِأَنفُسِكُمْ وَاتَّقُوا۟ اللَّهَ

**உங்கள் மனைவிகள் உங்களுக்கான விளைநிலங்களாவர். எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள். எனினும்,**

*முன்னதாக உங்களுக்கென சில நற்செயல்களை செய்துகொள்ளுங்கள்; மற்றும், அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். (குர்ஆன் 2:223)*

இந்த வசனத்தில் அல்லாஹ் *ஹர்ஸ்* எனும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளான். அதற்கு விளைநிலம் எனப் பொருள். பெண்ணிற்கும் விளைநிலத்திற்கும் இடையில் உள்ள ஒப்புமையிலிருந்து, ஒருவர் தம் மனைவியின் பெண்குறி வாயிலாகவே அவளுடன் உடலுறவு கொள்ளலாம் எனப் புலப்படுகிறது. ஏனெனில், இதன் மூலமே வித்துக்களை விளைக்க இயலும் மற்றும் அவள் கர்ப்பம்தரிக்க இயலும். எனினும், அந்த இடத்தை அணுகுவதற்கு எந்த நிலை அல்லது பக்கத்தை வேண்டுமானாலும் - முன்னால், பின்னால், அல்லது அவள் முகம் குப்புற மண்டியிட்ட நிலையில் - அமைத்துக்கொள்ளலாம். (*அல்-மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம்* ப.1084).

மேலும், இந்த வசனத்தை விளக்குகின்ற, அது இறக்கி அருளப் பட்ட சந்தர்ப்ப சூழ்நிலையை (*சபப் அல்-நுஸூல்*) குறிப்பிடும் பல அறிவிப்புகள் நபிமொழித் தொகுப்புகளில் உள்ளன. அவற்றில் சில இங்கு தரப்பட்டுள்ளன:

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரழி) அறிவிக்கிறார்:

كَانَتْ الْيَهُودُ تَقُولُ: إِذَا أَتَى الرَّجُلُ امْرَأَتَهُ مِنْ دُبُرِهَا فِي قُبُلِهَا كَانَ الْوَلَدُ أَحْوَلَ ، فَنَزَلَتْ
نِسَآؤُكُمْ حَرْثٌ لَّكُمْ فَأْتُوا حَرْثَكُمْ أَنَّى شِئْتُمْ

‘ஒருவர் தம் மனைவியைப் பின்புறமிருந்து (ஆனால்) அவளின் பெண்குறியை அணுகுவாரெனில், (அவள் கர்ப்பம்தரிக்கும்) குழந்தை மாறுகண் உடையதாகப் பிறக்கும்’ என யூதர்கள் கூறிவந்தனர். எனவே, இந்த வசனம் இறங்கியது: ‘உங்கள் மனைவிகள் உங்களுக்கான விளைநிலங்களாவர். எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள்.’ (*சஹீஹ் அல்-புஹாரி* **4254**, *சஹீஹ் முஸ்லிம்* **1435** *சுனன் அல்-திர்மிதி* **2978**, இங்கு *முஸ்லிமின்* சொற்களே இடம்பெற்றுள்ளன)

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:

جَاءَ عُمَرُ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ يَا رَسُولَ اللَّهِ هَلَكْتُ قَالَ وَمَا أَهْلَكَكَ قَالَ حَوَّلْتُ رَحْلِي اللَّيْلَةَ قَالَ فَلَمْ يَرُدَّ عَلَيْهِ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ شَيْئًا قَالَ فَأُنْزِلَ اللَّهُ عَلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ هَذِهِ الْآيَةَ نِسَآؤُكُمْ حَرْثٌ لَّكُمْ فَأْتُوا حَرْثَكُمْ أَنَّى شِئْتُمْ أَقْبِلْ وَأَدْبِرْ وَاتَّقِ الدُّبُرَ وَالْحَيْضَةَ

உமர் (ரழி) அல்லாஹ்வின் தூதரிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! நான் அழிந்துவிட்டேன்' என்றார். 'என்ன விஷயம் உம்மை அழித்துவிட்டது?' என நபியவர்கள் (ஸல்) வினவினார்கள். 'நேற்றிரவு நான் என்னுடைய சேணத்தை மாற்றிவிட்டேன் (தன் மனைவியுடன் பின்புறமிருந்து, ஆனால் பெண்குறியில் புணர்ச்சிகொள்வதைக் குறிக்கும் சொற்வழக்கு).' இதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) எதுவும் கூறவில்லை. பின்னர் இந்த வசனம் அல்லாஹ்வின் தூதருக்கு இறங்கியது: 'உங்கள் பெண்கள் உங்களுக்கான விளைநிலங்கள். எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங் களை அணுகுங்கள்.' எனவே, நபியவர்கள் (ஸல்) கூறினார்கள்: 'அவளை முன்னாலோ பின்னாலோ அணுகிக்கொள்ளுங்கள். ஆனால், ஆசனவாயையும் மாதவிடாயையும் (காலத்தை) தவிர்த்துவிடுங்கள்.' *(சுனன் அல்-திர்மிதி* **2980** மற்றும் *நஸயீ தன் இஷ்ரத் அல்-நிஸாவில்* **94**)

*அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:*

إِنَّمَا كَانَ هَذَا الْحَيُّ مِنَ الْأَنْصَارِ وَهُمْ أَهْلُ وَثَنٍ مَعَ هَذَا الْحَيِّ مِنْ يَهُودَ وَهُمْ أَهْلُ كِتَابٍ ، وَكَانُوا يَرَوْنَ لَهُمْ فَضْلًا عَلَيْهِمْ فِي الْعِلْمِ فَكَانُوا يَقْتَدُونَ بِكَثِيرٍ مِنْ فِعْلِهِمْ ، وَكَانَ مِنْ أَمْرِ أَهْلِ الْكِتَابِ أَنْ لَا يَأْتُوا النِّسَاءَ إِلَّا عَلَى حَرْفٍ وَذَلِكَ أَسْتَرُ مَا تَكُونُ الْمَرْأَةُ ، فَكَانَ هَذَا الْحَيُّ مِنَ الْأَنْصَارِ قَدْ أَخَذُوا بِذَلِكَ مِنْ فِعْلِهِمْ ، وَكَانَ هَذَا الْحَيُّ مِنْ قُرَيْشٍ يَشْرَحُونَ النِّسَاءَ شَرْحًا مُنْكَرًا وَيَتَلَذَّذُونَ مِنْهُنَّ مُقْبِلَاتٍ وَمُدْبِرَاتٍ وَمُسْتَلْقِيَاتٍ ، فَلَمَّا قَدِمَ الْمُهَاجِرُونَ الْمَدِينَةَ تَزَوَّجَ رَجُلٌ مِنْهُمُ امْرَأَةً مِنَ الْأَنْصَارِ فَذَهَبَ يَصْنَعُ بِهَا ذَلِكَ فَأَنْكَرَتْهُ عَلَيْهِ وَقَالَتْ: إِنَّمَا كُنَّا نُؤْتَى عَلَى حَرْفٍ فَاصْنَعْ ذَلِكَ وَإِلَّا فَاجْتَنِبْنِي ، حَتَّى شَرِيَ أَمْرُهُمَا ، فَبَلَغَ ذَلِكَ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ، فَأَنْزَلَ اللَّهُ عَزَّ وَجَلَّ: نِسَاؤُكُمْ حَرْثٌ لَكُمْ فَأْتُوا حَرْثَكُمْ أَنَّى شِئْتُمْ أَيْ: مُقْبِلَاتٍ وَمُدْبِرَاتٍ وَمُسْتَلْقِيَاتٍ ، يَعْنِي بِذَلِكَ مَوْضِعَ الْوَلَدِ

...(இஸ்லாம் வருகைக்குமுன்) சிலைவணங்கிகளாய் இருந்த இந்த *அன்சாரி* கோத்திரம், வேதக்கார மக்களான யூதர்களோடு கூடி வசித்தனர். அவர்கள் *(அன்சாரிகள்)* கல்வியறிவு விஷயத்தில், தங்களைவிட அவர்கள் (யூதர்கள்) மேன்மையானவர்கள் என்பதை ஏற்றிருந்தனர். எனவே, அவர்களின் அநேகச் செயல்களைப் பின்பற்றிவந்தனர். வேதக்கார மக்கள் (இங்கு யூதர்கள்) தங்கள் பெண்களை ஒரேயொரு பக்கத்தில் மட்டும் அணுகுவார்கள் (அதாவது, அவள் மல்லாந்து படுத்திருக்கும் நிலையில்). ஏனெனில், இதுவே பெண்ணுக்கு மிக மறைவான நிலையாக இருந்தது. ஆக, அந்த *அன்சாரிக்* கோத்திரமும் அவர்களிடமிருந்து (யூதர்கள்) இதையே பின்பற்றினர். (எனினும்), குறைஷி

குலத்தாரோ, தங்கள் பெண்களின் மறைப்பை முழுவதுமாக அகற்றிவிட்டு, அவர்களுடன் முன்னாலும் பின்னாலும் அவர்கள் மல்லாந்து படுத்திருக்கும் நிலையிலும் சுகம் தேடுவார்கள். *முஹாஜிரூன்* (புலம்பெயர்ந்தவர்கள்) மதீனா வந்தபோது, அவர்களுள் ஒருவர் ஓர் *அன்சாரிப்* பெண்ணைத் திருமணம் செய்தார். அவளுடன் அதே விதமான காரியங்களை (அதாவது, குறைஷி களின் வழக்கத்திற்கு ஏற்ப) செய்யவிரும்பினார். ஆனால், அவள் அதற்கு இணங்கமறுத்து இவ்வாறு கூறிவிட்டாள்: 'எங்களை ஒரு பக்கத்திலிருந்து மட்டும்தான் அணுகுவார்கள் (அதாவது, நாங்கள் மல்லாந்து படுத்திருக்கும் நிலையில்). எனவே, அதே விதமாகச் செய்யுங்கள். இல்லாவிட்டால், என்னிடமிருந்து விலகிக்கொள்ளுங்கள்.' அவர்களின் இந்த விவகாரம் பற்றி செய்தி பரவி, அல்லாஹ்வின் தூதரை எட்டியது. எனவே, அல்லாஹ் இவ்வாறு இறக்கிவைத்தான்: 'உங்கள் மனைவிகள் உங்களுக்கான விளைநிலங்களாவர். எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள்.' அதாவது முன்னால், பின்னால் அல்லது அவள் மல்லாந்து படுத்திருக்கும் நிலையில். எனினும், இந்த வசனம் குழந்தை பிறக்கும் உறுப்பை (பெண்குறியை) மட்டுமே குறிப்பிட்டது. *(சுனன் அபூ தாவூத் 2157)*

'உங்கள் மனைவிகள் உங்களுக்கான விளைநிலங்களாவர். எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள்' எனும் வசனம் குறித்து உம்மு சலமா (ரழி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்:

يَعْنِي صِمَامًا وَاحِدًا

அதன் பொருள், ஒரேயொரு துவாரத்தில் (பெண்குறி) மட்டுமே என்பதாகும். *(சுனன் அல்-திர்மிதி 2979)*

இந்தக் குர்ஆனின் வசனத்திலிருந்தும் இதற்கு விளக்கமளிக்கும் ஹதீஸ்களிலிருந்தும், தம்பதியர் தங்குதடையின்றி தாங்கள் விரும்பும் எந்த நிலையில் வேண்டுமானாலும் உடலுறவு கொள்ளலாம் என்பது தெளிவாகப் புலப்படுகிறது. இந்த ஹதீஸ்களில் மேற்கோள்காட்டப் பட்டுள்ள எடுத்துக்காட்டுகள் வகைவேறுபாடுகளையே கூறுகின்றன; வரம்புகளை அல்ல. எனவே, வேறு எந்த நிலையைத் தம்பதியர் தேர்ந்தெடுத்துக்கொள்வதும் சரியானதே. ஒரே நிபந்தனை: அது பெண்குறிப் புணர்ச்சியாக இருக்கவேண்டும்; ஆசனவாயில் அல்ல. பின்னது திட்டவட்டமாக விலக்கப்பட்டது.

குறிப்பிட்ட சில நிலைகளைப் பொறுத்தவரை, உடலுறவு ஒழுங்குகள் பற்றி எழுதப்பட்டுள்ள நூல்கள் பின்வரும் தகவல்களைக் கூறுகின்றன:

**அ. ஆண், மேலிருந்து புணரும் நிலை**

ஆண் மேல்புறம் இருப்பதே, இயல்பான, மிக வழக்கமான உடலுறவு

நிலையாகும். இதில் ஒரு வடிவம், பெண் மல்லாந்து படுத்து தன் கால்களை விரித்துவைத்திருக்க, கணவன் அவள் மீது தட்டையாகச் சாய்ந்து தன் உடலால் அவள் உடலை மறைப்பது. எனினும், இந்த நிலையில் கணவன் தன் எடை அனைத்தையும் அவள் மீது சாத்தி அழுத்தாமல் இருப்பதில் கவனமாக இருக்கவேண்டும். ஏனெனில், இது அவளுக்குத் தொல்லையாக இருக்கலாம். அவர் தம் எடை முழுவதையும் அல்லது பகுதியைத் தம் முழங்கைகள், கைகள் அல்லது முழங்கால்களால் தாங்கிக்கொள்ளலாம்.

இந்த நிலை பற்றிய மறைமுகமான சுட்டுதல் குர்ஆனில் உள்ளதாக அறிஞர்கள் கூறுகின்றனர். அல்லாஹ் கூறுகிறான்:

هُوَ الَّذِي خَلَقَكُم مِّن نَّفْسٍ وَاحِدَةٍ وَجَعَلَ مِنْهَا زَوْجَهَا لِيَسْكُنَ إِلَيْهَا فَلَمَّا تَغَشَّاهَا حَمَلَتْ حَمْلاً خَفِيفًا فَمَرَّتْ بِهِ فَلَمَّا أَثْقَلَت دَّعَوَا اللَّهَ رَبَّهُمَا لَئِنْ آتَيْتَنَا صَالِحًا لَّنَكُونَنَّ مِنَ الشَّاكِرِينَ فَلَمَّا آتَاهُمَا صَالِحًا جَعَلاَ لَهُ شُرَكَاء فِيمَا آتَاهُمَا فَتَعَالَى اللَّهُ عَمَّا يُشْرِكُونَ

*அவனே உங்களை ஓர் ஆன்மாவிலிருந்து படைத்து, அவரிலிருந்து அவரின் மனைவியை உருவாக்கினான், அதன் மூலம் அவர் அவளிடம் இன்பம் பெற்றுக்கொள்ளலாம் என்பதற்காக. ஆக, அவர் தன்னைக்கொண்டே அவளை மறைக்கும்பொழுது, அவள் இலகுவான சுமையை சுமக்கிறாள் மற்றும் அதை தூக்கிக்கொண்டு அங்குமிங்கும் செல்கிறாள். அதன்பின், அவளின் சுமை கூடும்போது, அவர்களிருவரும் தங்கள் இறைவனாகிய அல்லாஹ்விடம் பிரார்த்திக்கின்றனர்: 'நீ எங்களுக்கு பரிபக்குவமான குழந்தையை அருளினால், நாங்கள் நன்றியுடையவர்களாக இருப்போம்.' எனினும், நாம் அவர்களுக்கு பரிபக்குவமான குழந்தையை அருளியபின், அவர்களுக்கு அவன் அருளிய விஷயத்தைப் பொறுத்தே அவர்கள் அவனுக்கு இணை கற்பிக்கின்றனர். நிச்சயமாக அவர்கள் அவனுடன் இணை கற்பிப்பவற்றை விட அவன் மிக்க உயர்ந்தவன். (குர்ஆன் 7:189-190)*

இந்த வசனம், ஆதம், ஹவ்வா ஆகியோரின் படைப்பு குறித்து சுட்டுகிறது. மேலும், இவர்களின் சந்ததியினரில் இணைவைப்பவர்களின் மனப்பாங்கையும் அது வெளிப்படுத்துகிறது. அவர்களில் ஒருவர் தம் மனைவியை முழுவதுமாக மூடிய வண்ணம் அவளுடன் உடலுறவு கொண்டு அவள் கருத்தரிக்கும்பொழுது, அவர்களிருவரும் தங்களுக்கு ஓர் ஆரோக்கியமான, பரிபக்குவமான குழந்தையை அருளுமாறு அல்லாஹ்விடம் வேண்டுகின்றனர். எனினும், குழந்தை பிறந்தபின் அவர்கள் அதை, தங்களின் கற்பிதக் கடவுள்களின் அருள் எனக் கூறிக் கொள்கின்றனர். (காண்க: *த மீனிங்ஸ் ஆஃப் த நோபில் குர்ஆன்* (ஆங்.) 1:315)

இந்த வசனத்தில் வரும், 'அவர் தன்னைக்கொண்டே அவளை மறைக்கும்பொழுது' எனும் சொற்றொடர், கணவன் மனைவி மீது படுத்து தன் உடலைக்கொண்டு அவளை முழுவதுமாக மறைக்கும் நிலையைச் சுட்டுகிறது.

இதேபோன்ற நிலையில், பெண் மல்லாந்து படுத்து தன் கால்களை தன் நெஞ்சோடு அணைக்கும் அளவுக்குத் தூக்கி, முழங்கால்களை உயர்த்திக் கொள்கிறாள். கணவன் ஏறத்தாழ அமர்ந்த அல்லது குந்திய நிலையில் அவளைப் புணர்கிறான்.

இந்த நிலையைப் பின்வரும் நபிமொழி மறைமுகமாகச் சுட்டு கிறது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூ ஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا جَلَسَ بَيْنَ شُعَبِهَا الْأَرْبَعِ ثُمَّ جَهَدَهَا فَقَدْ وَجَبَ عَلَيْهِ الْغُسْلُ

ஒரு மனிதர் அவளின் (தன் மனைவியின்) நான்கு பாகங்களுக்கு மத்தியில் அமர்ந்து அழுத்தம் கொடுப்பாராயின், அவர் மீது குளிப்பு *(குஸ்லு)* கடமையாகிவிடுகிறது. *(ஸஹீஹ் முஸ்லிம் 348)*

இமாம் நவவி கூறுகிறார்: 'அந்த ''நான்கு பாகங்கள் *(ஷுஅப் அல்-அர்பஃ)*'' என்பது எவற்றைக் குறித்து கூறப்பட்டது என்பதில் அறிஞர்கள் கருத்துவேறுபடுகின்றனர். சிலர், அது கைகளையும் கால் களையும் குறிப்பதாகக் கூறுகின்றனர். வேறு சிலர், அது கால்களையும் தொடைகளையும் குறிப்பதாகக் கூறுகின்றனர். இன்னும் சிலர், அது கால்களையும் பாலுறுப்புப் பகுதியின் ஓரங்களையும் குறிப்பதாகக் கூறுகின்றனர். காழி இயாழ் அவர்களோ, பெண்குறியைச் சுற்றியுள்ள நான்கு பகுதிகள் எனும் பொருளைத் தேர்வுசெய்துள்ளார்....' *(அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் ப.400)*

உள்ளபடியே, அந்த 'நான்கு பாகங்கள்' குறித்த விளக்கங்களில் , பெண்ணின் கால்களும் தொடைகளும் அடங்குகின்றன. இதில், மனைவி மல்லாந்து படுத்துத் தன் முழங்கால்களை மடக்கிவைத்திருக்கும் நிலையில் கணவன் ஏறத்தாழ அமர்ந்த நிலையில் அவளைப் புணர் கிறான். அப்போது, அவளுடைய தொடைகளும் முழங்காலுக்குக் கீழுள்ள சதைகளும் 'நான்கு பாகங்களாக' அமைகின்றன. இதையே இந்த விளக்கம் சுட்டுவதாகத் தெரிகிறது.

மேலும் ஆண் மேலே இருந்து புணரும் நிலைகளில் பலவிதங்கள் உள்ளன. அவற்றுக்கிடையில் சிறு, சிறு வித்தியாசங்களே நிலவுகின்றன. ஆண் மேலே இருந்து புணரும் நிலையே, பெண் கருத்தரிப்பதற்கு மிக

ஏதுவானது என அறிஞர்களும் நிபுணர்களும் ஒருமித்த கருத்தைக் கூறுகின்றனர். இதில், மிகுந்த உடலுடன் உடல் தொடுதலுக்கு வாய்ப்பு ஏற்படுகிறது; மற்றும், தம்பதியர் ஒருவரையொருவர் ஒரே சமயத்தில் முத்தமிட்டுக் கட்டியணைத்துக்கொள்ள வசதியளிக்கிறது. *(அல்-திப் அல்-நபவி ப.182)*

**ஆ. பின்புறத்திலிருந்து புணரும் நிலை**

இது மனைவி தன் பின்புறத்தைக் கணவனுக்குக் காட்ட, அவர் அவளைப் புணரும் நிலையாகும். இது, முன்பு மேற்கோள்காட்டப் பட்ட சில ஹதீஸ்களில் (நபிமொழிகளில்) தெளிவாக, வெளிப்படை யாக அனுமதிக்கப்பட்டுள்ளது. ஓர் அறிவிப்பில், மனைவியைச் சித்திரிப்பதற்கு *முஜப்பத்* எனும் சொல் பயன்படுத்தப்படுகிறது. அதாவது, அவள் சிரம்பணிந்த நிலையில் கீழ் நோக்கி முகம் வைத்திருக் கிறாள் என்பது இதன் அடிப்படைப் பொருள். மனைவி தன் கைகள் மற்றும் முழங்கால்கள் மீது இருக்க, கணவன் அவளுக்குப் பின்னால் மண்டியிட்டுக் கொள்வதும் சரிதான். இந்த நிலைக்கு அனுமதியுள்ளது என்பதில் ஐயமில்லை.

எனினும், ஏற்கனவே நாம் விவாதித்தபடி, பின்னாலிருந்து புணரும் நிலை என்பது ஆசனவாய் (குதவழி) உடலுறவு அல்ல என்பதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். அதாவது புறத்திலிருந்து புணரும் நிலையில், மனைவி தன் பின்புறத்தைக் கணவனுக்குக் காட்ட, அவன் பெண்குறியில் புணர்கின்றான். ஆனால், ஆசனவாய் உடலுறவிலோ, கணவன் அவளுடைய ஆசனவாயில் புணர்கின்றான். பின்னது இஸ்லாத்தில் முற்றிலும் தடைசெய்யப்பட்டுள்ளது.

**இ. பக்கவாட்டிலிருந்து புணரும் நிலை**

இந்த நிலையில், தம்பதியர் ஒருவரையொருவர் நோக்கும் விதமாக ஒரு பக்கம் திரும்பிப் படுத்துள்ளனர். அல்லது, அவர்களிருவரும் பக்க வாட்டில் படுத்திருக்க, கணவன் பின்பக்கமாக அவளின் பெண் குறிக்குள் புணர்கின்றான். இந்த நிலை பற்றியும் எந்தவொரு கேள்வி யும் இல்லை. இதற்கு அனுமதியுண்டு. இது, கர்ப்பத்தின் முதிர்ந்த காலகட்டங்களில் பெண்ணின் வயிற்றுக்கு இதமளிப்பதால் வசதியான ஒரு நிலையாகும்.

**ஈ. நின்றுகொண்டு புணரும் நிலை**

இந்தியத் துணைக்கண்டத்தின் அண்மைக் காலத்திய மாபெரும் சட்டவியலாளர் *(ஃபகீஹ்)*, மௌலானா அஷ்ரஃப் அலி தானவி, நிற்கும்

நிலையில் (ஒன்றாக) குளிப்பதன் அனுமதி குறித்த கேள்விக்கு விடையளிக்கும்பொழுது இவ்வாறு கூறுகிறார்: 'எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள்' என்ற குர்ஆனிய வசனத்தின் விளைவை விரிவுரையாளர்கள் பொதுமைப் படுத்தி, அதில் அமர்வு மற்றும் நிற்கும் நிலைகளையும் உட்படுத்துகின்றனர். எனவே, நிற்கும் நிலையில் குளிப்பதற்கான அனுமதிக்கு கூடுதல் தகுதி உண்டு. ஏனெனில், அது உடலுறவைவிட எளிதான விஷயமே. (வேறு விதத்தில் கூறுவோமானால், நிற்கும் நிலையில் ஒருவர் தம் துணைவருடன் உடலுறவுகொள்ள அனுமதியுள்ள போது, அந்த நிலையில் (ஒன்றாகக்) குளிப்பதற்கு சந்தேகமின்றி அனுமதியுள்ளது). (இம்தாத் அல்-ஃபதாவா 1:18)

தம்பதியர் இருவரும் நின்றாலும் சரி அல்லது ஒருவர் மட்டும் நின்ற நிலையில் இருந்தாலும் சரி, நிற்கும் நிலை உடலுறவு அனுமதிக்கப் பட்டதே. இருவரும் ஒருவரையொருவர் நோக்கும் விதத்தில் இருக்கலாம். அல்லது, மனைவி தன் பின்புறத்தைக் கணவனுக்குக் காட்ட, அவர் பின்பக்கமாக அவளுடைய பெண்குறியில் புணரலாம்.

இவ்வாறிருக்க, நிற்கும் நிலையில் உடலுறவுகொள்வதை வழக்கமாக மேற்கொள்ளுதல் தவிர்க்கப்பட வேண்டும் என அறிஞர்கள், நிபுணர்கள் இருசாராரும் எச்சரிக்கின்றனர். ஏனெனில், இது மருத்துவ ரீதியாக பாதிப்பை ஏற்படுத்தலாம். இதை நிரூபிப்பதற்கு போதிய மருத்துவ ஆதாரம் இல்லையெனினும், கோட்பாட்டுரீதியாக - அதிக முதுகு வலி, இடுப்புப் பிடிப்பு, பெண்குறி மற்றும் பெருங்குடல் அடிப்பகுதி கீழே இறங்குதல் ஆகிய அபாயங்கள் உள்ளன. இது மருத்துவரீதியான கண்ணோட்டம் மட்டுமே. இஸ்லாமியச் சட்டத் தீர்ப்பை பொறுத்தவரை, நாம் ஏற்கனவே கூறியது போல, நிற்கும் நிலை உடலுறவுக்கு அனுமதியுண்டு.

### உ. உட்கார்ந்துகொண்டு புணரும் நிலை

ஒருவர் தம் துணைவருடன் உட்கார்ந்திருக்கும் நிலையில் உடலுறவு கொள்வதற்கும் நிச்சயமாக அனுமதியுள்ளது. 'எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள்' எனும் குர்ஆனிய வசனத்தின் ஒளியில் இது அனுமதிக்கப்பட்டது.

### ஊ. பெண், மேலேயிருந்து புணரும் நிலை

இஸ்லாமியரீதியாக, மனைவி கணவனுக்கு மேலே உள்ள உடலுறவு நிலையும் அனுமதிக்கப்பட்டதே. இதற்கு ஆதாரம், இந்த நூலில் பல

முறை மேற்கோளிடப்பட்ட அந்த குர்ஆனிய வசனத்தின் பொதுவான நோக்குதான். இதில், கணவன் மல்லாந்து படுத்திருக்க, அவர் மேல் மனைவி அமர்ந்திருப்பதும் அல்லது அவர் மீது தன் உடல் முழுவதையும் கொண்டு படுத்திருப்பதும் அடங்கும்.

எனினும், பெண்-மேலிருந்து புணரும் நிலை ஆரோக்கியமற்றதும் சுகாதாரக் கேடுமாகும் என அறிஞர்களும் நிபுணர்களும் கூறுகின்றனர். இதை இமாம் இப்னு அல்-கைய்யூம் தம்முடைய *அல்-திப் அல்-நபவியில்* விளக்குகிறார். மனைவி மேலே உள்ளபோது, கணவனின் விந்து முழுமையாக வெளிப்படாமல் தடைபடலாம். இது அவரை பாதிக்கலாம். மட்டுமின்றி, மனைவியின் திரவங்களும் கணவனின் பிறப்புறுக்குள் புகக்கூடிய சாத்தியம் உள்ளது. இது அவருக்கு நோய் நொடிகளை விளைவிக்கலாம். (*அல்-திப் அல்-நபவி* ப.183)

மீண்டும், இவையெல்லாம் மருத்துவரீதியான கண்ணோட்டங்கள் தாம். மருத்துவக் கருத்துகள் காலத்துக்குக் காலம் மாறக்கூடியவை. எனவே, இந்த நிலைகளில் உடலுறவுகொள்ள விரும்பும் தம்பதிகள் திடமான மருத்துவ ஆலோசனை பெற்றுக்கொண்டு அதன்படி நடப்பது சிறந்தது.

இறுதியாக, தம்பதியர் ஒரு உடலுறவு சந்திப்பின்போதே – பலமுறை கூட – தங்கள் நிலைகளை மாற்றிக்கொள்வதில் தவறேதுமில்லை. மேலும், உடலுறவு நிலைகளில் பலதரப்பட்ட வகைகளும் லாவகமான மாறுதல்களும் மார்க்க ஒழுங்குக்கோ பண்பான நடத்தைக்கோ ஒழுக்க நாகரிகத்துக்கோ புறம்பானவை அல்ல. இதுபோன்ற செயலை நாணக் குறைவின் அடையாளமாக எண்ணுவது தவறு. அல்லாஹ்வே, சட்டப் படி திருமணமான தம்பதிகள் தங்குதடையின்றி பல்வேறு உடலுறவு நிலைகளில் ஈடுபடுவதை அனுமதித்துள்ளான். எனவே, இவ்விஷயத்தில் தம்பதியருக்குக் குற்றவுணர்வோ சங்கடமோ ஏற்படவேண்டியதில்லை.

### 7. கற்பனை செய்தல்

ஒருவர் தம் துணைவருடன் உடலுறவு கொள்ளும்பொழுது, இன்னொரு வரைப் பற்றி பாலியல்ரீதியாக கற்பனைசெய்வது விலக்கப்பட்டதும் (*ஹராம்*) பாவமானதுமாகும். தம் துணைவர் அல்லாத ஒருவருடன் உடலுறவுகொள்வதாக வேண்டுமென்றே கற்பனைசெய்வது ஒருவகை யான இதய மற்றும் மனரீதியான விபச்சார (*ஸினா*) வகையாகும். அல்லாஹ் கூறுகிறான்:

إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَٰئِكَ كَانَ عَنْهُ مَسْئُولًا

*நிச்சயமாக பார்வை, செவி, இதயம் ஆகிய ஒவ்வொன்றைப் பற்றியும் கேள்வி கேட்கப்படும். (குர்ஆன் 17:36)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

فَالْعَيْنَانِ زِنَاهُمَا النَّظَرُ وَالْأُذُنَانِ زِنَاهُمَا الِاسْتِمَاعُ وَاللِّسَانُ زِنَاهُ الْكَلَامُ وَالْيَدُ زِنَاهَا الْبَطْشُ
وَ الرِّجْلُ زِنَاهَا الْخُطَا وَالْقَلْبُ يَهْوَى وَ يَتَمَنَّى وَ يُصَدِّقُ ذَلِكَ الْفَرْجُ وَ يُكَذِّبُهُ

...காமப் பார்வையே கண்களின் விபச்சாரம் *(ஸினா)*, (விலக்கப்பட்டதை) செவியுறுவதே காதுகளின் விபச்சாரம், (விலக்கப்பட்டதை) பேசுவதே நாவின் விபச்சாரம், (விலக்கப்பட்டதை) தொடுவதே கைகளின் விபச்சாரம், (விலக்கப்பட்ட இடங்களுக்கு) நடந்து செல்வதே கால்களின் விபச்சாரம். இதயம் ஏக்கமும் ஆசையும் கொள்கிறது. அதைப் பாலுறுப்புகள் உறுதிப் படுத்தவோ நிராகரிக்கவோ செய்கின்றன. (*ஸஹீஹ் அல்-புஹாரி* 5889 மற்றும் *ஸஹீஹ் முஸ்லிம்* 2657, இங்கு முஸ்லிமின் சொற்களே இடம்பெற்றுள்ளன)

இந்த ஹதீஸிற்கு இமாம் நவவி விளக்கவுரை அளிக்கிறார். சிலர் தங்கள் பாலுறுப்புகள் மூலம் நேரடியாக விபச்சாரத்தில் *(ஸினா ஹகீகிய்யா)* ஈடுபடுகின்றனர். வேறு சிலர், உருவகமான விபச்சாரத்தில் *(ஸினா மஜாஸிய்யா)* ஈடுபடுகின்றனர். அவர்கள் விலக்கப்பட்டதைப் பார்ப்பதால்; விலக்கப்பட்டதைச் செவியுறுவதால்; மாற்று பாலரில் உறவு-இல்லாத ஒருவரின் கையையும் உடலையும் தொடுவது அல்லது முத்தமிடுவதால்; விபச்சார இடத்திற்கு நடப்பதால்; மாற்று பாலரில் உறவு இல்லாத ஒருவருடன் விலக்கப்பட்டதைப் பேசுவதால்; அல்லது, இதயம் மற்றும் உள்ளத்தால் விபச்சாரம் செய்வதால் இதை செய்கின்றனர். (காண்க: *அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம்* ப.1880)

ஒருவர் தம் துணைவருடன் உடலுறவு கொள்ளும் போது, வேறு ஒருவரை கற்பனைசெய்வதை சட்டவியலாளர்கள் தெள்ளத் தெளிவாகத் தடைசெய்துள்ளனர். இமாம் இப்னு ஆபிதீன் தம் *ரத் அல்-முஹ்தாரில்* இவ்வாறு கூறுகிறார்: 'ஒருவர் தன் மனைவியுடன் உடலுறுவு கொள்ளும் போது, பிறிதொரு பெண்ணுடன் உடலுறவு கொள்வதாக எண்ணும் அளவுக்கு அவளை குறித்து நினைத்தால்..., இப்னு அல்ஹாஜ் அல்-மாலிகி கூறினார்: ''அது விலக்கப்பட்டது. ஏனெனில், அது ஒருவிதமான விபச்சாரமாகும். எங்கள் அறிஞர்களின் (மாலிக்கிகள்) கருத்தில், ஒருவர் ஒரு குவளை தண்ணீரை மதுவாக நம்பி குடித்தால், அந்தத் தண்ணீரைக் குடிப்பது அவருக்கு விலக்கப்பட்டதாகி விடுகிறது...'' மற்றும் எங்கள் சிந்தனாவழியின் (அதாவது, ஹனஃபி சிந்தனாவழி) கோட்பாடுகளும், அதற்கு அனுமதியில்லை என்பதைச்

சுட்டுகின்றன. ஏனெனில், உடலுறவின் போது ஓர் அந்நியப் பெண் குறித்து நினைப்பது, பாவம் செய்ய நாடுவதாகும். எனவே, தண்ணீர் அருந்தும் அந்த எடுத்துக்காட்டிற்கு ஒப்பானதாகும். பின்னர், எங்கள் (ஹனஃபி) அறிஞர்களில் *தப்யீன் அல்-மஹாரிமின்* நூலாசிரியர் அவர்கள் இப்னு அல்ஹாஜ் அல்-மாலிகியை மேற்கோள்காட்டி அவருடன் உடன்படுவதை நான் கண்டேன்.' (*ரத் அல்-முஹ்தார்* 6:372)

**பாவனை செய்தல்.** பாவனை செய்தல் என்பது, தம்பதியர் சில குறிப்பிட்ட பாத்திரங்களில் உடையணிந்து பாவனை செய்கின்றனர். அதாவது ஆசிரியராகவோ மாணவராகவோ மருத்துவராகவோ செவிலியராகவோ (நர்ஸாகவோ) நோயாளியாகவோ முதலாளி மற்றும் செயலாளராகவோ இன்னபிற வேடங்களிலோ பாவனை செய்தல். இது, குறிப்பிட்ட ஒருவரை மனதில் வைத்து செய்யப்பட்டால் – நாம் ஏற்கனவே கூறியதுபோல – விலக்கப்பட்டதே என்பதில் மறுகேள்வி யில்லை. குறிப்பிட்ட ஒருவரை மனதில் வைக்காமல் பாவனை செய்தால், அப்போதும் இதற்கு அனுமதியில்லை. ஏனெனில் இதில், ஒரு மருத்துவ ராகவோ நர்ஸாகவோ இருக்கும் அந்நியருடன் உடலுறவுகொள்வதாகக் கற்பனை செய்யப்படுகிறது. எனினும் – ஒருவர் தம் கணவரை மருத்து வராக நடிப்பில் எண்ணிக்கொள்வது போன்று – துணைவர் அந்தப் பாத்திரத்தில் பாவனைசெய்வதாக நினைத்து உடலுறவில் ஈடுபடுவது முற்றிலும் விலக்கப்பட்டதல்ல. என்றாலும், அதையும் தவிர்ப்பதே மிகச்சிறந்தது. ஏனெனில், இதன் மூலம் ஒருவர் தம் துணைவரை வேறு ஆளாக எண்ணுவதற்கு வழியேற்படும். அதன்விளைவாக, அவர்கள் மனத்தில் உருவகரீதியான விபச்சாரம் நடக்கும். தம்பதிகள் தங்கள் துணைவர் மீது உண்மையான நிலையில் மகிழ்ச்சியும் நிறைவும் கொள்வது அவசியம். தாங்கள் அல்லாத வேறு ஆளாக ஆகும் விதத்தில் உடையணிவது ஆபத்தான ஆட்டமாக மாறலாம்; இறுதியாக, தாம்பத்திய உறவிற்கே உலைவைக்கலாம்.

### 8. உடலுறவில் பரவசநிலை அல்லது உச்சநிலை

மணவாழ்வின் கட்டாய உரிமைகளில் ஒன்று, தம்பதியர் இருவரின் பாலுறவுத் தேவைகளையும் ஒருவர் மூலம் ஒருவர் நிறைவு செய்து கொள்வது. இது தொடர்பாக, கணவன் தன் மனைவியுடன் உடலுறவு கொள்ளும் பொழுது அவளுடைய உரிமையை வழங்குவது அதி முக்கியத்துவம்கொண்ட விஷயம். பொதுவாக, பெண்கள் உடலுறவில் பரவசநிலை அடைவதற்குக் கூடுதல் நேரம் எடுக்கும் என்பதால், அவள் நிறைவடைந்த பின்பே அவர் தம்மை நிறைவுபடுத்திக்கொள்ள வேண்டும்.

தம் மனைவி முழுமையாகத் திருப்திபெற்று பாலியல் நிறைவை அடையும்வரை, கணவர் விந்து வெளிப்படாமல் தாங்கிக்கொள்ள வேண்டும். அவளுக்குமுன் அவருக்கு பரவசநிலை ஏற்பட்டுவிட்டால், அவர் தன் ஆணுறுப்பை வெளியே உருவக்கூடாது. அவள் புணர்ச்சிப் பரவசம் பெற்று உச்சநிலை அடையும்வரை காத்திருக்கவேண்டும். இது மணவாழ்வின் நலவாழ்வுக்குத் திட்டவட்டமான அத்தியாவசிய மானது. இதற்கு உரிய முக்கியத்துவம் அளிக்கத் தவறுவதால், மனைவி எரிச்சலுற்று தன் கணவன் மீது மனக்கசப்பும் கடும் வெறுப்பும் கொள்ளக்கூடும். இது தம்பதியருக்கு இடையில் சண்டை சச்சரவும் வாக்குவாதமும் விளைவிக்கலாம்; சில சந்தர்ப்பங்களில், மணவிலக் கிற்குக்கூட இட்டுச்செல்லலாம். தன்னுடைய திருப்தியில் மட்டும் அக்கறையாக இருக்கும் கணவன், ஒரு சுயநலக்காரன். அவன் தன் நடத்தைகளை மாற்றிக்கொண்டு, தன் மனைவியின் தேவைகளுக்கு உரிய முக்கியத்துவம் அளிப்பது அவசியம்.

இமாம் இப்னு குதாமா கூறுகிறார்: ‘கணவன் தன் மனைவியுடன் புணர்வதற்கு முன்விளையாட்டில் ஈடுபடுவது விரும்பத்தக்கது *(முஸ்தஹப்)*. இதன் மூலம், அவளுடைய பாலியல் ஆசை எழும்பி, உடலுறவால் அவர் அனுபவிக்கும் இன்பத்தை போன்றே அவளும் அனுபவிக்கவியலும்... அவளுக்குமுன் அவர் பரவசநிலை அடைந்து விட்டால், அவள் பரவசநிலை அடைவதற்குமுன் அவர் தன் ஆணு றுப்பை வெளியே உருவுவது விரும்பத்தகாதது *(மக்ரூஹ்)*. ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கிறார்: ‘‘ஒருவர் தம் மனைவியுடன் உடலுறவுகொள்ளும் பொழுது அவளைத் திருப்திப்படுத்த முனைய வேண்டும். பிறகு அவர் தன் தேவையை நிறைவுசெய்து கொண்டால், அவள் தன் தேவையை நிறைவுசெய்து கொள்ளுமுன் அவர் (அதை வெளியே உருவ) அவசரப் படக் கூடாது.’’ (இதை அபூ யஃலா அல்-மவ்ஸிலி தன் *முஸ்னதில்* **4201** பதிவுசெய்துள்ளார்). மேலுமொரு காரணம், அதில் (முதிர்வதற்குமுன் வெளியே உருவுவதில்) அவளுக்கு பாதிப்பு இருக்கிறது; மேலும், தன் பாலியல் தேவையை நிறைவுசெய்துகொள்வதைத் தடுக்கிறது.’ *(அல்-முக்னி **8:136**)*

இமாம் கஸ்ஸாலி தம் *இஹ்யா உலூம் அல்-தீனிலும்*, அதன் விரிவுரை யாளரான அல்லாமா முர்தஸா அஸ்-ஸாபிதி தம் விரிவுரை நூலான *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீனிலும்* இதுபற்றி விளக்குகின்றனர். கணவன் பரவசநிலை அடைந்தபின் தன் மனைவி பரவசநிலை அடைவதற்குக் காத்திருக்கவேண்டும். ஏனெனில், சில சமயங்களில் அவள் புணர்ச்சிப் பரவசம் அடைய தாமதம் ஏற்படலாம். அந்த

நிலையில் கணவர் அதை வெளியே உருவுவது அவளைப் பாதிக்கும். மேலும், அவர்மீது அவளுக்குள் வெறுப்புணர்வு ஏற்படக் கூடும். எனினும், அவளுக்குப் புணர்ச்சிப் பரவசம் ஏற்பட்டுவிட்டது என அவர் அறிந்தால், அவர் காத்திருக்கத் தேவையில்லை.

அவர்கள் மேலும் இதுபற்றிக் கூறுகின்றனர். மனைவிக்கு முன்பு கணவன் பரவசநிலையை அடைவது, அவள் மனதில் வெறுப்பையும் விருப்பமின்மையையும் ஏற்படுத்தும். இருவரும் ஒரேசமயத்தில் பரவசநிலையை அடைவதே அவளுக்கு மிக சுகமாகவும் திருப்தி அளிப்பதாகவும் இருக்கும். இதன் மூலம், புணர்ச்சிப் பரவசம் அடைந்துகொள்வதில் அவளுக்கு வெட்கம் ஏற்படாது. ஏனெனில், அப்போது கணவனும் தன் பாலியல் பரவசநிலையை அடைவதில் மும்முரமாக ஈடுபட்டிருப்பான். எனினும், ஒரேசமயத்தில் உச்ச நிலையை அடைவது அரிது. மேலும், மனைவி தன் கணவனுக்கு முன்பு புணர்ச்சிப் பரவசம் அடைவதில் பிரச்சினை இல்லை. ஏனெனில், இந்த சூழலில் அவள் எவ்விதப் பாதிப்பையும் உணரமாட்டாள். வெறுமனே களைப்பாகவும், தன் கணவனின் உடல் பளுவையும் மட்டுமே அவள் உணர்வாள். இதை அவள் எளிதாக சகித்துக்கொள்ள முடியும். மாறாக, அவள் புணர்ச்சிப் பரவசம் அடையுமுன் கணவன் அதை வெளியே உருவிக்கொண்டால், அது அவளுக்கு பாதிப்பும் கேடும் ஏற்படுத்தும். *(காண்க: இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன் **6:176**)*

இதன் அடிப்படையில், தம்பதியர் இருவரும் முயற்சியெடுத்து ஒரே சமயத்தில் பாலியல் பரவசநிலையை அடைவது மிகச் சிறந்தது. அது இருவருக்கும் மிகத் திருப்தியளிப்பதாக இருக்கும். எனினும் இது இயலாவிட்டால், மனைவி புணர்ச்சிப் பரவசம் அடையும்வரை கணவன் காத்திருந்து, பின்னர் விந்து வெளிப்படுத்த வேண்டும். அவள் புணர்ச்சிப் பரவசம் அடையுமுன் அவர் விந்து வெளிப்படாமல் கட்டுப்படுத்திக்கொள்ள இயன்ற முயற்சியை எடுக்கவேண்டும். எனினும், கட்டுப்படுத்த இயலாமல் அவளுக்குமுன் அவர் விந்து வெளிப்படுத்திவிட்டால், அவள் பாலியல் திருப்திபெறும்வரை அவர் தன் ஆணுறுப்பை வெளியில் உருவக்கூடாது.

முன்கூட்டியே விந்து வெளிப்பட்டுவிடுவது, ஆண்கள் எதிர் கொள்ளும் ஒரு பிரச்சினை. அதாவது, வெகுவிரைவாக உச்சநிலையை அடைந்துவிடுதல். சிலர் தங்கள் மனைவியின் பெண்ணுறுப்பில் ஆணுறுப்பை நுழைத்ததுமே விந்து வெளிப்பட்டுவிடும். சிலருக்கு, அதற்கு முன்பே - முன்விளையாட்டின் போதே வெளிப்பட்டுவிடும். இது தம்பதியர் இருவருக்கும் சங்கடமாகவும் பிரச்சினையாகவும்

அமைகிற ஒரு விஷயம். ஏனெனில், பரவசநிலையை அடைவதற்குமுன் தாங்கள் நீண்ட நேரம் நெருக்கமாகக் குலாவவேண்டும் எனும் விருப்பம் நிறைவடையாது போகும்.

விந்து வெளியாவதை தாமதிக்க, கணவர் பின்வரும் விஷயங்களைச் செய்யவேண்டும்:

அ. முன்விளையாட்டின் போது, தன் பாலுறுப்பு பிடித்து நீவப் படவோ பிசையப்படவோ செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். தன் பாலுறுப்புக்கும் தன் மனைவியின் உடலுக்கும் எந்தளவிற்குக் குறைவான தொடுதல் உள்ளதோ, அந்தளவிற்கு அவர் தன்னை கட்டுப்படுத்திக்கொள்வது எளிது.

ஆ. உடலுறவின்போது அவருடைய கவனத்தை வேறொன்றின் பக்கம் திருப்பிவிடுவது மூலம் அவரால் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலும்.

இ. புணரும்போது தம்பதியர் இருவரும் அளவுக்கதிகமான இயக்கத்தை தவிர்க்கவேண்டும். ஏனெனில், அளவுக்கதிகமான இயக்கத்தில் அவர் விரைவில் விந்து வெளிப்படுத்திவிடுவார். (காண்க: *உசூல் அல்-முஆஷரா அல்-ஸவ்ஜிய்யா* ப.71-72)

ஈ. அல்லாமா முர்தஸா அஸ்-ஸாபிதி, *இஹ்யாவுக்கான தம் விரிவுரை*யில் இதுபற்றி கூறுகிறார். முன்கூட்டியே விந்து வெளிப்பட்டுவிடும் பிரச்சினையால் பாதிக்கப்பட்டவருக்கான மிக நலன்தரக் கூடியதொரு மருந்து, அவர் முன்விளையாட்டுக்கு முன்பு புணர்வதைத் தவிர்க்க வேண்டும். அவர் தம் மனைவிக்குக் கிளர்ச்சியூட்டுவதற்காக அவளுடன் விளையாடவும் அவளை முத்தமிடவும் அவளின் மார்பகங்களைப் பிடித்து பிசையவும் அவளை கட்டித்தழுவவும் இதுபோன்ற பிறவற்றிலும் ஈடுபடவேண்டும். பின்னர், அவளுடைய நிறம் மாறி கண்கள் (ஆசையால்) சிவந்திருப்பதைக் கண்ட பின்புதான், அவள் ஆயத்தமாகி தன் மீது மோகம் கொண்டுள்ளாள் என உணர்ந்த பின்புதான், அவர் புணர்ச்சியைத் தொடங்கவேண்டும். (காண்க. *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* 6:176)

### 9. விந்து வெளியாகும்போது பிரார்த்தித்தல் (துஆ)

விந்து வெளியாகும்போது தம்பதியர் இருவரும் பின்வரும் துஆவை (பிரார்த்தித்தலை) தங்கள் மனதுக்குள் ஓதிக்கொள்வது விரும்பத்தக்கது. இது அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊதின் வழக்கமாக இருந்தது.

اَللّٰهُمَّ لَا تَجْعَلْ لِلشَّيْطَانِ فِيمَا رَزَقْتَنَا نَصِيبًا

ஒலிபெயர்ப்பு:
*அல்லாஹும்ம லா தஜ்அல் லிஷ்-ஷைதானி ஃபீமா ரஸக்தனா நசீபன்.*

மொழிபெயர்ப்பு
இறைவா! நீ எங்களுக்கு அருளியதில் (குழந்தை) ஷைத்தானுக்கு எந்தவொரு பங்கும் அளித்துவிடாதே (இந்த அறிவிப்பு இடம் பெற்றுள்ள நூல், இமாம் இப்னு அபீ ஷைபாவின் *அல்-முசன்னஃப் ஃபி அல்-அஹாதீஸ் வ அல்-ஆஸார்* **3:402**).

ஷெய்கு முஃப்தி தகீ உஸ்மானி தம்முடைய நூலான *ஒளிவீசும் பிரார்த்தனைகளில்* இந்த துஆவை பதிவுசெய்துவிட்டு இவ்வாறு கூறுகிறார்: 'இந்த இரு பிரார்த்தனைகளில் இருந்து (அதாவது, உடலுறவு தொடங்குமுன் ஓதும் துஆ மற்றும் விந்து வெளியாகும் போது ஓதும் துஆ), ஒருவர் தம் இச்சைகளைத் தீர்த்துக்கொள்வதில் மும்முரமாகவும், மற்றும் வெளியில் சொல்வதற்கே வெட்கமானதொரு விஷயத்தில் ஈடுபட்டுக்கொண்டும் இருக்கும் சரியான அதே வேளையில், அல்லாஹ் வுடனான தொடர்பை மனத்தில் பிரதானமாக வைத்துக்கொள்ளு மாறும் அவன்முன் பிரார்த்திப்பதற்குத் தயங்கவேண்டாம் என்றும் கற்றுத்தரப்படுகிறது என்பது விளங்குகிறது. எனவே உடற்புணர்ச்சியால் கிடைக்கும் இன்பமான ஒரு பாலியல் செயல், வணக்க வழிபாட்டுச் செயலாக மாற்றப்படுகிறது.' (*ஒளிவீசும் பிரார்த்தனைகள்* ப.65)

# 8

# உடலுறவில் பிற வகைகள்

முந்தைய பக்கங்களில், உடலுறவு தொடர்பான – தனித்திருத்தல் முதல் விந்து வெளியாதல் வரையிலான – விஷயங்களை விரிவாகப் பார்த்தோம். மேலும், சில குறிப்பிட்ட உடலுறவு வகைகள் பற்றியும் அவற்றைக் குறித்த இஸ்லாமியக் கண்ணோட்டத்தையும் இந்த இயலில் பார்க்கலாம்.

## *1. ஆசனவாய் (குதவழி) உறவு*

முன்பு, உடலுறவு நிலைகள் குறித்த பகுதியில் இதுபற்றி நாம் விவாதித் திருக்கிறோம். உடலுறவுக்கு தம்பதியர் தங்களுக்கு விருப்பமான எந்த நிலையை வேண்டுமானாலும் தெரிவுசெய்து கொள்ளலாம். ஆனால், ஒரு நிபந்தனை. அது பெண்குறி வாயிலான புணர்ச்சியாக இருக்க வேண்டும்.

ஆசனவாய் உறவைப் பொறுத்தவரை, அது திட்டவட்டமாக இஸ்லாத்தில் தடைசெய்யப்பட்டுள்ளது. மேலும், கருத்தொற்றுமை யின்படி அது ஒரு பெரும்பாவமுமாகும். இதை நிறுவுவுவதற்குத் தெளிவான, வெளிப்படையான புனிதவுரை ஆதாரங்கள் உள்ளன. ஆசனவாய் உறவில் படுபாதகமான ஆன்மிகக் கேடுகளும், நிறுவப் பட்ட உடல் மற்றும் உளரீதியான கேடுகளும் உள்ளன. அது ஓர் இயற்கைக்கு மாற்றமான அருவருப்பான செயல். அதற்கு, முஸ்லிமின் பாலியல் வாழ்வில் அறவே இடம் கிடையாது. தங்கள் இயற்கைநிலை புரண்டு, பரிசுத்தமானதை விரும்புவதற்குப் பதிலாக அசுத்தமானதை விரும்புபவர்களே இதில் ஈடுபடுவார்கள். ஆசனவாய் உறவு பாவ மானதும் கேடானதுமாகும் என்பது மட்டுமின்றி, அது மனைவியின் உரிமையையும் மீறுகிறது. அவள் தன் கணவனுடன் பெண்குறி வாயிலாக உடலுறவுகொண்டு சந்ததி பெற்றுக்கொள்ளும் உரிமையை மறுக்கிறது.

அல்லாஹ் கூறுகிறான்:

وَيَسْأَلُونَكَ عَنِ الْمَحِيضِ قُلْ هُوَ أَذًى فَاعْتَزِلُوا النِّسَاءَ فِي الْمَحِيضِ وَلَا تَقْرَبُوهُنَّ حَتَّى يَطْهُرْنَ فَإِذَا تَطَهَّرْنَ فَأْتُوهُنَّ مِنْ حَيْثُ أَمَرَكُمُ اللَّهُ إِنَّ اللَّهَ يُحِبُّ التَّوَّابِينَ وَيُحِبُّ الْمُتَطَهِّرِينَ نِسَاؤُكُمْ حَرْثٌ لَكُمْ فَأْتُوا حَرْثَكُمْ أَنَّى شِئْتُمْ وَقَدِّمُوا لِأَنْفُسِكُمْ وَاتَّقُوا اللَّهَ وَاعْلَمُوا أَنَّكُمْ مُلَاقُوهُ وَبَشِّرِ الْمُؤْمِنِينَ

*மாதவிடாய் குறித்து அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். கூறுங்கள்: அது அசுத்தமானது. எனவே, மாதவிடாயின் போது பெண்களிடமிருந்து விலகி யிருங்கள். அவர்கள் தூய்மையடையும் வரை அவர்களை அணுகாதீர்கள். எனினும், அவர்கள் தூய்மையடைந்து விட்டால், அல்லாஹ் கட்டளையிட்ட புறங்களிலிருந்து அவர்களை அணுகுங்கள். நிச்சயமாக அல்லாஹ், பாவமீட்சி செய்பவர்களை நேசிக்கிறான்; மற்றும், பரிசுத்தமானவர்களையும் நேசிக்கிறான். உங்கள் மனைவிகள் உங்களுக்கு விளைநிலங்களாவர். எனவே, நீங்கள் விரும்பிய புறங்களிலிருந்து உங்கள் விளைநிலங்களை அணுகுங்கள். எனினும், முன்னதாக உங்களுக்கென சில நற்செயல்கள் செய்துகொள்ளுங்கள்; மற்றும், அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். மேலும், நீங்கள் அவனை சந்திக்கப் போகிறீர்கள் என்பதை அறிந்துகொள்ளுங்கள். மேலும், இறை நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி வழங்குங்கள். (குர்ஆன் 2:222-223)*

மேற்கூறிய வசனங்களில், மாதவிடாயின் போது புணர்ச்சி தடை செய்யப்படுவதற்கான காரணமாக அல்லாஹ், அசுத்தத்தைக் குறிப்பிடு கிறான். பெண், இரத்தத்தின் அசுத்தத்திலிருந்து தூய்மையடைந்து விட்டால், அவளுடன் புணர்வதை அல்லாஹ் அனுமதிக்கிறான். எனினும், அது 'அல்லாஹ் கட்டளையிட்ட புறங்களிலிருந்து' – அதாவது, பெண்குறி வாயிலாக அமையவேண்டும். இது, இரண்டாவது வசனத்தில் வரும் *ஹர்ஸ்* எனும் சொல்லின் மூலம் மேலும் தெளிவுபடுத்தப் படுகிறது. மாதவிடாயின் போது, தற்காலிக அசுத்தத்தால், பெண்குறி வழி புணர்வது தடைசெய்யப்படுகிறது எனில், ஆசனவாய் உறவு ஐயமின்றி விலக்கப்பட்டதே. ஏனெனில், ஆசனவாய் எப்பொழுதுமே அசுத்தத்தால் மாசு அடைந்திருக்கும்.

மேலும், *ஹர்ஸ்* (விளைநிலங்கள்) எனும் சொல்லாட்சியின் மூலம், ஒருவர் தம் மனைவியுடன் பெண்குறி வாயிலாக மட்டுமே உடலுறவு கொள்ள அனுமதியுண்டு எனச் சுட்டப்படுகிறது. ஏனெனில், ,வித்து களை விதைப்பதற்கு இது மட்டுமே வழி; ஆசனவாய் அல்ல. அது அசுத்தமானதொரு பகுதி. (*அல்-திப் அல்-நபவி* ப.187)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) பல ஹதீஸ்களில், ஆசனவாய் உறவை அழுத்தந்திருத்தமாகத் தடைசெய்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்:

لَا يَنْظُرُ اللَّهُ إِلَى رَجُلٍ أَتَى رَجُلًا أَوِ امْرَأَةً فِي الدُّبُرِ

இன்னொரு ஆணையோ பெண்ணையோ ஆசனவாயில் புணரும் மனிதரை அல்லாஹ் (கருணையுடன்) பார்க்க(க்கூட) மாட்டான். *(சுனன் அல்-திர்மிதி **1165**)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

مَلْعُونٌ مَنْ أَتَى امْرَأَتَهُ فِي دُبُرِهَا

அவளுடைய ஆசனவாயில் புணரும் மனிதர், சபிக்கப்பட்டவராவார். *(சுனன் அபூ தாவூத் **2155** மற்றும் பிறர்)*

'சபிக்கப்பட்டவர்' *(மல்ஊன்)* என்பதன் பொருள், அவர் இறைக் கருணையிலிருந்து தூரமாகிவிடுகிறார் மற்றும் இறை வெறுப்புக்கு ஆளாகிறார் என்பதாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சில விஷயங்களைச் சபித்தார்கள். அதன் மூலம் நாம் எச்சரிக்கையுடன் இருந்து அவற்றைத் தவிர்க்கவேண்டும் என்பதற்காக.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக குஸைமா இப்னு ஸாபித் (ரழி) அறிவிக்கிறார்:

إِنَّ اللَّهَ لَا يَسْتَحْيِي مِنَ الْحَقِّ - ثَلَاثَ مَرَّاتٍ - لَا تَأْتُوا النِّسَاءَ فِي أَدْبَارِهِنَّ

உண்மை விஷயத்தில் அல்லாஹ் வெட்கப்படுவதில்லை (என மும்முறை கூறினார்கள்). பெண்களை அவர்களின் ஆசனவாயின் வழியாக அணுகாதீர்கள். *(சுன்ன் இப்னு மாஜா **1924**, முஸ்னத் அஹ்மது மற்றும் பிற நூல்கள்)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூ ஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

لَا يَنْظُرُ اللَّهُ عَزَّ وَجَلَّ إِلَى رَجُلٍ جَامَعَ امْرَأَتَهُ فِي دُبُرِهَا

தன் மனைவியை ஆசனவாய் வாயிலாக அணுகும் மனிதரை அல்லாஹ் (கருணையுடன்) பார்ப்பதில்லை. *(சுனன் இப்னு மாஜா **1923**, முஸ்னத் அஹ்மது மற்றும் பிற நூல்கள்)*

இதுபோன்ற மேலும் பல ஆதாரங்களிலிருந்து, ஒருவர் தம் மனைவியுடன் ஆசனவாய் மூலமாக உறவுகொள்வதற்கு அனுமதியில்லை

என்பது தெளிவாகிறது. இது மட்டுமின்றி, ஆசனவாய் உறவு தேவை யற்ற வலி ஏற்படுத்துகிறது. மேலும், இன்றைய ஒழுக்கங்கெட்ட சமுதாயத்தில் பரவியுள்ள பல நோய்களின் ஊற்றாக இருக்கிறது.

எனவே, கணவன் தன் மனைவியின் ஆசனவாயில் புணர்தல் விலக்கப்பட்ட, பாவமான செயலாகும். எனினும், இயல்பு நிலையில், ஆசனவாயின் சுற்றுப் புறத்தையும் வெளிப்பகுதியையும் தொடுவதற்கு அனுமதியுண்டு. மேலும், அவளுடைய பிட்டத்திற்கு இடையில் அல்லது கச்சைப்பகுதியில் ஆண்குறியை வைத்துத் தேய்ப்பதற்கும்கூட அனுமதி யுண்டு. ஒரே நிபந்தனை, அவளின் ஆசனவாயினுள் புணரக்கூடாது; மேலும் பின் பாகங்களில் அசுத்தமாக இருக்கக்கூடாது. கணவன் தன் மனைவி உடலின் எந்தப் பகுதியை வேண்டுமானாலும் தொட்டுப் பிடித்துப் பிசைய, நீவ அனுமதியுண்டு. இதில் ஆசனவாயின் புறப்பகுதி யும் அடங்கும். எனினும், அவர் ஆசனவாயினுள் புணர்வதை உறுதி யாகத் தவிர்க்க இயன்றாலே இதற்கு அனுமதியுண்டு. இல்லாவிட்டால், அவர் அந்தப் பகுதியிலிருந்து முற்றிலும் தவிர்ந்திருப்பது அவசியம்.

### 2. வாய்வழி உறவு

ஆபாசப்படங்களின் பரவலால் வாய்வழி உறவுப் பழக்கம் அதிகரித் துள்ளது. இன்று பொதுவாகப் பல தம்பதியர்கள் இதைப் பின்பற்று கின்றனர். எனவே, வாய்வழி உறவு குறித்த இஸ்லாமியக் கண்ணோட்டம் பற்றி முஸ்லிம்கள் அடிக்கடி கேட்கின்றனர். துரதிர்ஷ்டவசமாக, சிலர் இதுபற்றிக் கலந்துரையாடுவதிலிருந்து வெட்கப்பட்டு முற்றிலும் ஒதுங்கிவிடுகின்றனர். வேறுசிலர், இது குறித்த எந்தவொரு கலந்துரை யாடலும் அத்துமீறிய செயலெனக் கருதுகின்றனர். இந்த இரு அணுகுதல்களும் சரியானவையல்ல. நம் பாலியல் வாழ்வு, இஸ்லாமிய போதனைகளுக்கு ஒத்திசைவாக இருப்பதை உறுதிசெய்வதற்கு, வாய்வழி உறவு குறித்த இஸ்லாமியக் கண்ணோட்டம் பற்றி விரிவாக அலசுவது முக்கியம்.

வாய்வழி உறவு என்பது, ஒருவர் மற்றவரின் பிறப்புறுப்பை கிளர்ச்சியூட்டுவதற்குத் தன் வாயையோ நாவையோ பயன்படுத்து வதாகும். ஆணுறுப்பை வாய்வழி கிளர்ச்சியூட்டுவதற்கு ஆங்கிலத்தில் *ஃபெல்லாஷியோ* (fellatio) என்றும் பெண்ணுறுப்பை வாய்வழியாக கிளர்ச்சியூட்டுவதற்கு *கன்னிலிங்சஸ்* (cunnilingus) என்றும் அழைப்பர். வாய்வழி உறவு எனும் சொல், விரிவான செயல்வகைகளை உள்ளடக்கி யுள்ளது. அதில், வெறுமனே பிறப்புறுப்பை முத்தமிடுவது முதல் அதை வாய்க்குள் எடுத்து, பாலுறவுத் திரவங்களை உட்கொள்ளும்வரை பல செயல்கள் அடங்கும். எனவே, இந்தச் சொல் குறிப்பிட்ட

சந்தர்ப்பத்தில் எதைக் குறிக்கின்றது என்பதைப் பொறுத்து இஸ்லாமியச் சட்டத்தீர்ப்பு அமையும்.

### அ. பாலுறுப்பு திரவங்களை உட்கொள்ளலாமா?

வாய்வழி உறவு மூலம், ஆண்குறியை மனைவி தன் வாயில் வைத்து விந்து *(மனி)*, விந்து வெளியாவதற்கு முன்வரும் உயவுக்கான திரவம் *(மதி)* போன்ற தூய்மையற்ற அல்லது அசுத்தமான திரவங்களை உட்கொள்ளுமளவிற்குச் செல்வதும்; அதேபோல், பெண்குறி மீது கணவன் தன் வாயை வைத்து அவளுக்கு வெளியாகும் திரவம் அல்லது போக்குகளை உட்கொள்ளும் அளவிற்குச் செல்வதும் பாவமான செயல். இது நடந்துவிடும் எனும் அச்சம் இருப்பின் – அது சாத்திய அளவிலே இருந்தாலும்கூட, அதற்கு அனுமதியில்லை.

அசுத்தமான, தூய்மையற்ற பொருள்களைத் தெரிந்தே உட்கொள்வதோ வாயால் எடுப்பதோ விலக்கப்பட்டுள்ளது. இதில் ஆண்-பெண் பாலுறுப்புகளிலிருந்து வெளிப்படும் சிறுநீர், விந்து வெளியாவதற்கு முன்வரும் உயவுக்கான திரவம், விந்து போன்ற அனைத்து விதமான திரவங்களும் சுரப்புகளும் அடங்கும். விந்து தூய்மையற்றதல்ல என சில அறிஞர்கள் – உதாரணத்திற்கு ஷாஃபி சிந்தனாவழியினர்; இதற்கு மாற்றமான கருத்தை ஹனஃபி சிந்தனாவழியினர் கொண்டுள்ளனர் – கருதுகின்ற போதிலும், அதை வாய்வழி உட்கொள்வது தடைசெய்யப்பட்டதே எனக் கருதுகின்றனர். எனவே, மனைவியின் அல்லது கணவனின் பாலுறுப்பு திரவங்கள் எதுவானாலும் அவற்றை விழுங்குவதும் உட்கொள்வதும் தடைசெய்யப்பட்டுள்ளன.

ஷாஃபி சிந்தனாவழியைச் சார்ந்த இமாம் நவவி தம் *அல்-மஜ்மூஃ* எனும் நூலில் இவ்வாறு கூறுகிறார்: 'சரியான, நன்கறிந்த கருத்து என்னவெனில், விந்துவை உட்கொள்வது தடைசெய்யப்பட்டுள்ளது. ஏனெனில், அது அசுத்தமானது *(முஸ்தஃக்பத்)*, (எனினும், அது தூய்மையற்றதல்ல). அல்லாஹுத் தஆலா கூறுகிறான்: "...அவன் (அல்லாஹ்) அவர்களுக்கு அசுத்தமானவற்றை *(ஃகபாயிஸ்)* விலக்கியுள்ளான்" (குர்ஆன் 7:157).' *(அல்-மஜ்மூஃ ஷரஹ் அல்-முஹத்தப்* 2:397)

### ஆ. பாலுறுப்புகளை சுவைக்கலாமா?

வாய்வழி உறவில் ஈடுபடும்பொழுது எச்சரிக்கையுடன், வாய்க்குள் பாலுறுப்புத் திரவங்கள் புகாமல் தவிர்த்துக்கொண்டால், அதற்கு அனுமதியுண்டு. உதாரணமாக, தம்பதியர் ஒருவரையொருவர் பாலுறுப்புகளை மென்மையாக முத்தமிடுவது மட்டுமே செய்கின்றனர்; அதில் பாலுறுப்புத் திரவங்களை உட்கொள்ளும் அச்சமோ சாத்தியமோ

இல்லை எனும்போது, அதற்கு அனுமதியுண்டு. எனினும், இது விரும்பத் தகாதது. உடலின் பிற பாகங்களை முத்தமிடுவது போல, ஒரு முன் விளையாட்டாக அதைக் கருதலாம். எனவே, அதற்கு அனுமதியுண்டு. எனினும், அது விரும்பத்தகாதது. ஏனெனில், ஒருவர் தன் வாயை தன் துணைவரின் பிறப்புறுப்பில் வைப்பது மார்க்க ஒழுங்குக்கு உகந்ததல்ல.

புகழ்பெற்ற ஹனஃபி ஃபிக்ஹு குறிப்பு நூலான, *அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* இவ்வாறு கூறுகிறது: 'ஒரு மனிதர் தம் மனைவியின் வாயில் தன் ஆண்குறியை வைப்பது விரும்பத்தகாதது *(மக்ரூஹ்)* எனக் கூறப்படுகிறது. சிலர், இது விரும்பத்தகாதது அல்ல எனக் கருதுகின்றனர்.' (*அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா* 5:372)

முதன்மையான ஹனஃபி பிக்ஹு குறிப்பு நூல்களுள் ஒன்றின் இந்தத் தெளிவான வாசகத்திலிருந்து, ஒருவர் தம் மனைவியின் வாய்க்குள் தம் ஆண்குறியை வைப்பதன் அனுமதி பற்றி அறிஞர் களிடையே கருத்துவேறுபாடு உள்ளது என்பது புலப்படுகிறது. சில அறிஞர்களின் கருத்துப்படி, அது விரும்பத்தகாதது. பிறர் அதை அனுமதிக்கின்றனர். எனினும், அதை அனுமதிப்பவர்களும் சரி, அதை விரும்பத்தகாதது எனக் கருதுபவர்களும் சரி – இருசாராருமே ஏற்கனவே கூறப்பட்டது போல, பாலுறுப்பு திரவங்கள் துணைவரின் வாய்க்குள் போகக்கூடாது என நிபந்தனை விதிக்கின்றனர். பொதுவாக, இதைத் தவிர்ப்பது கடினம். இதனாலும், இப்பழக்கம் ஒரு முஸ்லிமின் சரியான நடத்தைக்கு பொதுவாகப் புறம்பானது என்பதாலும், சமகால அறிஞர்களில் பலர் இப்பழக்கத்தை – பாலுறுப்புத் திரவங்கள் புகுவதைத் தவிர்த்தாலும் – விரும்பத்தகாதது எனக் கருதுகின்றனர்.

வாய் ஒரு மனித உடலின் உன்னதமான உறுப்பு. குர்ஆனை ஓதுவதற்கும், அல்லாஹ்வை நினைவுகூர்வதற்கும் *(திக்ரு)*, அல்லாஹ்வின் அருட்தூதர் மேல் முகமன் *(சலவாத்)* அனுப்புவதற்குமான ஓர் ஊடகம். ஆகவே, துணைவரின் பிறப்புறுப்பை கிளர்ச்சியூட்டுவதற்காக அதைப் பயன்படுத்துவது ஒழுங்குமீறிய செயல். அதுவும், வாய்க்குள் அசுத்தம் நுழையுமானால் அது விலக்கப்பட்ட செயல்.

இறுதியாக, வாய்வழி உறவை ஒருவரின் துணைவர் கேட்டு நிர்ப்பந்தித்தாலும் அதற்கு இசைவது கட்டாயமில்லை. பாலுறுப்புத் திரவங்கள் வாயில் படாமல் பார்த்துக்கொண்டாலும் இது பொருந்தும். மனைவி தன்னை உடலுறவுக்காக விட்டுக்கொடுப்பதற்கு மட்டுமே கடமைப்பட்டிருக்கிறாள். மறுபுறம், கணவன் அவளின் கற்பு ஒழுக்கம் காக்கும் அளவுக்கு அவளுடன் உடலுறவுகொள்வதற்கே கடமைப் பட்டுள்ளான்.

### 3. தம்பதியினரிடையே தொலைபேசிப் பாலுறவு

‘தொலைபேசிப் பாலுறவு’ என்பது, இருவர் ஒருவரையொருவர் பாலியல்ரீதியாகத் தூண்டுவதற்குத் தொலைபேசி மூலம் உரையாடுவது. இதன் நோக்கமே, தற்புணர்ச்சி மூலம் துணைவர் புணர்ச்சிப் பரவசம் அடைவதற்குத் துணைபுரிவது. ‘தொலைபேசிப் பாலுறவு’ என்பது பெரும்பாலும் மேற்கோள் குறிகளுக்கிடையிலேயே எழுதப்படு கின்றன. ஏனெனில், பொதுவாக உடலுறவு என்பதில் குறைந்தபட்சம் ஒருவரையொருவர் தொடுதல் இருக்கவேண்டும். ஆனால், இதில் இருப்பதில்லை.

தம்பதியர் தொலைபேசிப் பாலுறவில் ஈடுபடுவது குறித்த இஸ்லாமியச் சட்டத்தீர்ப்பு விஷயத்தில், இரு சூழ்நிலைகள் உள்ளன:

#### அ. தற்புணர்ச்சி நோக்கத்துடன்

தொலைபேசி வாயிலாக, ஒருவர் தன் துணைவருக்குக் கிளர்ச்சியூட்டி, அவரே தற்புணர்ச்சி செய்து புணர்ச்சிப் பரவசம் அடைவதற்குத் துணைபுரிவதாய் இருந்தால், அதற்கு அனுமதியில்லை. தற்புணர்ச்சி தடைசெய்யப்பட்டது; தனிமனிதர்களுக்கும் சமூகங்களுக்கும் பல கேடுகளை விளைவிக்கக்கூடியது. எனவே, தொலைபேசி உரையாடலின் போது தற்புணர்ச்சி செய்து தாமே விளையாடிக்கொள்வது தம்பதியர் இருவருக்கும் அனுமதிக்கப்படாதது. அதை, பரஸ்பர தற்புணர்ச்சி செய்து விடல் என்றும் அழைக்கவியலாது. ஏனெனில், இதில் துணைவரின் உடலுறுப்பு மூலம் திருப்தி பெறுவதில்லை.

#### ஆ. நெருக்கவுணர்வுக்காக

தொலைபேசி உரையாடலின் போது, தற்புணர்ச்சி செய்துகொள்வது நோக்கமல்ல; வெறுமனே தம்பதியர் நெருக்கவுணர்வுக்காக மட்டுமே குலாவுகின்றனர் என்றால், அதற்கு அனுமதியுண்டு. இதுபோன்ற நெருக்கமான உரையாடலில் தவறேதுமில்லை. தம்பதியர் ஒரே இடத்தில் இருந்தாலும் தொலைவில் இருந்தாலும் இது ஆகுமானதே. ஒரே நிபந்தனை, தற்புணர்ச்சி அல்லது பிற விலக்கப்பட்ட செயல்கள் நடந்துவிடும் அச்சம் இருக்கக்கூடாது. எனினும், தற்புணர்ச்சியைத் தவிர்ந்தும்கூட, துணைவருடன் நெருக்கமாகப் பேசுவதாலேயே புணர்ச்சிப் பரவசம் ஏற்பட்டால் அது விலக்கப்பட்ட செயல்களின் வட்டத்துக்குள் வராது என்றே தோன்றுகிறது. இங்கும் அதே நிபந்தனை பொருந்தும்: தற்புணர்ச்சியோ பரவச நிலையோ நோக்கமாக இருத்தல் கூடாது.

# 9

# புணர்ச்சிக்குப்பின்

பாலுறவு குறித்த இஸ்லாமிய போதனைகள், தம்பதியரின் புணர்ச்சியோடு முடிந்துவிடுவதில்லை. அதையும் தாண்டிச் செல்கிறது. 'புணர்ச்சிக்குப்பின்' அல்லது 'பின்விளையாட்டு' என அழைக்கப்படக் கூடிய புணர்ச்சிக்குப் பிந்தைய நிலை, முன்விளையாட்டு மற்றும் புணர்ச்சி போன்றே முக்கியமானது. இது விஷயத்தில், பல முக்கிய விதிகளையும் ஒழுங்குகளையும் மனத்தில் நிறுத்துவது அவசியம்.

## 1. பாசத்துடன் இருத்தல்

உடலுறவில் உச்சநிலை (பரவசநிலை) அடைந்தபின், தம்பதியர் இருவரும் அதே நிலையில் சிறிது நேரம் இருந்துவிட்டு, பின்னர் பிரிய வேண்டும். தம்பதியர், உடலுறவின் போது மட்டுமல்லாமல் எல்லா வேளைகளிலும் ஒருவருக்கொருவர் தாராளமாகவும் அன்போடும் பாசத்தோடும் இருக்குமாறு இஸ்லாம் போதிக்கிறது. புணர்ச்சிக்குப்பின் நுண்ணுணர்வும் மறுவினையும் இல்லாமல் கணவன் இருந்தால், அவன் தன்னுடைய இச்சை தணிப்புக்கு மட்டும்தான் தன்மீது ஆர்வம் கொண்டிருந்தான் என்பதுபோல மனைவிக்குத் தோன்றும். எனவே, புணர்ச்சிக்குப் பின்னரும்கூட, அன்பையும் பாசத்தையும் பரிமாறிக் கொள்ளுதல் வேண்டும்.

## 2. தூய்மையும் சுத்தம் செய்துகொள்வதும்

புணர்ச்சிக்குப்பின் தம்பதியர் இருவரும் தங்கள் பாலுறுப்புகளை சுத்தமான துணிகள் அல்லது கைதுடைப்புக் காகிதங்கள் கொண்டு சுத்தம் செய்துகொள்ளவேண்டும். புணர்ச்சிக்கு முன்னர் தங்களுக்கு அடியில் ஒரு விரிப்பையோ துணியையோ விரித்துக்கொள்வது சிறந்தது. அதையே பின்னர் சுத்தம் செய்வதற்கும் பயன்படுத்திக்கொள்ளலாம். அல்லது, தனியாக வேறு துணியையும் பயன்படுத்தலாம்.

இமாம் இப்னு குதாமா தம்முடைய *அல்-முக்னியில்* கூறுகிறார்: புணர்ச்சிக்குப்பின் கணவன் தன்னை துடைத்துக்கொள்வதற்குப் பயன்படுத்தும் வகையில், மனைவியிடம் ஒரு துணி இருப்பது விரும்பத் தக்கது. இதுபற்றி ஆயிஷா (ரழி) கூறினார்கள்: 'ஒரு கூர்மதியான பெண் தன் வசம் ஒரு துணியை வைத்துக்கொண்டு, கணவன் தன்னுடன் புணர்ந்தபின் அதை அவரிடம் கொடுப்பாள். இதன்மூலம் அவர் தன்னைத் துடைத்துக் கொள்ளவும், அவள் தன்னைத் துடைத்துக் கொள்ளவும் இயலும்.' (*அல்-முக்னி* **8:136**)

புணர்ச்சிக்குப்பின் சுத்தம்செய்வது மிக மிக அவசியமானது. சில முஸ்லிம் தம்பதியர் இந்த விஷயத்தில் மிகவும் பொடுபோக்காக உள்ளனர். தங்களின் படுக்கை விரிப்பும் ஆடைகளும் தூய்மை கெட்டிருக்கலாம் எனும் விஷயத்தை அலட்சியப்படுத்துகின்றனர். உடலுறவுக்கென்று தனியொரு துணி விரிப்பைப் பயன்படுத்துவது பலமாக ஊக்குவிக்கப்படுகிறது. அதைப் பின்னர் சலவைசெய்வதற்கு வசதியாய் இருக்கும். பாலுறுப்புத் திரவங்கள் ஒருவரின் துணிமணி களிலோ உடலுறுப்புகளிலோ பட்டுவிட்டால், தொழுகைக்குமுன் அவற்றைத் தண்ணீரால் தூய்மைப்படுத்துவது அவசியம். இல்லா விட்டால், தொழுகை கூடாமல் போய்விடும். அதேபோல், படுக்கையில் பாலுறுப்புத் திரவங்கள் பட்டுவிட்டால் அதையும் மாற்றவேண்டும்.

மதன நீர் – விந்து வெளியேறுவதற்குமுன் வரும் திரவம் (*மதி*) தூய்மையற்றது என அனைத்து செவ்விய அறிஞர்களும் கருதுகின்றனர் என்பதை தம்பதியர் நினைவில் வைப்பது அவசியம். *மதி* என்பது, பாலியல் கிளர்ச்சி ஏற்பட்டு விந்து இன்னும் வெளியேறாதபோது ஆண் அல்லது பெண்ணில் இருந்து வேகமின்றி வெளிவரும் ஒரு மெல்லிய நிறமற்ற திரவம். அது பெரும்பாலும் ஒருவர் அறியாமலே வெளியேறி விடும். மற்றும், ஆணைவிட பெண்ணுக்கு அதிகமாக ஏற்படும். *மதி* வெளியானால் ஒளு மட்டுமே அவசியம். எனினும், சட்டரீதியில் அது தூய்மையற்றதாக (*நஜீஸ்*) கருதப்படுவதன் காரணமாக, அது உடலின் பிற பாகங்களிலோ ஆடையிலோ பட்டுவிட்டால் அதைக் கழுவிவிடுவது கட்டாயம். *மதி* தூய்மையற்றது என்பதில் முஸ்லிம் *உம்மா* முழுவதும் கருத்தொற்றுமை கொண்டுள்ளது என இமாம் நவவி கூறுகிறார். (காண்க: *ஹாஷியா அல்-தஹ்தாவி அலா மராகி அல்-ஃபலாஹ்* **ப.100,** *அல்-மஜ்மூஃ ஷரஹ் அல்-முஹத்தப்* **2:395** *அல்-முக்னி* **1:162)**

விந்துவை (*மனி*) பொறுத்தவரை, ஆணுக்கு அது 'ஆண்குறியிலிருந்து வேகமாகப் பீய்ச்சி வெளியேறியபின் அதைச் சுருங்கச் செய்யும் ஓர் அடர்த்தியான வெண்மையான திரவம்.' பெண்ணில் அது, மெல்லிய

மஞ்சள் நிற திரவமாக வெளியேறும். அல்லாஹ் மனிதனை *மனி* என்ற திரவத்தைக் கொண்டே படைத்திருக்கிறான். இதுபற்றி அல்லாஹ் கூறுகிறான்:

أَيَحْسَبُ الْإِنسَانُ أَن يُتْرَكَ سُدًى أَلَمْ يَكُ نُطْفَةً مِّن مَّنِيٍّ يُمْنَىٰ ثُمَّ كَانَ عَلَقَةً فَخَلَقَ فَسَوَّىٰ فَجَعَلَ مِنْهُ الزَّوْجَيْنِ الذَّكَرَ وَالْأُنثَىٰ أَلَيْسَ ذَٰلِكَ بِقَادِرٍ عَلَىٰ أَن يُحْيِيَ الْمَوْتَىٰ

*மனிதன், தன்னை எவரும் கட்டுப்படுத்தாமல் விட்டுவிடப்படுவான் என எண்ணிக்கொள்கிறானா? அவன் ஒரு வெளியேறிய-விந்துத்துளியாக (மனி) இருக்கவில்லையா? அடுத்து அவன் ஒரு இரத்தக் கட்டியாக மாறினான். அடுத்து (அல்லாஹ் அவனைப்) படைத்து பரிபக்குவப்படுத்தினான். அவனி லிருந்து இரு பாலர்களை – ஆணையும் பெண்ணையும் – உருவாக்கினான். இப்படிப்பட்டவனுக்கு, இறந்தோரை உயிர்ப்பிக்கும் ஆற்றல் இல்லையா? (குர்ஆன் 75:36-40)*

விந்து தூய்மையானதா தூய்மையற்றதா என்பதில் செவ்விய அறிஞர்களிடையே கருத்துவேறுபாடு உள்ளது. அது தூய்மையற்றது; எனவே, உடலிலிருந்தும் ஆடைகளிலிலிருந்தும் அகற்றிச் சுத்தம்செய்ய வேண்டியது என ஹனஃபி மற்றும் மாலிகி சிந்தனாவழிகள் கருது கின்றன. இதற்கு மாறாக, ஷாஃபி மற்றும் ஹம்பலி சிந்தனாவழிகள் விந்துவை தூய்மையானது எனக் கருதுகின்றன (இமாம் அஹ்மதுவிட மிருந்து அறிவிக்கப்படும் கூடுதல் நம்பகமான நிலைப்பாடு இது). எனினும், விந்து வெளிப்பட்டால் ஆண், பெண் இருவருக்கும் குளிப்பு *(குஸ்லு)* கட்டாயம் என்பதில் அறிஞர்கள் உடன்படுகின்றனர். (ஹனஃபி சிந்தனாவழிக்கு *தஹ்தாவி அலா மராகி அல்-ஃபலாஹ்* ப.96 மற்றும் *ரத் அல்-முஹ்தார்* 1:312-314. ஷாஃபி சிந்தனாவழிக்கு *அல்-மஜ்மூஃ ஷரஹ் அல்-முஹத்தப்* 1:395-396, ஹம்பலி சிந்தனாவழிக்கு *அல்-முக்னி* 1:197 மற்றும் 1:735, மாலிகி சிந்தனாவழிக்கு ஹாஷியா அல்-தசூகி அலா அல்-ஷரஹ் அல்-கபீர் 1:92)

### 3. சிறுநீர்க் கழித்தல்

உடலுறவுக்குப் பின் சிறுநீர்க் கழித்தல், மருத்துவ நோக்கில் சிறந்த தாகும். இதன் மூலம், ஒருவர் உடலில் எஞ்சியிருக்கும் விந்துத்துளிகள் வெளியேற வசதியேற்படுகிறது. எனினும், ஒருவர் தம் பாலுறுப்பைக் கழுவுவதற்கு மிகக் குளிர்ந்த நீர் பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும். அது கேடு விளைவிக்கக் கூடியது. (காண்க: *இஹ்யா உலூம் அல்-தீன்,* அதன் விரிவுரை *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன்* 6:184 மற்றும் *அதப்-ஏ-முபாஷராத்* ப.28)

### 4. கடமையான குளிப்பு (குஸ்லு)

**அ. எப்போது குளிப்பு அவசியம்?**

பாலியல் மோகத்தால் ஆண் விந்து வெளியேறினாலும், புணர்ச்சிப் பரவசத்தால் பெண்ணிடமிருந்து பாலுறுப்பு திரவம் வெளியேறினாலும் குளிப்பு கடமையாகி விடுகிறது என்பதில் இஸ்லாமியச் சட்டத்தின் முதன்மையான நான்கு சிந்தனாவழிகளும் கருத்து உடன்படுகின்றன என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். ஆகவே, உடலுறவுக்குப்பின் ஒருவர் குளிப்பு கடமையான நிலையில் *(ஜனாபா)* இருக்கிறார். அவர் *ஜுனுப்* என அழைக்கப்படுகிறார். ஜுனுப் தொழவோ குர்ஆனை ஓதவோ தொடவோ பள்ளிவாசலுக்குள் நுழையவோ இன்ன பிற வணக்க வழிபாடுகளில் ஈடுபடவோ கூடாது. அவற்றைச் செய்வதற்கு முன் அவர் தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். அல்லாஹ் கூறுகிறான்:

وَإِن كُنتُمْ جُنُبًا فَاطَّهَّرُوا

*...நீங்கள் குளிப்பு கடமையான நிலையில் இருந்தால், (குளித்து) உங்களை நன்கு சுத்தம் செய்துகொள்ளுங்கள். (குர்ஆன் 5:6)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

تحت كل شعرة جنابة ، فاغسلوا الشعر وأنقوا البشر

*ஒவ்வொரு முடிக்குக் கீழும் அசுத்தம் (ஜனாபா) இருக்கிறது. எனவே உடல் முடிகளை கழுவி சருமத்தை சுத்தம் செய்துகொள்ளுங்கள். (சுனன் அல்-திர்மிதி 106 சுனன் அபூ தாவூத் 252)*

விந்து வெளியேறுதலைத் தவிர்த்து, புணர்ச்சியும் கடமையான குளிப்புக்குக் காரணமாகிவிடுகிறது. இதன்போது விந்து வெளியேறினாலும் வெளியேறாவிட்டாலும், குளிப்பு கட்டாயமாகி விடுகிறது. ஆணுறுப்பு பெண்ணுறுப்புக்குள் சென்றுவிட்டாலே, குளிப்பு கட்டாயமாகி விடுகிறது. வேறுவார்த்தைகளில் கூறின், விந்து வெளியாவதும் புணர்ச்சியும் குளிப்பு கடமையாவதற்கான இருவேறு தனித்தனிக் காரணங்களாக அமைகின்றன. இரண்டிலும் குளிப்பு கட்டாயமாகி விடுகிறது. புணராமலே, வெறும் பாலுறவு ஆசையினாலே விந்து வெளியாகிவிட்டாலும் அல்லது, விந்து வெளியேறாமலே புணர்ந்தாலும் – இரு சூழ்நிலைகளிலும் – குளிப்பு கட்டாயமாகிவிடுகிறது.

புணர்ந்தும் விந்து வெளியாகமலே *ஜனாபா* ஏற்படுதல் பற்றி, பின்வரும் நபிமொழிகளில் அறிவிக்கப்படுகின்றன:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا جَلَسَ بَيْنَ شُعَبِهَا الأَرْبَعِ ثُمَّ جَهَدَهَا فَقَدْ وَجَبَ عَلَيْهِ الْغُسْلُ ، وَفِي حَدِيثِ مَطَرٍ : وَإِنْ لَمْ يُنْزِلْ

'ஒரு மனிதர் (பெண்ணின்) நான்கு பாகங்களுக்கு மத்தியில் அமர்ந்து அழுத்தம் கொடுப்பாராயின், அவர் மீது குளிப்பு கட்டாயமாகிவிடுகிறது.' அறிவிப்பாளர் மதார் வாயிலாக வந்த ஹதீஸில், 'அவர் விந்து வெளியேற்றாவிட்டாலும்கூட' என்ற கூடுதல் செய்தியும் உள்ளது: *(சஹீஹ் அல்-புஹாரி 287 சஹீஹ் முஸ்லிம் 348, இங்கு முஸ்லிமின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا جَاوَزَ الْخِتَانُ الْخِتَانَ وَجَبَ الْغُسْلُ

ஆணுறுப்பு, பெண்ணுறுப்பின் எல்லையைத் தொட்டுவிட்டால், குளிப்பு கட்டாயமாகிவிடுகிறது. *(சுனன் அல்-திர்மிதி 109 மற்றும் முஸ்னத் அஹ்மது)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக, தம் தாத்தா வாயிலாக தம் தந்தை அறிவித்ததாக அம்ர் இப்னு ஷுஐப் கூறுகிறார்:

إِذَا الْتَقَى الْخِتَانَانِ وَتَوَارَتِ الْحَشَفَةُ فَقَدْ وَجَبَ الْغُسْلُ

(ஆண் மற்றும் பெண்ணின்) உறுப்புகள் இரண்டும் சந்தித்து, ஆண்குறியின் முன்பாகம் மறைந்துவிட்டால் குளிப்பு கட்டாயமாகிவிடுகிறது. *(சுனன் இப்னு மாஜா 611 மற்றும் முஸன்னஃப் இப்னு அபீ ஷைபா 1:112)*

முஸ்லிமில் பதிவுபெற்றுள்ள மேற்கூறிய (முதல்) ஹதீஸிற்கு இமாம் நவவி விளக்கமளிக்கிறார்: 'குளிப்புக் கடமையாவது, விந்து வெளியேற்றத்துக்கு மட்டுமல்ல. மாறாக, ஆணுறுப்பின் தலைப்பகுதி பெண்ணுறுப்புக்குள் மறைந்துவிட்டாலே ஆண், பெண் இருவர் மீதும் குளிப்பு கட்டாயமாகிவிடுகிறது. இன்று, இதுகுறித்து மாற்றுக் கருத்து கிடையாது. சில நபித்தோழர்களும் அவர்களுக்குப் பின்வந்த சிலரும் கருத்துவேறுபாடு கொண்டிருந்தனர். எனினும் பின்னர், இதுகுறித்து கருத்தொற்றுமை *(இஜ்மா)* ஏற்பட்டுவிட்டது.' *(அல்- மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம் ப.400)*

உடலுறவுகொள்ளாமலே விந்துவெளியாவதால் *ஜனாபா* ஏற்படுவது பற்றி, பின்வரும் நபிமொழி அறிவிக்கப்படுகிறது:

அலீ (ரழி) அறிவிக்கிறார்:

سَأَلْتُ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنِ الْمَذْيِ فَقَالَ: مِنَ الْمَذْيِ الْوُضُوءُ وَمِنَ الْمَنِيِّ الْغُسْلُ :

*மதன நீர் (மதி) குறித்து நான் (வேறொருவர் மூலம்) அல்லாஹ்வின் தூதரிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் (ஸல்), மதன நீர் (மதி) வெளியானால் சடங்குச் சுத்தம் -ஒளு- கடமையாகிவிடுகிறது; விந்து (மனி) வெளியானால் குளிப்பு கடமையாகிவிடுகிறது என்று கூறினார்கள். (சுனன் அல்-திர்மிதி **114**, சுனன் இப்னு மாஜா **504** பிற நூல்கள்)*

ஒரு பெண் தூங்கும்பொழுது புணர்ச்சிப் பரவசமோ அதனால் திரவமாக வெளியேறினால்கூட, அவள்மீது குளிப்பு கட்டாயமாகி விடுகிறது. இது தொடர்பாகப் பின்வரும் நபிமொழி அறிவிக்கப் படுகிறது:

*இறைநம்பிக்கையாளர்களின் தாய், உம்மு சலமா (ரழி) அறிவிக்கிறார்:*

جَاءَتْ أُمُّ سُلَيْمٍ امْرَأَةُ أَبِي طَلْحَةَ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَتْ يَا رَسُولَ اللَّهِ إِنَّ اللَّهَ لَا يَسْتَحْيِي مِنَ الْحَقِّ هَلْ عَلَى الْمَرْأَةِ مِنْ غُسْلٍ إِذَا هِيَ احْتَلَمَتْ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ نَعَمْ إِذَا رَأَتْ الْمَاءَ

*அபூதல்ஹாவின் மனைவி உம்மு சுலைம் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து வினவினார்: 'அல்லாஹ்வின் தூதரே, நிச்சயமாக உண்மை விஷயத்தில் அல்லாஹ் வெட்கப்படுவதில்லை. ஒரு பெண்ணுக்கு ''ஈரக் கனவு'' ஏற்பட்டுவிட்டபின் குளிப்பு அவள் மீது கட்டாயமாகுமா?' இதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்), 'ஆம், அவள் பெண்ணுறுப்புத் திரவம் வெளியேறியுள்ளதைக் கண்டால்' என பதிலளித்தார்கள். (ஸஹீஹ் அல்-புஹாரி 278)*

இமாம் இப்னு குதாமா கூறுகிறார்: 'வேகத்துடனும் ஆசையுடனும் விந்து வெளிப்படுத்தப்பட்டால், (அதாவது, புணர்ச்சிப் பரவசம்) ஆண், பெண் இருவர் மீதும் குளிப்பு கட்டாயமாகிவிடுகிறது. இது உறக்கநிலை, விழிப்புநிலை – இரண்டுக்கும் பொருந்தும். திர்மிதி கூறியதுபோல, இதுவே எல்லா சட்டவியலாளர்களின் பொதுவான கருத்து; இதில் கருத்துவேறுபாடு இருப்பதாக நாம் அறியவில்லை.' *(அல்-முக்னி **1:197**)*

எனவே, உடலுறவுக்குப்பின் விந்து வெளிப்படாவிட்டாலும், தம்பதியர் இருவரும் உறுதியாகக் கட்டாயக் குளிப்பு மேற்கொள்ள வேண்டும். இருவரில் ஒருவர் பாலுறவு பரவச நிலை அடைந்து விந்து வெளிப்படுத்தினாலும் – அது முன்விளையாட்டுச் சமயத்திலோ

உறக்கத்திலோ ஏற்பட்டாலும் – அவர்கள் கட்டாயம் குளித்தாக வேண்டும். குளிக்கும்போது, உடலின் ஒரு சிறு பாகமும் விடுபடாத அளவுக்கு எல்லா இடங்களிலும் தண்ணீர் சென்று அடையும்படிக் குளிக்க வேண்டும். கடமையான குளிப்பு பற்றி தம்பதியர் சரியாக அறியாவிட்டால், இது குறித்த இஸ்லாமிய வழிகாட்டுதலை அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும்.

### ஆ. குளிப்புக்குப்பின் பாலுறுப்பு திரவம் வெளியேறினால் குளிப்பது அவசியமா?

ஆணிடமிருந்து கடமையான குளிப்புக்குப்பின் வெளியேறும் விந்துவைப் பொறுத்தவரை, ஹனஃபி சிந்தனாவழியின் வலுவான நிலைப்பாடும் பிற சிந்தனாவழிகளின் நிலைப்பாடும் இவ்வாறு உள்ளது. அதாவது, இச்சைத் தணிப்பும் *(ஷஹ்வா)* பாலுறுப்பிலிருந்து வேகமாக விந்து வெளியேறுவதும் *(தஃப்க்)* கட்டாயக் குளிப்பின் நிபந்தனைகள் அல்ல. எனினும், இதற்கான முதல் காரணம் பாலுறவு பரவசநிலையாக இருக்க வேண்டும்; கனமான எடை தூக்குவது போன்றவற்றால் ஏற்பட்டிருக்கக் கூடாது. இந்த முதல் காரணம் குறித்த நிபந்தனை, ஹனஃபி சிந்தனா வழியில் மட்டுமே உள்ளது.

ஷாஃபி சிந்தனாவழியின்படி, முதல் காரணம் எதுவாக இருப் பினும், விந்து வெளிப்பட்டுவிட்டாலே குளிப்பு கடமையாகி விடுகிறது. ஆக, கடமையான குளிப்புக்குப்பின், பாலுறுப்பு வழித்தடத்தில் எஞ்சியிருக்கும் விந்து வெளிப்பட்டால் மீண்டும் குளிப்பு அவசியம்.

எனினும், ஹனஃபி சிந்தனாவழியின்படி, சிறுநீர்க் கழித்தல் அல்லது உறங்குதல் அல்லது அளவுக்கதிகமாக நடப்பதால் விந்து வெளிப் பட்டால், மீண்டும் குளிப்பு தேவையில்லை. ஏனெனில், இந்த அசைவுகளால் வழித்தடம் சுத்தமடைந்து, விந்து சொட்டுவது முழுமை யாக நின்றுவிட்டது எனக் கருதப்படுகிறது. ஆகவே, இதற்குப் பின் விந்து வெளியாவது, ஆரம்ப இச்சைத் தணிப்பு தொடர்பானது அல்ல. அது பாலியல் உச்சநிலை (பரவசநிலை) இன்றியே வெளிப்பட்டுள்ளது. எனினும், இதற்குப் புதிதாக ஒளு செய்வது அவசியம். ஏனெனில், பாலுறுப்பிலிருந்து வெளியேற்றம் நிகழ்ந்துள்ளது. தொழுகையைப் பொறுத்தவரை அதுகூடும். ஏனெனில், தூய்மை நிலையில்தான் அது மேற்கொள்ளப்பட்டுள்ளது. மேலும், தொழுகைக்குப் பின்புதான் தொடக்கு ஏற்பட்டுள்ளது.

கட்டாயக் குளிப்புக்குப்பின், பெண் தனக்கு பாலுறுப்புத் திரவம் வெளியாவதைக் கண்டு, அது தன்னுடைய திரவம்தான்; தன் கணவனின்

திரவம் அல்ல என்பதை அவள் உறுதியாக அறிந்தும் இருந்தால், மேற்கூறிய விதி பொருந்தும். எனினும், இதுபற்றி அவள் சந்தேக நிலையில் இருந்தால், அவள் முன்னர் மேற்கொண்டுள்ள குளிப்பையோ தொழுகையையோ மீண்டும் மேற்கொள்ளத் தேவையில்லை. இது ஹனஃபி சிந்தனாவழியின் நிலைப்பாடு.

ஷாஃபி சிந்தனாவழியின்படி, முன்பு தன் கணவனுடன் உடலுறவு கொள்ளும்போது அவள் புணர்ச்சிப் பரவசம் அடைந்து பாலுறுப்பு திரவம் வெளியாகி குளித்தப்பிறகு எஞ்சிய பாலுறுப்பு திரவம் மீண்டும் வெளிப்பட்டால் அவள் மீண்டும் குளிப்பது அவசியம். ஏனெனில், அவள் 'புணர்ச்சிப் பரவசம் அடைந்திருந்தது' காரணமாக, அது அவளுடைய திரவம்தான் என வலுவாக சுட்டப்படுகிறது. எனவே, மீண்டும் குளிப்பது அவசியம். எனினும், அவள் புணர்ச்சிப் பரவசம் அடையாவிட்டால், அவள் மீண்டும் குளிப்பது அவசியமில்லை; *ஒளூ* மட்டுமே முறிந்துவிடும். ஏனெனில், அவளுக்கு வெளிப்படுவது அவளுடைய திரவம் அல்ல; அவளுடைய கணவனின் விந்து. (காண்க. *அல்-ஹிதாயா 1:31, ரத் அல்-முஹ்தார்* **1:159-161** மற்றும் *முக்னி அல்-முஹ்தாஜ்* **1:117-118**)

இவ்வனைத்து விஷயங்களையும் கருதும்போது, கட்டாயக் குளிப்புக்குமுன் சிறுநீர்க் கழிப்பதைப் பழக்கமாக்கிக் கொள்வது மிகச் சிறந்தது. இது பின்னர் பிரச்சினைகளைத் தவிர்க்க உதவும், இன்ஷா அல்லாஹ்.

## 5. குளிப்பு கடமையான (ஜனாபா) நிலையில் உறங்குதல்

### அ. உடலுறவுக்குப்பின் எப்போது குளிக்க வேண்டும்?

தம்பதியர் உடலுறவுக்குப்பின் விரைவில் குளித்துத் தூய்மையாவது விரும்பத்தக்கது. ஒருவர் தம் *ஜனாபா* நிலைக்கு இயன்றளவு விரைவில் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும்.

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அலீ (ரழி) அறிவிக்கிறார்:*

لَا تَدْخُلُ الْمَلَائِكَةُ بَيْتًا فِيهِ صُورَةٌ وَلَا كَلْبٌ وَلَا جُنُبٌ

ஓவியம், நாய் அல்லது குளிப்பு கடமையானவர் *(ஜுனுப்)* உள்ள வீட்டில் வானவர்கள் நுழைவதில்லை. *(சுனன் அபூ தாவூத்* **229***)*

இந்த ஹதீஸில் சுட்டப்படுவது, ஒருவர் கட்டாய *(ஃபர்ளு)* தொழுகைகளையே பிற்படுத்தும் அளவுக்கு நீண்ட நேரம் அவசியமின்றி குளிப்பு கடமையான நிலையில் இருப்பதைத்தான் குறிக்கிறது. இச்சந்தர்ப்பத்தில் அது பாவமாகும். மற்றபடி, உடலுறவு முடித்த உடனே குளிப்பது

கடமையல்ல. ஜனாபா நிலையில் உறங்கச் செல்வது அனுமதிக்கப் பட்டது. மேலும், விரும்பத்தகாததும் அல்ல. எனினும், குளிப்பது மேன்மையானது.

அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:

كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَنَامُ وَهُوَ جُنُبٌ وَلاَ يَمَسُّ مَاء

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) குளிப்பு கடமையான நிலையில் இருக்கும் பொழுது, தண்ணீர் எதையும் தொடாமலே உறங்குவார்கள். (சுனன் அல்-திர்மிதி 118, சுனன் அபூ தாவூத் 230 மற்றும் சுனன் இப்னு மாஜா 581)

சுனன் திர்மிதியின் விரிவுரையான துஹ்ஃபத் அல்-அஹ்வாதியின் ஆசிரியர் இவ்வாறு கூறுகிறார்: 'ஜுனுப் (உடலுறவு கொண்டு குளிப்பது கடமையானவர்) குளிப்பிற்கு முன்பும் ஒளுவுக்கு (சிறு அசுத்தங்களை நீக்கிக்கொள்வது) முன்பும் உறங்க அனுமதியுண்டு என்பதற்கு இந்த ஹதீஸில் ஆதாரமுள்ளது.' (துஹ்ஃபத் அல்-அஹ்வாதி பி ஷரஹ் ஜாமிஃ அல்-திர்மிதி 1:397)

குதைஃப் இப்னு அல்-ஹாரிஸ் அறிவிக்கிறார்:

قُلْتُ لِعَائِشَةَ: أَرَأَيْتِ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يَغْتَسِلُ مِنَ الْجَنَابَةِ فِي أَوَّلِ اللَّيْلِ أَوْ فِي آخِرِهِ؟ قَالَتْ: رُبَّمَا اغْتَسَلَ فِي أَوَّلِ اللَّيْلِ وَرُبَّمَا اغْتَسَلَ فِي آخِرِهِ ، قُلْتُ: اللَّهُ أَكْبَرُ الْحَمْدُ لِلَّهِ الَّذِي جَعَلَ فِي الأَمْرِ سَعَةً

நான் ஆயிஷாவிடம் கேட்டேன், 'இரவின் தொடக்கத்திலோ இறுதி யிலோ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ஜனாபா குளியல் மேற்கொள்வதை நீங்கள் கண்டிருக்கிறீரா?' அதற்கு அவர் இவ்வாறு பதிலளித்தார், சில சமயங்களில் நபியவர்கள் (ஸல்) இரவின் தொடக்கத்திலும், சில சமயங் களில் இரவின் இறுதியிலும் குளிப்பார்கள்.' எனவே, 'அல்லாஹ்வே மிகப் பெரியவன்; இவ்விஷயத்தில் இலகுவை ஏற்படுத்தித் தந்த அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்...' என நான் கூறினேன். (சுனன் அபூ தாவூத் 228 மற்றும் பிற நூல்கள்)

இமாம் நவவி கூறுகிறார்: 'இந்த ஹதீஸ்களிலிருந்து, ஒரு ஜுனுப் குளிப்பதற்குமுன் உண்ணவும் பருகவும் உறங்கவும் உடலுறவு கொள்ளவும் அனுமதியுண்டு எனும் முடிவைப் பெறுகிறோம். இதில் அனைத்து அறிஞர்களும் கருத்தொற்றுமை கொண்டுள்ளனர்... இதன் (அல்லாஹ்வின் தூதர் தண்ணீரைத் தொடாமலே உறங்கச் செல்வார்கள் எனக் கூறப்பட்டுள்ள ஹதீஸின்) பொருள், இச்செயலின் அனுமதியைச்

சுட்டுவதற்காக அவர்கள் சில சந்தர்ப்பங்களில் தண்ணீரைத் தொட மாட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தொடர்ந்து வழக்கமாகத் தண்ணீரைப் பயன்படுத்தி இருந்திருப்பார்கள் எனில், தண்ணீரைப் பயன்படுத்துவது அவசியம் என எண்ணப்பட்டிருக்கும். எனினும், அல்லாஹ்வே நன்கு அறிபவனாக இருக்கின்றான்.' *(அல்-மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம் ப.372-373)*

**ஆ. உடலுறவுக்குப் பிறகு குளிக்காமல் தூங்கலாமா?**

ஒருவர் குளிக்காமல் உறங்க விரும்பினால், அவர் ஒளு செய்து கொள்ளுமாறு ஊக்குவிக்கப்படுகிறார்.

*அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்:*

كَانَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِذَا أَرَادَ أَنْ يَنَامَ وَهُوَ جُنُبٌ غَسَلَ فَرْجَهُ وَتَوَضَّأَ لِلصَّلاةِ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) குளிப்பு கடமையான நிலையில் உறங்கச் செல்ல விரும்பினால் அவர்கள் தம் பாலுறுப்புகளைக் கழுவி, தொழுகைக்காக செய்வதுபோன்ற ஒளு செய்துகொள்வார்கள். (சஹீஹ் அல்-புஹாரி 284 மற்றும் சஹீஹ் முஸ்லிம் 305, இங்கு புஹாரியின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

அல்லாஹ்வின் தூதரிடம் உமர் இப்னு அல்-கத்தாப் (ரழி) வினவினார்கள்: 'குளிப்பு கடமையான நிலையில் எங்களுள் ஒருவர் உறங்கலாமா?' அதற்கு நபியவர்கள் (ஸல்) பதிலளித்தார்கள்:

نَعَمْ إِذَا تَوَضَّأَ أَحَدُكُمْ فَلْيَرْقُدْ وَهُوَ جُنُبٌ

*ஆம், ஒளு செய்துகொண்டால் ஒருவர் குளிப்பு கடமையான நிலையிலேயே உறங்கலாம். (சஹீஹ் அல்-புஹாரி 283, சஹீஹ் முஸ்லிம் 306 மற்றும் சுனன் அல்-திர்மிதி 120, இங்கு புஹாரியின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

இரவில், தாம் ஜுனுப் ஆகிவிடுவதாக உமர் இப்னு அல்-கத்தாப் (ரழி) அல்லாஹ்வின் தூதரிடம் கூறினார்: இதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவரிடம் இவ்வாறு பதிலுரைத்தார்கள்:

تَوَضَّأْ وَاغْسِلْ ذَكَرَكَ ثُمَّ نَمْ

*ஒளு செய்து, உம் பாலுறுப்புகளைக் கழுவிக்கொண்டபின் உறங்கச் செல்லவும். (சஹீஹ் அல்-புஹாரி 286, சஹீஹ் முஸ்லிம் 306)*

தாவூத் அஸ்-ஸாஹிரி, இப்னு அல்-ஹபீப் அல்-மாலிகி போன்ற வெகுசில அறிஞர்களின் அரிய கருத்துகளைத் தவிர்த்து, பொதுவாக அறிஞர் பெருமக்களின் *(ஜும்ஹூர்)* கருத்து, உறங்கச் செல்லுமுன் ஒளு செய்துகொள்வது விரும்பத்தக்கது என்றாலும், அது கட்டாயம்

அல்ல. வேறுவிதத்தில் கூறின், ஒளூ செய்ததற்காக அவருக்கு நற்கூலி கிடைக்கும்; ஆனால், செய்யாவிட்டால் அது பாவமில்லை.

இதற்கு, இமாம் இப்னு குஸைமா, இமாம் இப்னு ஹிப்பான் ஆகியோரின் சஹீஹ் தொகுப்புகளில் பதிவுசெய்யப்பட்டுள்ள நபிமொழி ஆதாரமாக விளங்குகிறது. அதில் அல்லாஹ்வின் தூதரிடம் உமர் இப்னு அல்-கத்தாப் (ரழி) வினவினார்கள்: 'குளிப்பு கடமையான நிலையில் எங்களுள் ஒருவர் உறங்கலாமா?' அதற்கு நபியவர்கள் (ஸல்) பதிலளித்தார்கள்:

يَنَام وَيَتَوَضَّأُ إِن شَاءَ

ஆம், உறங்கலாம். விரும்பினால் அவர் ஒளூ செய்தும் கொள்ளலாம். (*சஹீஹ் இப்னு குஸைமா* **211**)

அதேபோல், 'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) குளிப்பு கடமையான நிலையில் இருக்கும்பொழுதும் தண்ணீரைத் தொடாமலே உறங்கச் செல்வார்கள்' என்று ஆயிஷா (ரழி) அறிவித்ததாக முன்பு நாம் மேற்கோள்காட்டிய நபிமொழி, ஒளூ செய்வது கட்டாயம் இல்லை என்பதற்கு ஆதாரமாக உள்ளது. இமாம் நவவி கூறுகிறார்: 'இந்தக் காரியங்களுக்கு (அதாவது, உறங்குதல், உண்ணுதல், பருகுதல் போன்றவை) முன் ஒளூ செய்து பாலுறுப்புக்களைக் கழுவிக்கொள்வது விரும்பத்தக்கது(...) ஒளூ செய்யுமுன் உறங்குதல், உண்ணுதல், பருகுதல், மற்றும் உடலுறவுகொள்ளுதல் (சிறிது) விரும்பத்தகாதது என நம்முடைய அறிஞர்கள் தெளிவாக உரைத்துள்ளனர். இந்த ஹதீஸ் களும் அதைச் சுட்டுகின்றன. எனினும், இவ்வாறு ஒளூ செய்வது கட்டாயம் (*வாஜிப்*) அல்ல என்பதில் கருத்துவேறுபாடு இல்லை என்பதே எங்கள் கருத்தாகும். இதுவே இமாம் மாலிக் மற்றும் பெரும் பான்மையான அறிஞர்களின் கருத்தும் ஆகும்...' (*அல்-மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம்* ப.**372**)

### இ. உடலுறவுக்குப்பின் பாலுறுப்புகளைக் கழுவுதல்

ஒருவர் ஒளூ செய்துகொள்ள இயலாவிட்டால், குறைந்தபட்சம் பாலுறுப்புகளையாவது கழுவி சுத்தம் செய்துகொள்ள வேண்டும். இதையே இமாம் புஹாரி பதிவுசெய்துள்ள, உமர் இப்னு அல்-கத்தாப் (ரழி) அறிவித்த நபிமொழியும் கூறுகிறது. இதுவே மூன்று படிநிலை களில் கடைசியானது. எனினும், இதிலும்கூட, ஒருவர் தம் பாலுறுப்பு களைக் கழுவிக் கொள்ளாவிட்டாலும் அவர் மீது பாவமில்லை. ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) 'தண்ணீரைத் தொடாமல்' படுக்கைக்குச் சென்றார்கள் என அறிவிக்கப்படுகிறது.

ஆகமொத்தம், இதில் மூன்று படிநிலைகள் உண்டு: கடமையான குளிப்பை நிறைவேற்றிவிட்டு உறங்கச் செல்வதே மேன்மையானது. அது இயலாவிட்டால், ஒளு செய்துகொள்ளவேண்டும். அதுவும் இயலாவிட்டால், பாலுறுப்புகளையாவது கழுவிக்கொள்ள வேண்டும். எனினும், ஒருவர் மேற்கூறிய மூன்று செயல்களில் எதையும் செய்யா விட்டாலும் அவர் மீது பாவமில்லை.

### 6. தொடர்ந்து மீண்டும் உடலுறவுகொள்ளுதல்

#### அ. ஒரு நாளைக்கு எத்தனை தடவை உடலுறவு கொள்வது?

பகலிலோ இரவிலோ ஒரு நேரத்தில் ஒன்றுக்கும் மேற்பட்ட தடவை தம்பதியர் உடலுறவுகொள்வதற்கு இஸ்லாம் அனுமதியளிக்கிறது. இமாம் இப்னு அல்-கையூம் அல்-ஜவ்ஸிய்யா தம்முடைய *அல்-திப் அல்-நபவியில்* இதுபற்றி கூறுகிறார். பாலுறவு ஆசை முதிர்ந்து இருக்கும் பொழுதே ஒருவர் உடலுறவு கொள்ளவேண்டும். ஒன்றை நினைப் பதையோ பார்ப்பதையோ சாராமல், ஆணுக்கு இயல்பாக விறைப்பு ஏற்பட வேண்டும். பாலுறவு ஆசையை *(ஷஹ்வா)* ஒருவர் தம் மீது வலுக்கட்டாயமாக உண்டாக்கிக்கொள்வது சரியானதல்ல. *(அல்-திப் அல்-நபவி ப.181)*

ஆக, மீண்டும் உடலுறவுகொள்வதற்கு உண்மையான விருப்பம் இருப்பின், தம்பதியர் அதில் ஈடுபடலாம். இல்லாவிட்டால், அவர்கள் முழுமையாக புத்துணர்வும் புதுத்தெம்பும் அடையும்வரை காத்திருப்பது மேல். இந்த விஷயத்தில், தம்பதியர் இருவரும் தத்தமது துணைவரின் உடல்நிலை குறித்து மிகவும் எச்சரிக்கையாகவும் மரியாதையுடனும் இருப்பது அவசியம். இல்லையெனில், ஒருவர் ஆயத்தமில்லாத ஒரு விஷயத்துக்கு நிர்ப்பந்திக்கப்பட்டது போல ஆகிவிடும்.

#### ஆ. அடுத்தடுத்த உடலுறவுக்கிடையே குளிப்பது அவசியமா?

அடுத்தடுத்து பலமுறை உடலுறவுகொள்ளும் போது, அவற்றுக் கிடையில் குளிப்பு அவசியமில்லை என்பதில் அறிஞர்களிடையே முழுக் கருத்தொற்றுமை நிலவுகிறது. ஒவ்வொரு முறையும் குளிப்பது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) விரும்பிய வழக்கமாக இருந்ததெனினும், அவர்கள் அடுத்தடுத்து உடலுறவுகொண்டுவிட்டு இறுதியில் ஒரே ஒருமுறை குளித்ததாகவும் அறிவிப்பு உள்ளது.

*அனஸ் (ரழி) அறிவிக்கிறார்:*

أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يَطُوفُ عَلَى نِسَائِهِ بِغُسْلٍ وَاحِدٍ

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம்முடைய (பல்வேறு) மனைவிகளுடன் உடலுறவில் ஈடுபட்டுவிட்டு, ஒரே ஒருமுறை குளிப்பார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 309, சுனன் அல்-திர்மிதி 140, சுனன் அபூ தாவூத் 220 மற்றும் பிற நூல்கள்)*

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ஒன்றுக்கும் மேற்பட்ட தம் மனைவி யருடன் உடலுறவில் ஈடுபட்டுவிட்டு, இறுதியில் ஒருமுறை மட்டும் குளிப்பார்கள் என்பதே இந்த ஹதீஸின் பொருள். ஆக, ஒரு மனைவி யுடனோ வெவ்வேறு மனைவியுடனோ அடுத்தடுத்து உடலுறவில் ஈடுபடுவதற்கு இடையில் குளிப்பது அவசியமில்லை என்பதற்கு இது தெளிவான ஆதாரமாகும்.

எனினும், ஒவ்வொரு உடலுறவிற்கும் தனித்தனி குளியல் மேற் கொள்வது மேன்மையானதும் விரும்பத்தக்கதுமாகும். அபூ ராஃபி (ரழி) அறிவிக்கிறார்:

أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ طَافَ ذَاتَ يَوْمٍ عَلَى نِسَائِهِ يَغْتَسِلُ عِنْدَ هَذِهِ وَعِنْدَ هَذِهِ ، قَالَ : قُلْتُ : يَا رَسُولَ اللَّهِ ، أَلَا تَجْعَلُهُ غُسْلًا وَاحِدًا؟ قَالَ : هَذَا أَزْكَى وَأَطْيَبُ وَأَطْهَرُ

*'ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தம்முடைய (பல்வேறு) மனைவிமார் களுடன் உடலுறவுகொண்டுவிட்டு, இதற்கு ஒரு முறையும் அதற்கு ஒரு முறையும் என (தனித்தனி) குளியல் மேற்கொண்டார்கள்.' அவர் கூறுகிறார்: 'நான் கூறினேன், ''அல்லாஹ்வின் தூதரே, நீங்கள் ஏன் ஒரே ஒருமுறை மட்டும் குளிக்கக்கூடாது?'' அதற்கு அவர்கள், ''இது கூடுதல் தூய்மை யானதும் சிறந்ததும் பரிசுத்தமானதும் ஆகும்.''' (சுனன் அபூ தாவூத் 221, சுனன் இப்னு மாஜா 590 மற்றும் முஸ்னத் அஹ்மது, இங்கு அபூ தாவூதின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

### இ. அடுத்தடுத்த உடலுறவுக்கிடையே ஒளு செய்வது அவசியமா?

அடுத்தடுத்து உடலுறவுகொள்வதற்கு இடையில் ஒளு செய்வதைப் பொறுத்தவரை, இது பலமாக ஊக்குவிக்கப்படுகிறது என்றபோதிலும், இதுவும் அவசியம் இல்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூ சயீத் அல்-குத்ரி (ரழி) அறிவிக்கிறார்:

إِذَا أَتَى أَحَدُكُمْ أَهْلَهُ ثُمَّ أَرَادَ أَنْ يَعُودَ فَلْيَتَوَضَّأْ

*உங்களில் ஒருவர் தம் மனைவியுடன் உடலுறவுகொண்டு, பின்னர் மீண்டும் அதில் ஈடுபட நாடினால், அவர் (அந்த இரு முறைகளுக்கு இடையில்) ஒளு செய்துகொள்ளட்டும். (ஸஹீஹ் முஸ்லிம் 308, சுனன் அல்-திர்மிதி 141 மற்றும் சுனன் அபூ தாவூத் 222, இங்கு முஸ்லிமின் சொற்களே இடம்பெற்றுள்ளன)*

பொதுவான அறிஞர் பெருமக்களின் கருத்துப்படி - இதில் நான்கு சிந்தனாவழிகளும் அடங்கும் - இந்த ஹதீஸில், ஒளு செய்யுமாறு இடப்படும் கட்டளை ஒரு பரிந்துரையே; கடமை அல்ல. இதே ஹதீஸ் பின்வரும் இணைப்புடன் *ஸஹீஹ் இப்னு ஃகுஸைமாவில்* பதிவு செய்யப் பட்டுள்ளது. 'ஏனெனில், அது ஒளு செய்வது இரண்டாவது முறை அவருக்கு கூடுதல் சக்தி அளிக்கும்.' *(ஸஹீஹ் இப்னு ஃகுஸைமா 221)*

மேலும், இமாம் தஹாவி தம்முடைய சுய அறிவிப்புத் தொடர் மூலம், அன்னை ஆயிஷா (ரழி) கூறியதை அறிவிக்கிறார்: 'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) உடலுறவுகொண்டபின், ஒளு செய்யாமல் மீண்டும் அதில் ஈடுபடுவார்கள்...' *(ஷரஹ் மஆனி அல்-ஆஸார் 774)*

**ஈ. அடுத்தடுத்த உடலுறவுகளுக்கிடையே பாலுறுப்புகளைக் கழுவுவது அவசியமா?**

ஒருவர் இரண்டாம் முறை உடலுறவுகொள்ளுமுன் ஒளு செய்ய இயலாவிட்டாலும், குறைந்தபட்சம் தன் பாலுறுப்புகளையாவது கழுவிக்கொள்ள வேண்டும். ஒருவர் இன்னொரு மனைவியுடன் உடலுறவுகொள்ள நாடினால், பாலுறுப்புகளைக் கழுவுதல் மிகவும் வலியுறுத்தப்படுகிறது என இமாம் நவவி கூறுகிறார். *(அல்-மின்ஹாஜ் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் ப.372)*

**7. உடலுறவு இரகசியங்கள்**

கணவனையும் மனைவியையும் ஒருவருக்கொருவர் ஆடைகளாக அல்லாஹ் ஆக்கியுள்ளான்: அவன் கூறுகிறான்:

أُحِلَّ لَكُم لَيلَةَ الصِّيَامِ الرَّفَثُ إِلَى نِسَائِكُم هُنَّ لِبَاسٌ لَّكُمْ وَأَنتُمْ لِبَاسٌ لَّهُنَّ

நோன்புகால இரவுகளில் உங்களுடைய மனைவிகளுடன் உடலுறவு கொள்வது உங்களுக்கு ஆகுமானதாக ஆக்கப்பட்டுள்ளது. அவர்கள் உங்களுக்கு ஆடைகளாவர். நீங்கள் அவர்களுக்கு ஆடைகளாவீர்... (குர்ஆன் 2:187)

ஓர் ஆடை நீளமாகவும், முழுமையாகவும், தாராளமாகவும் இல்லாவிட்டாலோ, ஓட்டைகளும் கிழிசல்களுமாய் இருந்தாலோ அது மானத்தை மறைக்கத் தகுதியானதல்ல என்பதை நாம் அறிவோம். அதேபோல், தம்பதியரும் ஒருவருக்கொருவர் ஆடைகளாவர். அவர்கள் ஒருவருக்கொருவர் இரகசியம் காக்கத் தவறினால், தங்களின் கடமை நிறைவேற்றத்தில் தவறுகிறார்கள் என்று பொருள். தாம்பத்திய உறவு என்பதே வாக்குறுதி, நம்பிக்கை மற்றும் இரகசியத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. எனவே, இந்த வாக்குறுதி மற்றும்

நம்பிக்கையின் அடிப்படையில் துணைவர் வெளிப்படுத்தும் இரகசியங்களை மறைத்துவைப்பது தம்பதியர் இருவரின் மீதும் கடமையாகும்.

பாலுறவு விஷயங்களில் இரகசியம் பேணுதல் அதிக முக்கியத்துவம் பெற்றது. கணவனும் மனைவியும் தங்கள் பாலுறவு இரகசியங்களைப் பிறரிடம் வெளிப்படுத்துவது திட்டவட்டமாகத் தடைசெய்யப் பட்டுள்ளது *(ஹராம்)*. அது அல்லாஹ்வின் தூதரால் அழுத்தம் திருத்தமாகக் கண்டித்துரைக்கப்பட்டதொரு மானங்கெட்ட, விலக்கப்பட்ட செயலாகும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாக அபூ சயீத் அல்-ஃகுத்ரி (ரழி) அறிவிக்கிறார்:

إِنَّ مِنْ أَشَرِّ النَّاسِ عِنْدَ اللَّهِ مَنْزِلَةً يَوْمَ الْقِيَامَةِ الرَّجُلَ يُفْضِي إِلَى امْرَأَتِهِ وَتُفْضِي إِلَيْهِ ثُمَّ يَنْشُرُ سِرَّهَا

தீர்ப்பு நாளன்று அல்லாஹ்வின் பார்வையில் மனிதர்களிலேயே மிகக் கொடியவர் யாரெனில், அந்த மனிதர் தம் மனைவியுடன் உடலுறவு கொண்டு அவளும் அவருடன் உடலுறவுகொண்டுவிட்ட பின் அவளின் இரகசியத்தை வெளிப்படுத்துபவர். (*ஸஹீஹ் முஸ்லிம்* **1437**)

பாலுறவு இரகசியங்களை வெளிப்படுத்துவதற்கு எதிரான எச்சரிக்கை ஆண்களுக்கு மட்டுமின்றி, பெண்களுக்கும் பொருந்தும். படுக்கை அறையில் நடப்பதைப் பிறருடன் கலந்துரையாடுவது விலக்கப்பட்டது. பாலுறவு விவகாரங்கள் தனிப்பட்ட விஷயங்கள். எனவே, அவற்றை அதே அந்தஸ்தில் வைத்துக் காக்கவேண்டும். அவற்றைப் பிறரிடம் பகிர்ந்துகொள்வதால், அவர்களுடைய மனதுக்குள் எண்ணங்கள் பல உருவாகி, இதயத்தின் விபச்சாரத்திற்கு வழிவகுக்கும் சாத்தியம் உள்ளது. மேலும், அது துணைவருக்குக் கேடு விளைவிக்கும் ஒரு வழியுமாகும். ஏனெனில், அவர் அல்லது அவள் தங்களின் பாலியல் நடத்தை விவரங்களைப் பிறரிடம் வெளிப்படுத்துவதை விரும்பமாட்டார்.

அஸ்மா பின்த் யஸீது (ரழி) அறிவிக்கிறார்:

كنا عندَ رَسول الله صَلى اللهِ عَلَيه وَ سَلمَ الرجَال وَ النسَاء فَقَالَ: عَسى رَجل يحدث بمَا يَكون بَينَه وَ بَينَ أَهله أَو عَسى امرَأَة تحدث بمَا يَكون بَينَها وَ بَينَ زَوجها ، فَأَرَمَ القَوم ، فقلت: أَي وَ الله يَا رَسولَ الله ، انهم لَيَفعَلونَ وَ انهن لَيَفعَلن ، قَالَ: فَلَا تَفعَلوا فَان مَثَل ذلكَ مَثَل شَيطَان لَقيَ شَيطَانَة في ظَهر الطريق فَغَشيَها وَ الناس يَنظَرون

*நாங்கள் ஆண்களும் பெண்களுமாக அல்லாஹ்வின் தூதருடைய சமூகத்தில் அமர்ந்திருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: 'ஓர் ஆண் தனக்கும் தன் மனைவிக்கும் இடையில் நடக்கும் விஷயத்தைப் (பிறரிடம்) பேசுவாரா? மற்றும், ஒரு பெண் தன் கணவனுடன் ஈடுபடும் விஷயத்தைப் (பிறரிடம்) பேசுவாரா?' மக்கள் அமைதியாக இருந்தனர். பதில் எதுவும் கூறவில்லை. எனவே, நான் கூறினேன், 'ஆம், அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீது ஆணையாக, ஆண்களும் இதைச் செய்கின்றனர். பெண்களும் இதைச் செய்கின்றனர்.' அதற்கு அவர்கள் கூறினார்கள்: 'அவ்வாறு செய்யாதீர். ஏனெனில், அதற்கான உவமை, ஓர் ஆண் ஷைத்தான் ஒரு பெண் ஷைத்தானை சாலையின் நடுவில் சந்திப்பது போன்றது. அங்கே மக்கள் பார்த்துக்கொண்டிருக்க அவன் அவளுடன் உடலுறவு கொள் கிறான்.' (துபரானியின் அல்-முஃஜம் அல்-கபீர் **24:162-163**. இதையொத்த அறிவிப்புகள் சுனன் அபூ தாவூத் மற்றும் முஸ்னத் அஹ்மதில் பதிவுசெய்யப் பட்டுள்ளன)*

தங்கள் உடலுறவுச் சந்திப்புகள் குறித்து நண்பர்களிடம் வர்ணனை அளிக்கும் போக்கு சிலரிடம் உள்ளது. சில ஆண்கள், படுக்கையில் தங்களுடைய செயல்திறன் குறித்தும் தங்கள் மனைவிகள் தங்களிடம் ஈடுபடும் விஷயங்கள் குறித்தும் தம்பட்டம் அடித்துக்கொள்வார்கள். இதே போல், சில பெண்கள் தங்கள் கணவன்களுடனான உடலுறவு குறித்து பெருமை பேசிக்கொள்வதில் மகிழ்ந்து திளைப்பார்கள். இதுபோன்றவர்களைக் கட்டுப்படுத்துவதற்கு மேற்கூறிய நபிமொழி போதுமானவை. அவர்கள் தீர்ப்பு நாளன்று அல்லாஹ்விடம் பதில் அளிக்கவேண்டும் என்பதை உணர்ந்து, இதுபோன்ற வெட்கங்கெட்ட நடத்தைகளை முற்றிலும் ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும்.

பாலுறவு இரகசியங்களை வெளிப்படுத்துவதற்கான இந்தத் தடை, வழக்கமான சூழ்நிலைகளுக்கே கூறப்பட்டுள்ளது. எனினும், ஒருவர் தம் தாம்பத்திய விவகாரங்களைக் கலந்தாலோசிக்க வேண்டிய உண்மையான தேவை இருப்பின் - உதாரணமாக, மார்க்க வழி காட்டுதல் அல்லது ஆலோசனை கேட்கும்பொழுது; அல்லது, ஒருவர் அநீதியால் பாதிக்கப்பட்டு, அதிகாரத்தில் உள்ளவர்களிடம் புகார் அளிக்கும்பொழுது - இந்தத் தடைக்கு தற்காலிக விலக்கு உண்டு. ஆயினும், இதிலும்கூட, கூறத் தேவையில்லாத வர்ணனைகளை வெளிப்படுத்துவது கூடாது. (காண்க: *அல்-மின்ஹாஜ் ஷரஹ் சஹீஹ் முஸ்லிம்*, ஹதீஸ் எண்: **1437**இன் விரிவுரை)

# 10

# உடலுறவுச் சட்டங்களும் ஒழுங்குமுறைகளும்: ஒரு சுருக்கமான பார்வை

இந்தப் புத்தகத்தில் கலந்துரையாடப்பட்டுள்ள விஷயங்களின் ஒரு சுருக்கப் பார்வையாக, பின்வரும் சாரம் வழங்கப்பட்டுள்ளது. இஸ்லாமியரீதியாக விரும்பத்தக்க *(முஸ்தஹப்)*, விரும்பத்தகாத *(மக்ரூஹ்)* மற்றும் தடைசெய்யப்பட்ட *(ஹராம்)* வகைகளில் அவை வரிசைப்படுத்தப்படுள்ளன.

**விரும்பத்தக்க செயல்கள்**

1. உள்ளத்தில் சரியான எண்ணங்களுடனும் நோக்கங்களுடனும் உடலுறவில் ஈடுபடுதல்
2. மித உணர்வுடன் உடலுறவை அணுகுதல்
3. ஓய்வும் இயல்புணர்ச்சியும் சமநிலை கொண்டுள்ளபோது உடலுறவில் ஈடுபடுதல்.
4. உள மற்றும் உடல்ரீதியாக உடலுறவுக்குத் தயாராதல்
5. சுத்தம், தற்சுகாதாரம் ஆகியவற்றைப் பேணுவதில் கவனம்.
6. மனைவி தன் கணவனுக்காக அலங்கரித்துக்கொள்ளுதல்.
7. மனைவி தன் கணவன்முன் பெண்மையை வெளிப்படுத்துதல்.
8. கணவன் தன் மனைவியிடம் பாசம் காட்டி, உடலுறவுக்குமுன் இதமான பேச்சுகளைப் பரிமாறுதல்.
9. உடலுறவுக்குமுன், தம்பதியருக்கிடையில் முன்விளையாட்டு நிகழ்வது.
10. பாலுறவின் போது, குர்ஆன் பிரதிகளையும் இதர இஸ்லாமிய நூல்களையும் மறைத்துவைத்தல்.
11. பல்வேறு துஆக்களை ஓதுதல்.

12. மனைவி உச்சநிலையை அடையும்வரை கணவன் காத்திருப்பது.

13. உடலுறவுக்குப்பின் ஒருவர் தம் துணைவரிடம் பாசமும் கனிவும் காட்டுதல்.

14. உடலுறவுக்குப்பின் சுத்தம்செய்து கொள்ளுதல்.

15. உறங்குவதற்கு, உண்பதற்கு அல்லது மீண்டும் உடலுறவு கொள் வதற்குமுன், குளித்துத் தூய்மையாதல்; அல்லது, ஒளு செய்தல்; அல்லது, குறைந்தபட்சம் தம் பாலுறுப்புகளையாவது கழுவுதல்.

## தடைசெய்யப்பட்ட மற்றும் விரும்பத்தகாத செயல்கள்

1. தகுந்த காரணமின்றி மனைவி தன் கணவனுடன் உடலுறவுக்கு இசைய மறுப்பது.

2. தகுந்த காரணமின்றி மனைவியின் உடலுறவு உரிமையை கணவன் கொடுக்க மறுப்பது.

3. மாதவிடாயின் போதும் பேறுகாலத் தொடக்கின் போதும் புணர்தல்.

4. (ஹனஃபி சிந்தனாவழியின்படி) கணவன் மனைவியின் பாலை தெரிந்தே குடிப்பது.

5. முன்விளையாட்டின் போது உணவைப் பயன்படுத்துவது (விரும்பத்தகாதது).

6. முன்விளையாட்டின் போது பாலியல் துணைக்கருவிகளைப் பயன்படுத்துவது.

7. கட்டிப்போடுதலும் கசையடியும்.

8. இசையுடன் சேர்ந்த பாலுணர்வைத் தூண்டும் நடனம்.

9. கிளர்ச்சி அடைவதற்காக ஆபாசப் படங்களைப் பார்த்தல்.

10. மாற்றுப் பாலர் உடையணிதல்

11. மலஜலத்தின் மூலம் பாலியல் இன்பம் பெறுவது.

12. பொதுவிடத்தில் பாசத்தை வெளிப்படுத்துதல்; பிறர் முன்னிலை யில் உடலுறவு.

13. தம்பதியர் ஒருவருக்கொருவர் உடலுறவுப் புகைப்படங்கள் எடுப்பது.

14. உடலுறவின் போது, மூன்றாவது ஒருவரை கற்பனை செய்து கொள்வது.

15. ஆசனவாய் உறவு.

16. வாய்வழி உறவு. (வாய்க்குள் பாலுறுப்பு திரவங்கள் செல்லாத போது, விரும்பத்தகாதது; வாய்க்குள் பாலுறுப்புத் திரவங்கள் சென்றுவிடும் அளவுக்கு ஈடுபட்டிருப்பின், தடைசெய்யப் பட்டது)

17. ஒருவர் தற்புணர்ச்சி செய்து, தம் துணைவருடன் தொலைப்பேசி வழி பாலுறவு.

18. உடலுறவு இரகசியங்களை பிறரிடம் வெளிப்படுத்துதல்.

11

# திருமணத்தின் முதலிரவுச் சட்டங்களும் ஒழுங்குகளும்

தாம்பத்திய வாழ்வில் மிக முக்கியமான இரவு, திருமணத்தின் முதலிரவு *(லைலத் அல்-ஸுஃபாஃப்)* தான். ஒருவர் இந்த இரவில் சரியான ஒழுக்கநெறியையும் ஒழுங்குகளையும் கடைப்பிடிக்கத் தவறினால், தன் துணைவர் மீது நெடுங்காலம் நீடிக்கும் வகையில் பாதகமான தாக்கம் ஏற்படுத்தக்கூடும். ஏனெனில், பெரும்பாலும் முதல் மனப் பதிவே முற்றிலும் நீடிக்கும் மனப்பதிவாகும்.

தம்பதியர் இருவரும் தங்கள் வாழ்வில் புத்தம் புதியதொரு அத்தியாயத்தைத் தொடங்குகின்றனர். தங்களுக்கு எதிர்காலம் எவ்வாறு அமையப்போகிறது என்பதை அறியாதிருக்கின்றனர். இயல்பாகவே அவர்கள் அச்சமும் ஐயமும் பதற்றமும் கவலையும் கொண்டிருப்பார்கள். அதேவேளை, ஒருவரையொருவர் அறிந்துகொள்வதற்கும் மண வாழ்வை அருள்மகிழ்வுடன் தொடங்குவதற்கும் துடிப்புடனும், ஆசை யுடனும் இருப்பார்கள். கருத்தியல்ரீதியாக, அவர்கள் ஒருவருக் கொருவர் பழக்கமில்லாத அந்நியர்களாகவே இருப்பார்கள்; அவர்க ளிடையே ஏற்கனவே நெருங்கிய உறவு எதுவும் இருந்திருக்காது. எனவே, வெட்க உணர்வும் ஒருவகை அந்நியத் தன்மையும் நிலவுவது இயல்புதான்.

இந்தச் சூழ்நிலையில், கணவன் மனைவி இருவரும் ஒருவருக் கொருவர் விவகாரங்களை எளிதாக்குவதற்கு இயன்றஅளவு முயற்சி எடுக்கவேண்டும். ஒருவரையொருவர் மிகுந்த பண்புடனும் பரிவுடனும் பாசத்துடனும் நடத்துதல் வேண்டும். இயல்பாகவே மனைவிக்கு அச்சம், நாணம் எல்லாம் அதிகமாக இருக்கும். அதிகமான தயக்கம்கூட இருக்கும். எனவே, கணவன் முதலிரவில் கணவன் எனும் வகையில் கூடுதல் பொறுப்புள்ளவனாக இருக்கின்றான். நற்பண்பு மற்றும் நட்புச்சூழலை ஏற்படுத்தி, அவளுடைய அச்சத்தையும் தயக்கத்தையும்

போக்கி இயல்பாக இருக்கச் செய்வதில் அவன் கவனம் செலுத்த வேண்டும். மனம் இளகிய உரையாடலில் அவளை ஈடுபடுத்துவதன் மூலம், அவளிடம் பரிவும் மிகுந்த பண்பும் காட்ட வேண்டும்.

### 1. சலாம் கூறி வரவேற்று துஆ ஓதுதல்

புதுமணத் தம்பதியர், ஒருவருக்கொருவர் *'அஸ்ஸலாமு அலைக்கும் வ ரஹ்மதுல்லாஹி வ பரகாத்துஹு'* (அல்லாஹ்வின் சாந்தியும் கருணையும் அருளும் உங்கள் மீது இறங்கட்டுமாக ) என்று இஸ்லாமிய மரபில் முகமன் பரிமாறிக்கொண்டபின், கணவன் தன் மனைவியின் நெற்றி யில் கைவைத்துப் பின்வரும் துஆவை ஓதவேண்டும்:

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَهَا وَخَيْرَ مَا جَبَلْتَهَا عَلَيْهِ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهَا وَ شَرِّ مَا جَبَلْتَهَا عَلَيْهِ

ஒலிபெயர்ப்பு:

*அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக ஃகைரஹா வ ஃகைர மா ஜபல்தஹா அலைஹி வ அஊது பிக மின் ஷர்ரிஹா வ ஷர்ரி மா ஜபல்தஹா அலைஹ்.*

மொழிபெயர்ப்பு:

*'யா அல்லாஹ்! அவளின் நன்மையையும் அவளுள் நீ படைத்துள்ள நன்மையையும் நான் உன்னிடம் கேட்கிறேன். மேலும், அவளின் தீமை மற்றும் அவளுள் நீ படைத்துள்ள தீமையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.' (சுனன் அபூ தாவூத் 2153, சுனன் இப்னு மாஜா 1918, இந்த துஆவில் அபூ தாவூதின் சொற்களே இடம் பெற்றுள்ளன)*

இந்த துஆவில் ஆண் மட்டுமே சுட்டப்பட்டுள்ள போதிலும், இது சூசகமாகப் பெண்ணையும் சுட்டுவதாகவே உள்ளது. குறிப்பிட்ட விதத்தில் பெண்ணைச் சுட்டும் எந்தவொரு துஆவும், மறுதிசையில் ஆணைச் சுட்டுவதாகவும் எடுத்துக்கொள்ளலாம். எனவே, தன் கணவனை முதல் முதலில் காணும் மனைவியும் இந்த துஆவை ஓதலாம். சொற்களில், ஆண் பாலை சேர்த்துக்கொள்ள, லேசான மாற்றம் ஏற்படும்:

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَه وَخَيْرَ مَا جَبَلْتَه عَلَيْهِ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّه وَ شَرِّ مَا جَبَلْتَه عَلَيْهِ

ஒலிபெயர்ப்பு:

*அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக ஃகைரஹு வ ஃகைர மா ஜபல்தஹு அலைஹி வ அஊது பிக மின் ஷர்ரிஹி வ ஷர்ரி மா ஜபல்தஹு அலைஹ்.*

மொழிபெயர்ப்பு:

*'யா அல்லாஹ்! அவரின் நன்மையையும் அவருள் நீ படைத்துள்ள நன்மையையும் நான் உன்னிடம் கேட்கிறேன். மேலும், அவரின் தீமை மற்றும் அவருள் நீ படைத்துள்ள தீமையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.' (காண்க: பிரகாசமான பிரார்த்தனைகள் (ஆங்.) முஃப்தி தகீ உஸ்மானி. ப.64)*

இந்த துஆவின் பின்னணியில் உள்ள காரணம், அனைத்து மனிதர்களும் – நபிமார்களைத் தவிர – *ஷைத்தானின்* தூண்டுதலுக்கு ஆட்படக் கூடியவர்கள்; தீமையின் பக்கம் சாயும் இயல்பு உடையவர்கள். எனவே தான், தம்பதியர் ஒருவருக்கொருவர் தங்களுக்குள் இருக்கும் நன்மைக்காகப் பிரார்த்தித்து, தீமையிலிருந்து பாதுகாப்புத் தேடுமாறு ஊக்குவிக்கப்படுகின்றனர். இதன் மூலம், ஒருவரின் துணைவர் தீமையானவர் எனப் பொருளன்று. மாறாக, அவரின் துணைவரிடத்தில் – கணவனாக இருப்பினும், மனைவியாய் இருப்பினும் – இருக்கும் தீமையின் சாத்தியத்தைக் குறிக்கிறது.

## 2. தொழுகை

அபூ வாயில் அறிவிக்கிறார்: ஒருமுறை ஒரு மனிதர் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊதிடம் வந்து கூறினார்: 'நான் ஒரு பெண்ணைத் திருமணம் செய்தேன். எனினும் (எங்களுக்கிடையில்) சண்டை ஏற்பட்டுவிடுமோ என நான் அஞ்சுகிறேன்.' அதற்கு இப்னு மஸ்ஊத் (ரழி) இவ்வாறு பதிலளித்தார்: 'நீங்கள் அவளை அழைத்துவரும் பொழுது, இரண்டு ரக்ஆத்துகள் தொழுங்கள் (வேறொரு சமயம் இவ்வாறு கூறுகின்றார், அவளுடன் கூடும்பொழுது, அவள் உங்கள் பின்னால் நின்று இரண்டு ரக்ஆத்துகள் தொழுமாறு கூறுங்கள்'). பின்னர் இதை ஓதுவீராக, 'யா அல்லாஹ்! எங்களை நன்மையுடன் இணைப்பாயாக. மற்றும் எங்களைப் பிரிக்க நாடினால், நன்மையுடன் பிரிப்பாயாக.' (தபரானி, தம்முடைய *அல்-முஃஜம் அல்-கபீர்* 9:204, மற்றும் அப்து அல்-ரஸ்ஸாக், தனது *அல்-முஸன்னஃபில்* 6:83)

இவ்வாறு, தம்பதியர் முதலில் இரண்டு ரக்ஆத்துகள் தொழ வேண்டும். இதைக் கூட்டாகத் தொழுவதும்; இரவுநேரத் தொழுகை *(ஸலாத்துல் தஹஜ்ஜுத்)*, நன்றியுரைப்புத் தொழுகை *(ஸலாத்துல் ஷுக்ர்)* தேவைக்கான தொழுகை *(ஸலாத்துல் ஹாஜத்)* ஆகியவற்றின் கூட்டு *நிய்யத்து* செய்துகொள்வதும் விரும்பத்தக்கது. தம்பதியர் மீண்டும் *ஒளு* செய்யவேண்டியிருந்தால், அவர்கள் முதலில் *ஒளு* செய்து கொள்ள வேண்டும். தொழுது முடித்தபின், அல்லாஹ்வைப் புகழ்ந்து,

அவனுடைய தூதர் (ஸல்) மீது ஸலவாத் கூறவேண்டும். பின்னர், இந்த மாபெரும் திருமண அருட்கொடையைத் தங்களுக்கு நல்கியதற்காக நன்றிசெலுத்தவேண்டும். மேலும், தங்களுடைய ஒன்றுசேர்தலை நன்மை, செழிப்பு, பரஸ்பர அன்பு, இறைபக்தியுடைய குழந்தை ஆகியவற்றுடன் சிறப்பித்து அருளுமாறு கேட்கவேண்டும். எனினும், மிகச்சிறந்த துஆ எதுவெனில், ஒருவர் தம் உள்ளத்திலிருந்து தேவையை உணர்ந்து அல்லாஹ்வின் முன்னிலையில் தான் அடிமையாக நின்று கொண்டிருப்பதை உணர்ந்து கேட்பதே ஆகும்.

### 3. இதமான பேச்சுகள்

தம்பதியர் தொழுது துஆ செய்தபின், இதமான உரையாடலைத் தொடங்குவதன் மூலம், ஒருவரையொருவர் நெருக்கமாக அறிந்து கொள்ளவும் ஒருவருக்கொருவர் உணர்வுகளைப் புரிந்துகொள்ளவும் முயலவேண்டும். அவர்கள் முதலில் சிறிது மார்க்கப் பேச்சுகளில் (எடுத்துக்காட்டாக, இஸ்லாத்தில் திருமணத்தின் நோக்கங்கள், குறிக்கோள்கள் குறித்து கலந்துரையாடுதல்) ஈடுபடுவது விரும்பத் தக்கது.

### 4. உடலுறவு

முதலிரவு அன்று உடலுறவில் ஈடுபடுவது அவசியமல்ல என்பதைக் கவனத்தில்கொள்வது முக்கியம். கணவன் தன் மனைவியின் கன்னித் தன்மையைக் கலைப்பதற்கு அவசரப்படக் கூடாது. மாறாக, மிகுந்த அமைதியுடன் இந்த விஷயத்தை அணுகுதல் வேண்டும். அதற்குச் சில நாள்கள் ஆனாலும் பரவாயில்லை. புதுமணத் தம்பதியர் உடலுறவு கொள்வதற்குத் தங்கள் வாழ்நாள் முழுக்க அவகாசம் இருக்கிறது. எனவே, இந்த விஷயத்தில் அவசரப்படத் தேவையில்லை. முதலிரவில் அதிகமான நேரத்தை ஒருவரையொருவர் அறிந்துகொள்வதற்கும், தங்கள் வாழ்வின் நோக்கம் குறித்தும் தங்கள் மணவாழ்வு எவ்வாறு இஸ்லாமிய போதனைகளுக்கு ஏற்ப அமையவேண்டும் என்பது குறித்தும் ஒருவருக்கொருவர் கருத்துப் பரிமாறிக்கொள்வதற்கு செலவிடவேண்டும். எனினும், தங்களுக்கு வசதிப்பட்டால், அவர்கள் நெருக்கமடைந்து கொள்ளலாம்.

நெருக்கத்தினால் உடலுறவு ஏற்படுமாயின், புணர்ச்சியின் போது கணவன் மிகுந்த மென்மை காட்டவேண்டும். கன்னியருக்கு உடலுறவின் போது கணிசமான பதற்றமும் வலியும் உண்டாகலாம். கணவன் இதைக் கருத்தில் வைப்பது அவசியம். கணவன் முதலிரவிலேயே புணராமல் இருப்பது, அவருடைய பலவீனத்தையோ பாலியல் குறைபாட்டையோ காட்டுவதில்லை; ஏனெனில், முதலிரவு அன்று நாணத்தோடு அல்லது

பதற்றமாக இருப்பது ஆண்களுக்கும் இயல்புதான் என்பதால், அது அவர்களின் பாலுறவுத் திறனை அன்று பாதிக்கலாம் என அறிஞர்கள் கூறியுள்ளனர். ஆகவே இன்னொரு சந்தர்ப்பத்தில் தம்பதிகள் முயலலாம். அதற்கு சில நாள்கள்கூட ஆகலாம். தம்பதியர் இருவரும் இந்த மென்மையான மற்றும் நுட்பமான விஷயத்தைப் பொறுமையோடும் சகிப்போடும் அணுகுதல் வேண்டும். இயன்றளவு விஷயங்களை ஒருவருக்கொருவர் எளிதாக்கிக் கொடுக்க உதவவேண்டும். (*உசூல் அல்-முஆஷரா அல்-ஸவ்ஜிய்யா ப.69*)

இதே போல், கணவன் முதலிரவில் எடுக்கும் பாலுறவு முனைப்புகளுக்குத் தன் மனைவி முழுமையாக மறுமுனைப்பு காட்டவேண்டும் என அவர் எதிர்பார்க்கக் கூடாது. பெண் ஆணைவிட அதிக நாணம் கொண்டவள். இயல்பாகவே, அவள் மெதுவாகத்தான் மறுமுனைப்பு காட்டுவாள். எனவே கணவன் படிப்படியாக செல்வதற்கு முயல வேண்டும். அதற்கேற்ப மனைவியும் ஒத்துழைக்க வேண்டும். இது தொடர்ந்து, நிறைவான மகிழ்ச்சிக்கு வழிவகுக்கும். (மேலது)

### 5. தீய ஐயங்கள்

கணவனுக்கான ஒரு மிக மிக முக்கியமான எச்சரிக்கை: தன் மனைவியின் கன்னி கலைந்துள்ளதாகத் தெரிந்தால், அவர் ஒருபோதும் அவள் மீது தீய ஐயங்கள் கொள்ளக்கூடாது. பிறர் குறித்த அடிப்படையற்ற சந்தேகங்களும் தீய யோசனைகளும் இஸ்லாத்தில் திட்டவட்டமாகத் தடைசெய்யப்பட்டுள்ளன. அது ஒரு பெரும்பாவம். அல்லாஹ் கூறுகிறான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اجْتَنِبُوا كَثِيرًا مِّنَ الظَّنِّ إِنَّ بَعْضَ الظَّنِّ إِثْمٌ

நம்பிக்கைகொண்டவர்களே! அதிகமான சந்தேகங்களில் இருந்து விலகியிருங்கள். சில சந்தேகங்கள் பாவமானவை... (குர்ஆன். 49:12)

பெண்ணின் கன்னிச்சவ்வு - அதாவது, கன்னியுடைய யோனியின் நுழைவாயிலைப் பகுதியாக மூடியிருக்கும் திசு மடிப்பு (*ஹைமன்*) பல வகைகளில் கிழிந்துவிடலாம். பலத்த மாதவிடாய்ப் போக்கு, நெடுங்காலமாக நோய்வாய்ப்பட்டிருத்தல், கீழே விழுதல், மிகுதியாகக் குதித்தல், குதிரைச் சவாரி, மிதிவண்டி ஓட்டுதல் மற்றும் சில விளையாட்டுச் செயல்பாடுகள் இதற்கான காரணங்களாக உள்ளன. உண்மையில், ஹனஃபி சிந்தனாவழியின் பிரகாரம், ஒரு பெண் கடந்த காலத்தில் உடலுறவு கொண்டிருந்தும் அது குறித்து இப்பொழுது அறியப்படாமல் மக்கள் அவளைக் கன்னி என்று கருதினால், அவள்

நடைமுறை ரீதியான கன்னியாகவே கருதப்படுவாள். ஏனெனில், இஸ்லாமியச் சமுதாயத்தில் கன்னித்தன்மை என்பது ஓர் அளப்பரிய சமூக அந்தஸ்து கொண்டது. இந்நிலையில், ஒரு பெண் தன்னுடைய கடந்தகால பாவத்திற்காக பாவமீட்சி செய்துவிட்டதாகக் கருதப்படும் விஷயத்தை வைத்து அவளுடைய கண்ணியத்தைக் கறைபடுத்துவது தவறு.

மேற்கூறிய வழிகாட்டுதலின் பிரகாரம் முதலிரவு கழிக்கப்பட்டால், அது ஓர் அருள்மகிழ்வான மணவாழ்வின் பரிபக்குவத் தொடக்கமாக அமையும், *இன்ஷா அல்லாஹ்.*

# 12

# முடிவுரை

முந்தைய பக்கங்களில், கணவன்-மனைவிக்கு இடையிலான பாலுறவு விஷயங்களைக் குர்ஆன், நபிமொழிகள், செவ்விய மற்றும் சமகால அறிஞர்களின் நூல்கள் ஆகியவற்றின் அடிப்படையில் விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருந்தது. இவ்வளவு நுட்பமான, நயமான தலைப்பை வெளிப்படையான முறையில் கலந்துரையாடுவது எளிதாக இருக்கவில்லை. ஏனெனில், இந்தத் தலைப்பின் இயல்பும் மனிதனின் இயற்கையான நாண உணர்வும்தான் காரணங்கள்.

எனினும், பல செவ்விய மற்றும் சமகால அறிஞர்கள் இவ்விஷயங் களைக் கலந்துரையாடுவது மட்டுமன்றி, அதன் நுணுக்கமான விவரங் களை விளக்கியுள்ளதைக் கண்ட பிறகுதான், நான் இந்தப் பயணத்தில் இறங்கினேன். அப்போது, 'நிச்சயமாக, உண்மை(க்கு விளக்கமளிக்கும்) விஷயத்தில் அல்லாஹ் வெட்கப்படுவதில்லை' எனும் அல்லாஹ்வின் வாக்கையும், தாபியீ முஜாஹித் அவர்கள் கூறிய 'வெட்கம் நிறைந்த வரால் அல்லது ஆணவம் கொண்டவரால் புனித அறிவைப் பெற்றுக் கொள்ள முடியாது' எனும் வாசகத்தையும் நான் மனத்தில் வைத்துக் கொண்டேன். முஸ்லிம்கள் தங்கள் வாழ்வின் அனைத்துப் பகுதிகள் தொடர்பாகவும் இஸ்லாமிய அறிவைத் தேடிக்கொள்வது தலையாய முக்கியத்துவம் கொண்டது என நான் உணர்ந்தேன். மேலும், சில பண்பாட்டு சம்பிரதாயத் தடைகள் அல்லது கட்டுப்பாடுகள் காரண மாக, அவர்கள் சில அம்சங்களைத் தொடாமல் விட்டுச்செல்வது கூடாது எனவும் எண்ணினேன்.

நான் எதைச் செய்ய எண்ணி புறப்பட்டேனோ, அதை எட்டுவதில் சிறிதளவாவது வெற்றிபெற்றுள்ளேன் என நம்புகிறேன். இந்தப் படைப்பு, மணமான தம்பதிகளுக்கு *இன்ஷா அல்லாஹ்* மிகுந்த பலனளிக்கும் ஊற்றாக விளங்கவேண்டும் என நான் பிரார்த்திக்கிறேன். இதை முழுக்க, முழுக்க அவனுக்காகவே ஆக்குமாறு அல்லாஹ்விடம் இறைஞ்சுகிறேன். இதில் ஏதேனும் குற்றங்குறைகள் இருப்பின் அவனிடம் பாவமன்னிப்புக் கோருகிறேன். *ஆமீன் யா ரப் அல்-ஆலமீன்.*

# உசாத்துணை

அல்-அய்னி, பத்ருத்தீன் மஹ்மூத் இப்னு அஹ்மது. *உம்தத் அல்-காரி ஷரஹ் சஹீஹ் அல் புஹாரி* (புஹாரியின் *அல்-ஜாமிஃ அல்-சஹீஹி*ன் விரிவுரை). 16 தொகுதிகள். பெய்ரூட்: தார் அல்-ஃபிக்ர், 1422/2002.

அல்-அஸ்கலானி, அஹ்மத் இப்னு அலி இப்னு ஹஜர். *ஃபத்ஹ் அல்-பாரி ஷரஹ் சஹீஹ் அல்-புஹாரி* (புஹாரியின் *அல்-ஜாமிஃ அல்-சஹீஹி*ன் விரிவுரை). ப.ஆ., முஹம்மது ஃபுஆத் அப்த் அல்-பாகி. 13 தொகுதிகள். ரியாத்: தார் அல்-சலாம், 1421/2000.

அல்-இமாதி, அபுல் சவூது முஹம்மத் இப்னு முஹம்மது. *இர்ஷாத் அல்-அக்ல் அல்-சலீம் இலா மஸாயா அல்-குர்ஆன் அல்-கரீம்* (மறுபெயர்: *தஃப்சீர் அபீ அல்-சஊது*). 9 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்-அரபி, 1414/1994.

அல்-கஸ்வினி, முஹம்மத் இப்னு யஸீத் இப்னு மாஜா. *அல்-சுனன்*. பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்-அரபி, 1421/2000.

அல்-கஸானி, அலாவுத்தீன் அபூ பக்கர் இப்னு மஸ்ஊத். *பதாயி அல்-சனாயி ஃபீ தர்தீப் அல்-ஷராயி*. 7 தொகுதிகள். குவெட்டா, பாகிஸ்தான்: மக்தபா ராஷிதிய்யா, 1410/1990.

அல்-காரி, அலீ இப்னு சுல்தான். *மிர்கத் அல்-மஃபாதீஹ் ஷரஹ் மிஷ்காத் அல்-மஸாபிஹ்* (தப்ரீஸ் இயற்றிய *மிஷ்காத் அல்-மஸாபீஹி*ன் விரிவுரை). 11 தொகுதிகள். முல்தான்: மக்தபா இம்தாதிய்யா, 1390/1970.

அல்-குர்ஷி, முஹம்மத் இப்னு அப்தில்லாஹ், மற்றும் அலீ இப்னு அஹ்மத் அல்-சாயிதி அல்-அதவி. *அல்-குர்ஷி அலா முஃக்தஸர் சைய்யிதி ஃகலீல்* (கலீலின் *முஃக்தஸரு*க்கு ஃகுர்ஷீ அளித்துள்ள விரிவுரை. இந்த விரிவுரைக்கு விரிவுரை அளித்திருப்பவர், அலீ அல்-அதவி). 8 தொகுதிகள். பெய்ரூத்: தார் அல்-ஃபிக்ர், பு.பதி.

அல்-சவ்வாஃப், முஹம்மது ஷரீஃப். *அல்-ஹயாத் அல்-ஸவ்ஜிய்யா மின் மின்ஸார் அல்-ஷரீஆ அல்-இஸ்லாமிய்யா*. டெமஸ்கஸ்: பைத் அல்-ஹிக்மா, 1421/2001.

அல்-சனஆனி, அப்துர் ரஸ்ஸாக் இப்னு ஹுமாம். *அல்-முசன்னஃப்.* ப.ஆ., நஸீர் அல்-சாயிதி. 11 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்-அரபி, 1423/2002.

அல்-சஹரன்பூரி, கலீல் அஹ்மது, மற்றும் முஹம்மது ஸகரிய்யா அல்-கந்த்லவி. *பத்ல் அல்-மஜ்ஹூத் ஃபீ ஹால் அபீதாவூத்* (சஹரன்பூரியின் விரிவுரையுடன் அபூதாவூதின் *அல்-சுனன்*. அடிக்குறிப்புகள்: முஹம்மது ஸகரிய்யா அல்-கந்த்லவி). 20 தொகுதிகள். கெய்ரோ: தார் அல்-ரய்யான் லில் துராஸ், 1408/1988.

அல்-சிஜிஸ்தானி, அபூ தாவூத் சுலைமான் இப்னு அல்-அஷ்அத், *கிதாப் அல்-சுனன்.* ப.ஆ., முஹம்மத் அவ்வாமா. 5 தொகுதிகள். பெய்ரூத்: முஅஸ்ஸஸத் அல்-ரய்யான், மக்கா: அல்-மக்தபா அல்-மக்கியா, மற்றும் ஜித்தா: தார் அல்-கிப்லா, 1419/1998.

அல்-சுயூதி, ஜலாலுத்தீன் அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்கர். *தாரீஃக் அல்-ஃகுலஃபா.* ப.ஆ., முஹம்மது முஹைய்யத்தீன் அப்துல் ஹமீத். பெய்ரூத்: அல்-மக்தபா அல்-அஸ்ரிய்யா, 1423/2003.

அல்-தகபி, ஷம்ஸுத்தீன் முஹம்மத் இப்னு அஹ்மது. *சியார் அஃலம் அல்-நுபலாஃ.* பதிப்பு மேற்பார்வை: ஷுஅய்ப் அல்-அர்னாஊத். 25 தொகுதிகள். பெய்ரூத்: முஅஸ்ஸஸா அல்-ரிஸாலா, 1410/1990.

அல்-தசூகி, முஹம்மது அரஃபா, மற்றும் அஹ்மத் இப்னு முஹம்மது அல்-தர்தீர். *ஹாஷியா அல்-தசூகி அலா அல்-ஷரஹ் அல்-கபீர்* (கலீலின் முஃக்தஸருக்கு தர்தீர் அளித்துள்ள விரிவுரை. இந்த விரிவுரைக்கு விரிவுரை அளித்திருப்பவர்: தசூகி. அடிக்குறிப்புகள்: இல்லிஷ் மாலிகி). 4 தொகுதிகள். பெய்ரூத்: தார் அல்-ஃபிக்ர், 1423/2002.

அல்-தபரானி, சுலைமான் இப்னு அஹ்மது. *அல்-முஃஜம் அல்-கபீர்.* ப.ஆ., ஹம்தி அப்துல் மஜீத் அல்-சலஃபி. 25 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்- அரபி, இரண்டாம் பதிப்பு, பு.பதி.

அல்-தஹாவி, அபூ ஜாஃபர் அஹ்மத் இப்னு முஹம்மது. *ஷரஹ் மஆனி அல்-ஆஸார்.* ப.ஆ., மற்றும் விளக்கக் குறிப்புகள்: முஹம்மது ஸஹ்ரி அல்-நஜ்ஜார் மற்றும் முஹம்மது சையித் ஜாதுல் ஹக். 4 தொகுதிகள். பெய்ரூத்: ஆலம் அல்-குதுப், 1414/1994.

அல்-தாரகுத்னி, அலீ இப்னு உமர், மற்றும் ஷம்ஸுல் ஹக் அஸீமாபாதி. *அல்-சுனன்* (தாரகுத்னியின் *அல்-சுனன்.* உடன் அஸீமாபாதியின் அடிக்குறிப்புகள் *அல்-தஃலீக் அல்-முக்னி அலா அல்-தாரகுத்னி* அடியில் அச்சிடப்பட்டுள்ளன). 4 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்- அரபி, 1413/1993.

அல்-திர்மிதி, முஹம்மத் இப்னு ஈஸா இப்னு சவ்ரா. *அல்-ஜாமிஃ அல்-சுனன்.* ப.ஆ., மற்றும் விரிவுரை: அஹ்மது முஹம்மது ஷாகிர். 5 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்- அரபி.

— *ஷமாயில் அல்-நபி.* ப.ஆ., மாஹிர் யாசீன் ஃபஹ்ல். பெய்ரூத்: தார் அல்-கர்ப் அல்-இஸ்லாமி, 2000.

அல்-நவவி, யஹ்யா இப்னு ஷரஃப், அபூ இஸ்ஹாக் அல்-ஷிராஸி, மற்றும் தகீயுத்தீன் அல்-சுப்கி. *அல்-மஜ்மூஃ ஷரஹ் அல்-முஹத்தபி* (நவவியின் விரிவுரையுடன் அச்சிடப்பட்டுள்ள ஷிராஸியின் *அல்-முஹத்தப்.* இதை நிறைவுசெய்யும் படைப்பு, அல்-சுப்கியின் துணைஉரை *தக்மிலா அல்-மஜ்மூஃ*). ப.ஆ., முஹம்மது நஜீப் அல்-முதீயி. 23 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்- அரபி, 1422/2003.

— *அல்-மின்ஹாஜ் பி ஷரஹ் சஹீஹ் முஸ்லிம் இப்னு அல்-ஹஜ்ஜாஜ்* (முஸ்லிமுடைய அல்-சஹீஹின் விரிவுரை). பெய்ரூட்: தார் இப்னு ஹஸம், 1423/2002.

அல்-நஸாயி, அஹ்மத் இப்னு ஷுஅய்ப், ஜலாலுத்தீன் அல்-சுயூதி, மற்றும் அபுல் ஹஸன் அல்-சிந்தி. *அல்-சுனன்.* (சுயூதி மற்றும் சிந்தியின் விரிவுரைகளுடன் நஸாயீயின் *அல்-சுனன்*). ப.ஆ., அப்துல் ஃபத்தாஹ் அபூ குத்தா. 9 தொகுதிகள். பெய்ரூத்: தார் அல்-பஷாயிர் அல்-இஸ்லாமியா, 1414/1993.

— *இஷ்ரத் அல்-நிஸாஃ.* ப.ஆ., மற்றும் விளக்கக் குறிப்புகள்: முஹம்மத் அலி குதுப். பெய்ரூத்: அல்-மக்தபா அல்-அஸ்ரிய்யா, 1424/2003.

அல்-புஹாரி, முஹம்மத் இப்னு இஸ்மாயீல். *சஹீஹ் அல்-புஹாரி.* ப.ஆ., முஸ்தஃபா திப் அல்-புகா. 7 தொகுதிகள். டமஸ்கஸ் மற்றும் பெய்ரூத்: தார் இப்னு கஸீர் மற்றும் அல்-யமாமா, 1414/1993.

— *அல்-அதப் அல்-முஃப்ரத்.* ப.ஆ., முஹம்மது ஃபுஆத் அப்த் அல்-பாகி. பெய்ரூத்: தார் அல்-பஷாயிர் அல்-இஸ்லாமிய்யா, 1417/1997.

அல்-மர்கினானி, புர்ஹானுத்தீன் அலீ இப்னு அபீ பக்கர் முஹம்மத் அப்துல் ஹை அல்-லக்னவி, மற்றும் அஹ்மத் இப்னு அலி இப்னு ஹஜர் அல்-அஸ்கலானி. *அல்-ஹிதாயா* (லக்னவியின் ஓரக் குறிப்பு களுடன் மர்கினானியின் அல்-ஹிதாயா, மற்றும் அதன் ஹதீஸ்கள் குறித்து இப்னு ஹஜர் அல்-அஸ்கலானியின் படைப்பான *அல்-திராயா ஃபீ முன்தஃகப் தஃக்ரீஜ் அஹாதீஸ் அல்-ஹிதாயா*). 4 தொகுதிகள். முல்தான், பாகிஸ்தான்: மக்தபா ஷிர்கா இல்மிய்யா, பு.பதி.

அல்-முத்தகி, அலாவுத்தீன் அலீ இப்னு ஹுஸாமுத்தீன் அல்-ஹிந்தி. *கன்ஸ் அல்-உம்மால் ஃபீ சுனன் அல்-அக்வால் வ அல்-அஃப்ஆல்.*

அல்-முபாரக்பூரி, முஹம்மது அப்துர் ரஹ்மான். *துஹ்ஃபத் அல்-அஹ்வாதி பி ஷரஹ் ஜாமிஃ அல்-திர்மிதி* (திர்மிதியின் *அல்-ஜாமிஃ அல்-சுனனின்* விரிவுரை). ப.ஆ., அலீ முஹம்மது மிஃவத் மற்றும் ஆதில் அஹ்மது. 10 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்-அரபி, 1421/2000.

அல்-லக்னவி, அப்துல் ஹை, மற்றும் முஹம்மத் இப்னு அல்-ஹஸன் அல்-ஷைபானி. *அல்-தஃலீக் அல்-முமஜ்ஜத் அலா முவத்தஃ முஹம்மத்* (முஹம்மத் இப்னு அல்-ஹஸன் அறிவித்தபடி மாலிகின் முவத்தா உடைய உரை. லக்னவியின் விரிவுரை அடியில் கொடுக்கப் பட்டுள்ளது). ப.ஆ., தகீயுத்தீன் அல்-நத்வி. 3 தொகுதிகள். பம்பாய்: தார் அல்-சுன்னா வ அல்-சீறா, மற்றும் டெமஸ்கஸ்: தார் அல்-கலம், 1412/1991.

அல்-ஜவ்ஸி, அபுல் ஃபராஜ் அப்துர் ரஹ்மான், *ஸைத் அல்-காதிர்.* ப.ஆ., அப்துர் ரஹ்மான் அல்-பர். ரியாத்: தார் அல்-யகீன் மற்றும் தார் அல்-கிப்லதைன், 1413/1993.

— *தல்பீஸ் இப்லீஸ்.* ப.ஆ., ரிழ்வான் ஜாமிஃ ரிழ்வான். கெய்ரோ: அல்-மக்தப் அல்-ஸிகஃபி, 1422/2001.

அல்-ஜவ்ஸிய்யா, முஹம்மத் இப்னு அபீ பக்கர் இப்னு அல்-கையூம். *அல்-திப் அல்-நபவி.* ப.ஆ., சையித் இப்ராஹீம். கெய்ரோ: தார் அல்-ஹதீஸ், 1411/1991.

— *ஸாத் அல்-மஆத் ஃபீ ஹதி ஃகைர் அல்-இபாத்.* ப.ஆ., மற்றும் விளக்கக்குறிப்பு: ஷுஅய்ப் அல்-அர்னாஊத் மற்றும் அப்துல் காதிர் அல்-அர்னாஊத். 6 தொகுதிகள். பெய்ரூத்: முஅஸ்ஸஸா அல்-ரிஸாலா, 1423/2002.

அல்-ஸாபிதி, முஹம்மத் இப்னு முஹம்மத் அல்-முர்தஸா, மற்றும் அபூ ஹாமித் அல்-கஸ்ஸாலி. *இத்ஹாஃப் அல்-சாதாத் அல்-முத்தகீன் பி ஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன்* (கஸ்ஸாலியின் *இஹ்யா உலூம் அல்-தீன்.* அடியில் ஸாபிதியின் விரிவுரை அச்சிடப்பட்டுள்ளது). 11 தொகுதிகள். பெய்ரூத்: தார் அல்-குதுப் அல்-இல்மிய்யா, 1422/2002.

அல்-ஸமஹ்ஷரி, மஹ்மூத் இப்னு உமர். *அல்-கஷ்ஷாஃப் அன் ஹகாயிக் அல்-தன்ஸீல் வ உயூன் அல்-அகாவில் ஃபீ வுஜூஹ் அல்-தஃவீல்* (ஸமஹ்ஷரியின் குர்ஆன் விரிவுரை. உடன் நஸீருத்தீன்

அல்-இஸ்கந்தரியின் ஓரக் குறிப்புகளான *கிதாப் அல்-இன்திஸாஃப் ஃபீ மா ததம்மனுஹ் அல்-கஷ்ஷாஃப் மின் அல்-இஃதிஸால்* என்பதும் அச்சிடப்பட்டுள்ளது.) ப.ஆ., மற்றும் விளக்கக் குறிப்புகள்: அப்துர் ரஸ்ஸாக் அல்-மஹ்தி. 4 தொகுதிகள். பெய்ரூத்: தார் இஹ்யா அல்-துராஸ் அல்- அரபி, 1421/2001.

அல்-ஷிர்பீனி, முஹம்மத் இப்னு அல்-கதீப், மற்றும் யஹ்யா இப்னு ஷரஃப் அல்-நவவி. *முக்னி அல்-முஹ்தாஜ் இலா மஆரிஃபா மஆனி அல்ஃபாஸ் அல்-மின்ஹாஜ்* (நவவியின் *மின்ஹாஜ் அல்-தாலிபீன்.* உடன் கதீப் அல்-ஷிர்பீனியின் விரிவுரை அடியில் அச்சிடப் பட்டுள்ளது). 4 தொகுதிகள். பெய்ரூத் தார் அல்-மஆரிஃபா, 1418/1997.

அல்-ஷைபானி, அஹ்மத் இப்னு ஹம்பல். *அல்-முஸ்னத்.* அம்மான்: பைத் அல்- அஃப்கார் அல்-துவாலிய்யா, பு.பதி.

அல்-ஷுருன்புலாலி, ஹஸன் இப்னு அம்மார். *இம்தாத் அல்-ஃபத்தாஹ் ஷரஹ் நூர் அல்-இதாஹ் வ நஜத் அல்-அர்வாஹ்* (உரைக்குக் கீழே, *நூர் அல்-இதாஹ் வ நஜத் அல்-அர்வாஹீற்கு* நூலாசிரியரே அளித்துள்ள விரிவுரை அச்சிடப்பட்டுள்ளது). ப.ஆ., மற்றும் விளக்கக் குறிப்புகள், பஷ்ஷர் பக்ரி அரபி. டெமஸ்கஸ்: வெளியீடு - பதிப்பாசிரியர், பு.பதி.

அல்-ஷுருன்புலாலி, ஹஸன் இப்னு அம்மார், மற்றும் அஹ்மத் இப்னு முஹம்மது அல்-தஹ்தாவி. *ஹாஷியா அல்-தஹ்தாவி அலா மராகி அல்-ஃபலாஹ் ஷரஹ் நூர் அல்-இதாஹ்* (ஷுருன்புலாலியே தனது *நூர் அல்-இதாஹ் வ நஜத் அல்-அர்வாஹீற்கு* அளித்துள்ள வரிகளுக்கு-இடையிலான விரிவுரை. அதன் கீழ் தஹ்தாவியின் விரிவுரை அச்சிடப்பட்டுள்ளது). ப.ஆ., முஹம்மத் அப்துல் அஸீஸ் அல்-காலிதி. பெய்ரூத்: தார் அல்-குதுப் அல்-இல்மிய்யா, 1418/1997.

அல்-ஹய்தமி, அஹ்மது ஷிஹாபுத்தீன் இப்னு ஹஜர். *அல்-ஃபதாவா அல்-ஹதீஸிய்யா.* கெய்ரோ: மக்தபா வ மத்பஆ முஸ்தஃபா அல்-பாபி அல்-ஹலபி வ அவ்லாதுஹு, 1409/1989.

— *கஃப் அல்-ராஅ அன் முஹர்ரமாத் அல்-லஹ்வ் வ அல்-சமாஃ* (ஹய்தமியின் *அல்-ஸவாஜிர் அன் இக்திராஃப் அல்-கபாயிர்,* மற்றும் *அல்-இஃலாம் பி கவதிஃ அல்-இஸ்லாம்*), 2 தொகுதிகள். கெய்ரோ: மக்தபா வ மத்பஆ முஸ்தஃபா அல்-பாபி அல்-ஹலபி வ அவ்லாதுஹு, 1398/1978.

இப்னு அபீ ஷைபா, அப்துல்லாஹ் இப்னு முஹம்மது. *அல்-முஸன்னஃப் ஃபீ அல்-அஹாதீஸ் வ அல்-ஆஸார்.* ப.ஆ., மற்றும் விளக்கக்குறிப்பு:

சயீது அல்-லஹ்ஹாம். 8 தொகுதிகள். பெய்ரூத்: தார் அல்-ஃபிக்ர், 1414/1994.

இப்னு ஆபிதீன், முஹம்மது அமீன், முஹம்மத் இப்னு அலீ-அல்-ஹஸ்கஃபி மற்றும் முஹம்மத் இப்னு அப்தில்லாஹ் அல்-துமுர்தாஷி. *ஹாஷியா ரத் அல்-முஹ்தார் அலா அல்-துர் அல்-முஹ்தார்.* இது துமுர்தாஷியுடைய தன்வீர் அல்-அப்ஸார் என்ற நூலுக்கு அளிக்கப் பட்டுள்ள வரிகளுக்கு-இடையிலான விரிவுரை. 8 தொகுதிகள். கராச்சி: எச்.எம். சயீது கம்பெனி, 1406/1986.

இப்னு கஸீர், இஸ்மாயீல் இப்னு கஸீர் அல்-திமஷ்கி. *தஃப்சீர் அல்-குர்ஆன் அல்-அழீம்.* 4 தொகுதிகள். டெமஸ்கஸ்: மக்தபா தார் அல்-ஃபய்ஹா, 1418/1998.

இப்னு குதாமா, முவஃப்பகுத்தீன் அப்துல்லாஹ் இப்னு அஹ்மது மற்றும் ஷம்ஸுத்தீன் இப்னு குதாமா. *அல்-முக்னி* (உடன் இப்னு குதாமா அல்-மக்திசியின் *அல்-ஷரஹ் அல்-கபீர்* அடியில் அச்சிடப் பட்டுள்ளது).

இப்னு குஸைமா, முஹம்மத் இப்னு இஸ்ஹாக் அல்-நைஷாபூரி, *அல்-சஹீஹ்.* ப.ஆ., முஹம்மது முஸ்தஃபா அல்-அஸமி. 4 தொகுதிகள். பெய்ரூத்: அல்-மக்தப் அல்-இஸ்லாமி, 1412/1997.

இப்னு நுஜைம், ஸைனுத்தீன் இப்னு இப்ராஹீம். *அல்-அஷ்பஹ் வ அல்-நஸாயிர் அலா மத்ஹப் அபீ ஹனீஃபா அல்-நுஃமான்.* பெய்ரூட்: தார் அல்-குதுப் அல்-இல்மிய்யா, 1413/1993. 12 தொகுதிகள். பெய்ரூத்: தார் அல்-கிதாப் அல்-அரபி, 1403/1983.

இப்னு ஹஸம், அலீ இப்னு அஹ்மது. *அல்-முஹல்லா.* ப.ஆ., ஹஸன் அப்துல் மன்னான். அம்மான்: பய்த் அல்-அஃப்கார் அல்-துவாலிய்யா, பு.பதி.

உஸ்மானி, முஹம்மது தகீ. *தக்மிலா ஃபத்ஹ் அல்-முல்ஹிம் பி ஷரஹ் சஹீஹ் அல்-இமாம் முஸ்லிம்* (முஸ்லிமுடைய அல்-சஹீஹின் விரிவுரை). 6 தொகுதிகள். டெமஸ்கஸ்: தார் அல்-கலம், 1427/2006.

— *உன்னத குர்ஆனின் பொருள்* (ஆங்.) (குர்ஆன் மொழிபெயர்ப்பு. உடன் மொழிபெயர்ப்பாளரின் விளக்கக் குறிப்புகள் உள்ளன). 2 தொகுதிகள். கராச்சி: மக்தபா மஆரிஃப் அல்-குர்ஆன், 2006.

— *ஒளிவீசும் பிரார்த்தனைகள்.* கராச்சி: இதாரத் அல்-மஆரிஃப், 1999.

உஸ்மானி, ஷப்பீர் அஹ்மது. *தஃப்சீர் உஸ்மானி* (குர்ஆன் விரிவுரை. உடன் மஹ்மூதுல் ஹஸனின் குர்ஆன் மொழிபெயர்ப்பு).

ப.ஆ., முஹம்மது வலீ ராஸி. 2 தொகுதிகள். கராச்சி: தார் அல்-இஷாஅத், 1993.

கனஆன், முஹம்மத் அஹ்மது. *உஸூல் அல்-முஆஷரா அல்-ஸவ்ஜிய்யா.* பெய்ரூத்: தார் அல்-பஷாயிர் அல்-இஸ்லாமிய்யா, 1419/1999.

தானவி, அஷ்ரஃப் அலி. *இம்தாத் அல்-ஃபதாவா.* ப.ஆ., முஹம்மது ஷாஃபி. 6 தொகுதிகள். கராச்சி: மக்தபா தார் அல்-உலூம்.

— *அல்-இஃபாதாத் அல்-யவ்மிய்யா மின் அல்-இஃபாதாத் அல்-கவ்மிய்யா.* ப.ஆ., மஹ்மூது அஷ்ரஃப் உஸ்மானி. 30 தொகுதிகள். முல்தான்: இதாரா தஃலிஃபதே அஷ்ரஃபிய்யா, 1423.

நாசிர், வலீயுர் ரஹ்மான், *கானூன்-ஏ-முபாஷராத்.* தில்லி: ஜாஸியம் புக் டிப்போ, 1993.

மாலிக் இப்னு அனஸ். *அல்-முவத்தஃ.* ப.ஆ., பஷ்ஷர் ஆவாத் மஃரூஃப். 2 தொகுதிகள். பெய்ரூத்: தார் அல்-கர்ப் அல்-இஸ்லாமி, 1417/1997.

முஹம்மது ஷாஃபி. *இம்தாத் அல்-முஃப்தீன்.* 2 தொகுதிகள். கராச்சி: தார் அல்-இஷாஅத், பு.பதி.

முஸ்லிம் இப்னு அல்-ஹஜ்ஜாஜ், மற்றும் யஹ்யா இப்னு ஷரஃப் அல்-நவவி. *சஹீஹ் முஸ்லிம்* (முஸ்லிமின் *அல்-சஹீஹ்*. நவவியின் விரிவுரையான *அல்-மின்ஹாஜ் பி ஷரஹ் சஹீஹ் முஸ்லிம் இப்னு அல்-ஹஜ்ஜாஜ்* அடிக்குறிப்பாக அச்சிடப்பட்டுள்ளது). ப.ஆ., முஹம்மது ஃபுஆத் அப்துல் பாகி. பெய்ரூத்: தார் இப்னு ஹஸம், 1423/2002.

மௌலானா நிஸாம், மற்றும் முகலாயப் பேரரசர் அவுரங்கஸீபின் மேற்பார்வையில் இந்தியத் துணைக்கண்டத்தின் ஒரு அறிஞர் குழு. *அல்-ஃபதாவா அல்-ஹிந்திய்யா / அல்-ஆலம்கீரிய்யா* (*ஃபதாவா காழிகான்* மற்றும் *ஃபதாவா பஸ்ஸாஸிய்யா*வும் சேர்த்து அச்சிடப் பட்டுள்ளன). 6 தொகுதிகள். குவெட்டா, பாகிஸ்தான்: மக்தபா மஜ்திய்யா, 1403/1983.

ரஹ்மானி, காலித் சைஃபுல்லாஹ். *ஜதீத் ஃபிக்ஹி மஸாயில்.* இரு தொகுதிகள். லாஹூர்: புராக்ரஸ் புக்ஸ், 1404/1984.

ஷாஹ், அஃப்தாப் அஹ்மது. *அதப்-ஏ-முபாஷராத்.* கராச்சி: குதுப் கானா மஸாரி, திருத்தப்பட்ட இரண்டாம் பதிப்பு, பு.பதி.

# சுட்டி

ஐ௸

இணக்கமான, மகிழ்ச்சியான, நீடித்த மணவாழ்விற்கு பாலியல் ஆசைகளும் அவற்றின் நிறைவேற்றமும் இன்றியமையாதவை. எனினும், இன்றைய சமுதாயத்தில், பாலியல் எல்லைக்கோடுகள் மென்மேலும் நீட்சிசெய்யப்பட்டு, பெரும்பாலும் வெளிப்படையாகவே பாலியல் தவறுகள் நடைபெறுகின்றன. இதுபோன்ற சூழ்நிலைகளில், எந்தெந்த பாலியல் செயல்பாடுகள் ஷரீஆவினால் அனுமதிக்கப்பட்டவை, எவை அனுமதிக்கப்படாதவை என்பதை இனங்காணுவதன் தேவை உள்ளது.

உடலுறவு: ஓர் இஸ்லாமியக் கையேடு, நுட்பவுணர்வுள்ள பாலுறவு பற்றிய ஐயங்களுக்குத் தெளிவாகவும் தீர்க்கமாகவும் விடையளிக்க முனைகிறது. நூலாசிரியர் அதில் கண்ணியமான மொழியைப் பயன்படுத்தியுள்ள அதேவேளை, நுட்பமான விஷயங்களைக் கலந்துரையாடுவதிலிருந்து வெட்கி ஒதுங்குவதில்லை. ஒருவர் தன் துணைவருடன் ஈடுபடும் உடலுறவுச் சந்திப்புகள் குறித்து இஸ்லாம் வழங்கும் வழிகாட்டுதலையும் துல்லியமான விவரங்களையும் அவர் ஆதாரங்களுடன் பதிவுசெய்கிறார். இந்தப் புத்தகம் விரிவான பல பிரச்சினைகளை அலசுகிறது; இதன் மூலம், பாலியல் நெருக்கம் குறித்து அடிக்கடி கேட்கப்படும் பல வினாக்களுக்குப் பதிலளிக்கிறது. இறுதியாக, முதலிரவில் புதுத் தம்பதியர் பின்பற்றவேண்டிய இஸ்லாமிய ஒழுங்குகள், பழக்கங்கள் குறித்துப் பேசும் ஒரு சிறிய பாடத்துடன் நிறைவுபெறுகிறது.



'இந்தப் படைப்பு நலன்பயப்பதாகவும் மிகுந்த தகவல் பொதிந்ததாகவும் இருப்பதை நான் காண்கிறேன். வருங்கால தம்பதிகள் அனைவரும் - ஏன், நிகழ்கால தம்பதிகளும்கூட, வாசிக்கவேண்டிய நூல்.'

முஃப்தி ஸுபைர் பையாத்,
இயக்குநர், தாருல் இஹ்ஸான் மையம், டர்பன், தென் ஆப்பிரிக்கா

'தம்பதியர் பலரும் விழிப்புணர்வின்றி இருக்கும் முக்கியமான, நுட்பமிக்க ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசும் இந்த நூல் அருமையானது; நம் வீடுகளில் இருக்கவேண்டியது.'

ஷெய்கு ஃபரஸ் ரப்பானி,
www.seekersguidance.com

'இந்நூல் அண்மைக் காலத்தில் தோன்றிய பாலுறவு உளவியல் மருத்துவத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது. ஆகவே அறிஞர்கள், மருத்துவர்கள், உளவியல் பாலுறவு சுகாதார சிகிச்சையில் ஈடுபட்டுள்ளவர்கள், தம்பதியர்கள் ஆகிய அனைவருக்கும் தேவையான ஓர் அவசியமான வழிகாட்டி எனலாம்.'

டாக்டர் காலித் கஃபூர், அறுவைசிகிச்சை மருத்துவர்,
டாக்டர் ஸாஹித் கஃபூர், பொதுமருத்துவர்

மாற்றுப் பிரதிகள்

ISBN 978 81 908551 8 1
9 788190 855181 >

₹ 120